# முகவுரை.

ஸ்ரீ பகவான் யுகந்தோறும் காலக்கிரமத்தில் தர்மம் குன்றி அதர்மம் மேலிட்டு நிற்கும் தருணத்தில் திருவவதாரம்செய்து ஜனங்களுக்கு தர்மோபதேசம் பண்ணி நன்னெறியை விளக்குகிறுனென்பது நமது ஆரியமதக்கொள்கை. துவாபரயுக முடிவில் (கலியுகம் ஆரம்பமாகும் தருணத்தில்) அவர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியாய் அவதரித்து அர்ஜுனனை முன்னிட்டு உலகத்தவர்க்கு உபதேசித்த அருமையான சாஸ்திர ரஹஸ்யங்களடங்கியது பகவத் கீதையாகும். இது நாம் நன்னெறிப்பட்டு உய்யும் மார்க்கத்தை விளக்குகின்றது. இஃது எல்லாச் சாஸ்திரார்த்தங்களும் ஆரியமத ரஹஸ்யங்களு மடங்கியது—வேதம், வேதாங்கம், ஆகமம், இதிஹாஸம், புராணம் ஆகிய இவற்றின் ஸாரமனைத்தும் பொதிந்துள்ளது. கலியுகத்தில் நாம் அநுஸரிக்கவேண்டிய கொள்கைகளும் ஆசாரங்களும் இதனில் தெளிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. இக்காலத்தில் ஆரியர் அநுஸரிக்கவேண்டிய புது ஸித்தாந்தம் (New Testament) இதுவேயாகும்; இதன் பூர்வ பாகமான பழைய ஸித்தாந்தம் (Old Testament) உபநிஷத்துக்கள் முதலியனவாம்.

ஆரியரனைவரும் அநுஸரிக்கவேண்டிய மதக்கிரந்தமிதுவே எனத்தெரிந்து ஆரியமத ஆசாரியகளெல்லோரும் தத்தம் சிஷ்யர்களுக்கு இதனிலடங்கிய கருத்துக்களை விளக்கி பாஷ்யங்கள் எழுதியிருக்கிறுர்கள். இந்தபாஷ்யங்கள் ஸம்ஸ்கிருத பாஷையில் இருப்பதனாலும் அவற்றை எல்லோரும் படித்துத்தெரிந்துகொள்வது பிரயாசையாயிருப்பதனாலும் இப்பொழுது தமிழர்களின் உபயோகத்திற்காக ஷை பாஷ்யங்களின் தாற்பரியங்களைச் சுருக்கி வெவ்வேறு பகுதிகளாக ஒவ்வொரு சுலோகத்தின் பொழிப்

புரையின் கீழெழுதி இந்தப்புத்தகத்தை வெளியாக்கினேன். அருமையும் பெருமையும் வாய்ந்த பகவத்கீதையையும் அதனை விளக்கி மகான்களெழுதிய வியாக்கியானங்களையும் தமிழிற் சுருக்கியெழுதுவதில் நேர்ந்திருக்கக்கூடிய பிழைகளையும் குறைகளையும் கல்விமான்கள் பொறுத்தருளவேண்டுகிறேன்.

இந்தப்புத்தகத்தின் முதல் நான்கு அத்தியாயங்களும் ஐந்தாம் அத்தியாயத்தில் 22 சுலோகங்களும் சென்னப்பட்டணத்திற் பிரசுரமாகி வந்த ஞானபோதினி என்னும் மாதாந்தரத் தமிழ் பத்திரிகையின் வாயிலாய்ச் சிறிது சிறிதாக வெளிப்போந்தன. இவற்றை வாசித்த நண்பர்கள் பலரின் வேண்டுகோட்கிணங்கி மற்றைப் பகுதியையும் எழுதிப் புத்தகமாய் அச்சிடலானேன்.

1906ஆு
மேமீ 21உ
பராபவ ஆு
வைகாசிமீ அஉ

தி. அ. ஸ்வாமிநாத ஐயர்,
"ஆரியா" பத்திராதிபர், சென்னை.



𑍐

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

---

𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌧𑍍𑌯𑌾𑌨𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌃.

𑌵𑌂𑌦𑍇 𑌗𑍁𑌰𑍂𑌣𑌾𑌂 𑌚𑌰𑌣𑌾𑌰𑌵𑌿𑌂𑌦𑍇
𑌸𑌂𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌸𑍁𑌖𑌾𑌵𑌬𑍋𑌧𑍇 ।
𑌜𑌨𑌸𑍍𑌯 𑌯𑍇 𑌜𑌾𑌂𑌗𑌲𑌿𑌕𑌾𑌯𑌮𑌾𑌨𑍇
𑌸𑌂𑌸𑌾𑌰𑌹𑌾𑌲𑌾𑌹𑌲𑌮𑍋𑌹𑌶𑌾𑌂𑌤𑍍𑌯𑍈 ॥

𑌵𑌂𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌦𑌦𑍍𑌵𑌂𑌦𑍍𑌵𑌮𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑌸𑌗𑍋𑌚𑌰𑌂 ।
𑌰𑌕𑍍𑌤𑌶𑍁𑌕𑍍𑌲𑌪𑍍𑌰𑌭𑌾𑌮𑌿𑌶𑍍𑌰𑌮𑌤𑌰𑍍𑌕𑍍𑌯𑌂 𑌤𑍍𑌰𑍈𑌪𑍁𑌰𑌂𑌮𑌹𑌃 ॥

𑌅𑌨𑍁𑌸𑌂𑌧𑍇𑌯𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌃.

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌪𑍀𑌠𑌿𑌕𑌾.

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌂𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌂 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌂𑌤𑌾𑌂 𑌵𑌂𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌂𑌪𑌰𑌾𑌮𑍍 ॥ ௧ ॥
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌸𑌮𑌾𑌰𑌂𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌂 ।
𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌵𑌲𑍍𑌲𑌭𑌪𑌰𑍍𑌯𑌂𑌤𑌾𑌂 𑌵𑌂𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌂𑌪𑌰𑌾𑌮𑍍 ॥ ௨ ॥

𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌸𑌂𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌾𑌨𑍁𑌗𑍁𑌣𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌂
𑌪𑌰𑌾𑌨𑍁 𑌸𑌂𑌧𑌾𑌨𑌾𑌨𑌂𑌤𑌰𑌂 𑌅𑌨𑍁𑌸𑌂𑌧𑍇𑌯

𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰 𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌃.

𑌶𑍁𑌕𑍍𑌲𑌾𑌂𑌬𑌰𑌧𑌰𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌶𑌶𑌿𑌵𑌰𑍍𑌣𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑍁𑌜𑌂 ।
𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌵𑌦𑌨𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌘𑍍𑌨𑍋𑌪𑌶𑌾𑌂𑌤𑌯𑍇 ॥ ௩

யஸ்ய த்விரத வக்த்ராத்யா: பாரிஷத்யா: பரஶ்ஶதம் ।
விக்நம் நிக்நந்தி ஸததம் விஷ்வக்ஸேநம் தமாஶ்ரயே ॥ ௪ ॥
[illegible] ।
உபப்ரும்ஹிதவேதாய நமோ வ்யாஸாய விஷ்ணவே ॥ ௫ ॥
வ்யாஸம் வஸிஷ்ட நப்தாரம் ஶக்தே: பௌத்ரமகல்மஷம் ।
பராஶராத்மஜம் வந்தே ஶுகதாதம் தபோநிதிம் ॥ ௬ ॥
வ்யாஸாய விஷ்ணுரூபாய வ்யாஸரூபாய விஷ்ணவே ।
நமோ வை ப்ரஹ்மநிதயே வாஸிஷ்டாய நமோ நம: ॥ ௭ ॥
முநிம் ஸ்நிக்தாம்புஜாபாஸம் வேதவ்யாஸமகல்மஷம் ।
வேதவ்யாஸம் ஸரஸ்வத்யா வாஸம் வ்யாஸம் நமாம்யஹம் ॥ ௮ ॥
அசதுர்வதநோ ப்ரஹ்மா த்விபாஹுரபரோ ஹரி: ।
அபாலலோசந: ஶம்பு: பகவாந் பாதராயண: ॥ ௯ ॥
க்ருஷ்ணம் கமலபத்ராக்ஷம் புண்யஶ்ரவண கீர்தநம் ।
வாஸுதேவம் ஜகத்யோநிம் நௌமி நாராயணம் ஹரிம் ॥ ௧௦ ॥
க்ருஷ்ணாய யாதவேந்த்ராய ஜ்ஞாநமுத்ராய யோகிநே ।
நாதாய ருக்மிணீஶாய நமோ வேதாந்த வேதிநே ॥ ௧௧ ॥
ப்ரபந்நபாரிஜாதாய தோத்ரவேத்ரைகபாணயே ।
ஜ்ஞாநமுத்ராய க்ருஷ்ணாய கீதாம்ருததுஹே நம: ॥ ௧௨ ॥
[illegible] கீதாம்ருதம் ததௌ ।
லோகத்ரயோபகாராய தஸ்மை க்ருஷ்ணாத்மநே நம: ॥ ௧௩ ॥
ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா கோபாலநந்தந: ।
பார்தோ வத்ஸஸ்ஸுதீர்போக்தா துக்தம் கீதாம்ருதம் மஹத் ॥
பார்தாய ப்ரதிபோதிதாம் பகவதா நாராயணேந ஸ்வயம்
வ்யாஸேந க்ரதிதாம் புராணமுநிநா [illegible] மஹாபாரதம் ।

சுமெதாரீத வஷிணீம் ஹமவதீஷோடஶாய்ராய நீ
ஶம்பகாரநஸம்ஶயாஶி ஹமவதீதெ ஹவமெசஷிணீழ ॥ கரு॥
ஸ்ரீதாராஸ்ரித்வம் வண்ணீம் யஶேவமெஸவயதஶ்வரோ ।
விஷ்ணுஶ்வஷ ஶவாஷோதி ஹயமோராகாஷி வஜீத: ॥ கசு॥
ஶாரதாரீதவஷவஷம் விஷ்ணுவக்ஷாஷிநிஷ்ருதம் ।
ஸ்ரீதா மம்ராஷகம்வீகா வநஜ நூநவிஷ்ரதெ ॥ கஎ॥
ஸ்ரீதாஸஸ்ரீதாஃகதவ்ரா: கிஶமெநூஷாஸம்ரமெஹ:
யாவயம்வஜநாஸஸ்ர ஶவஷூஷிநிஸ்ருதா: ॥ கஅ॥
ஸ்ரீதாய்யநஶீவஸ்ர வராணாயாஶ வாரஸ்ருஷ ।
மெநஸ்ம்திஷிவாவாநி வஷவஜநூகருதாநூஷி ॥ கசூ॥
கக்ருத்ஶேவிகவரணெ ஹஞ்ஜாமெநாவா யதஷ்த: ।
வொரம்மெவவதஷ்யநம் ஸ்ரீதாய்ராயீ நவஸஷ்தி ॥ உ0॥
ஶஷிமெஶரவநம்வம்ஸாரம் ஜஷாநம்ஷிமெநஷிமெந ।
ஸக்ரூதீதாம்ஹவஹிநாநம் ஸம்ஸாரஶஷமொஶவநழ ॥ உக॥
ஶ்ரோகமெகம்தஷயம்வா வாஷம்வாஷாயமெஶவவா ।
நித்ரம்வம்திஹக்ராய ஷமொக்ஷயஷி முக்தி ॥ உஉ॥
ஸவமுராஸ்ரஶயீமிதா ஸவமெவஷஶமொஹாமி: ।
ஸவதீயுஶயீமம்மா ஸவயஶமொஶயாஶந: ॥ உந॥

வஷகம்ஸ்ராஸம்மெஷவகீவத்ர ஸ்ரீதம்
வஷிகாமெஷமொமெஷவகீவத்ரவஷவ ।
வஷமெகாஶமெஞ்ஜ்ரமெஷவகீவத்ரநாஶ
கஶுரமெவ்ரவம்மெஷவகீவத்ரமெஸவா ॥ உச॥

இதி ஸ்ரீஹமவதீதாராஷாத்ரம்
ஸம்பூர்ணம்.

## 𑌅𑌥𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌮𑌹𑌾𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌨𑍍𑌯𑌾𑌸𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃

𑌅𑌥 𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 ॥ 𑌅𑌸𑍍𑌯𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌹𑌾𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯-𑌶𑍍𑌰𑍀𑌵𑍇𑌦𑌵𑍍𑌯𑌾𑌸𑍋 𑌭𑌗𑌵𑌾𑌨𑍃𑌷𑌿𑌃 - 𑌅𑌨𑍁𑌷𑍍𑌟𑍁𑌪𑍍𑌛𑌨𑍍𑌦𑌃 - 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌃𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌦𑍇𑌵𑌤𑌾-𑌅𑌶𑍋𑌚𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌵𑌶𑍋𑌚𑌸𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌬𑍀𑌜𑌂-𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯𑌮𑌾𑌮𑍇𑌕𑌂𑌶𑌰𑌣𑌂𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑌿𑌶𑌕𑍍𑌤𑌿𑌃-𑌅𑌹𑌂𑌤𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿𑌮𑌾𑌶𑍁𑌚 𑌇𑌤𑌿𑌕𑍀𑌲𑌕𑌮𑍍 । 𑌨𑍈𑌨𑌂𑌛𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌨𑍈𑌨𑌂𑌦𑌹𑌤𑌿𑌪𑌾𑌵𑌕𑌃 𑌇𑌤𑌿𑌕𑌵𑌚𑌮𑍍 । 𑌕𑌿𑌰𑍀𑌟𑌿𑌨𑌂𑌗𑌦𑌿𑌨𑌂𑌚𑌕𑍍𑌰𑌹𑌸𑍍𑌤𑌮𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑍍 । 𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑌨𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌮𑌿𑌤𑌿𑌧𑍍𑌯𑌾𑌨𑌮𑍍॥𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑍇𑌨𑌭𑌗𑌵𑌦𑌾𑌰𑌾𑌧𑌨𑌾𑌰𑍍𑌥𑍇𑌗𑍀𑌤𑌾𑌪𑌾𑌰𑌾𑌯𑌣𑍇𑌜𑌪𑍇𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌅𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃। 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍇𑌮𑍋𑌕𑍍𑌷𑌦𑌾𑌯𑌤𑌰𑍍𑌜𑌨𑍀𑌭𑍍𑌯𑌾𑌂𑌨𑌮𑌃- 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍇𑌵𑍇𑌦𑌵𑍍𑌯𑌾𑌸𑌾𑌯𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌭𑍍𑌯𑌾𑌂𑌨𑌮𑌃-𑌬𑌲𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 𑌬𑌲𑌭𑌦𑍍𑌰𑌾𑌯𑌅𑌨𑌾𑌮𑌿𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌂𑌨𑌮𑌃- 𑌤𑍇𑌜𑌸𑌾𑌤𑍍𑌮𑌨𑍇𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌯𑌕𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌂𑌨𑌮𑌃-𑌵𑌿𑌜𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍇𑌗𑌾𑌣𑍍𑌡𑍀𑌵𑌧𑌨𑍍𑌵𑌨𑍇 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌾𑌯 𑌕𑌰𑌤𑌲𑌕𑌰𑌪𑍃𑌷𑍍𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌂𑌨𑌮𑌃-𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑍇𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌹𑍃𑌦𑌯𑌾𑌯𑌨𑌮𑌃 - 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍇𑌮𑍋𑌕𑍍𑌷𑌦𑌾𑌯𑌶𑌿𑌰𑌸𑍇𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 ॥ 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍇𑌵𑍇𑌦𑌵𑍍𑌯𑌾𑌸𑌾𑌯𑌶𑌿𑌖𑌾𑌯𑍈𑌵𑌷𑌟𑍍 - 𑌬𑌲𑌾𑌤𑍍𑌮𑌨𑍇𑌬𑌲𑌭𑌦𑍍𑌰𑌾𑌯𑌕𑌵𑌚𑌾𑌯𑌹𑍁𑌂-𑌤𑍇𑌜𑌸𑌾𑌤𑍍𑌮𑌨𑍇𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌯𑌨𑍇𑌤𑍍𑌰𑌤𑍍𑌰𑌯𑌾𑌯𑌵𑍌𑌷𑌟𑍍-𑌵𑌿𑌜𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 𑌗𑌾𑌣𑍍𑌡𑍀𑌵𑌧𑌨𑍍𑌵𑌨𑍇𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌾𑌯𑌵𑍀𑌰𑌾𑌯𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌯𑌫𑌟𑍍 - 𑍐 𑌭𑍂𑌰𑍍𑌭𑍁𑌵𑌸𑍍𑌸𑍁𑌵𑌰𑍋𑌮𑌿𑌤𑌿𑌦𑌿𑌗𑍍𑌬𑌨𑍍𑌧𑌃 ॥

த்யாபோ ந சோஷயதி மாருத இதி தர்ஜநீப்யாம் நம: ।
அச்சேத்யோऽயம் அதாஹ்யோऽயம் அக்லேத்யோऽசோஷ்ய ஏவ ச
இதி மத்யமாப்யாம் நம: । நித்ய: ஸர்வகத: ஸ்தாணுரச
லோऽயம் ஸநாதந இத்யநாமிகாப்யாம் நம: । நாநாவிதா
நி திவ்யாநி நாநாவர்ணாக்ருதீநி சேதி கரதலகரப்ருஷ்டா
ப்யாம் நம: ॥ இதி கரந்யாஸ: ॥

## அத ஹ்ருதயாதிந்யாஸ: ॥

நைநம் சிந்தந்தி சஸ்த்ராணி நைநம் தஹதி பாவக இதி ஹ்ருதயாய நம: । ந சைநம் க்லேதயந்த்யாபோ ந சோஷயதி மாருத இதி ஶிரஸே ஸ்வாஹா । அச்சேத்யோऽயமதாஹ்யோऽயம் அக்லேத்யோऽசோஷ்ய ஏவ சேதி ஶிகாயை வஷட் । நித்ய: ஸர்வகத: ஸ்தாணுரசலோऽயம் ஸநாதந இதி கவசாய ஹும் । பஶ்ய மே பார்த்த ரூபாணி ஶதஶோऽத ஸஹஸ்ரஶ இதி நேத்ரத்ரயாய வௌஷட் । நாநாவிதாநி திவ்யாநி நாநாவர்ணாக்ருதீநி சேதி அஸ்த்ராய பட் । பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்த: । ஓம் ஶ்ரீக்ருஷ்ணப்ரீத்யர்த்தே கீதாபாராயணே ஜபே விநியோக: ॥

## த்யாநம்.

பார்த்தாய ப்ரதிபோதிதாம் பகவதா நாராயணேந ஸ்வயம்
வ்யாஸேந க்ரதிதாம் புராணமுநிநா மத்யே மஹாபாரதம் ।
அத்வைதாம்ருதவர்ஷிணீம் பகவதீம் அஷ்டாதஶாத்யாயிநீம்
அம்ப த்வாமநுஸந்ததாமி பகவத்கீதே பவத்வேஷிணீம் ॥

நமோऽஸ்து தே வ்யாஸ விஶாலபுத்தே
ஃபுல்லாரவிந்தாயதபத்ரநேத்ர ।
யேந த்வயா பாரததைலபூர்ண:
ப்ரஜ்வாலிதோ ஜ்ஞாநமய: ப்ரதீப: ॥

ப்ரபந்நபாரிஜாதாய தோத்ரவேத்ரைகபாணயே ।
ஜ்ஞாநமுத்ராய க்ருஷ்ணாய கீதாம்ருததுஹே நம: ॥

வாசக: ப்ரணவோ யஸ்ய [illegible] ஜகத: ।
ஶ்ருதிராஜ்ஞாவசோ ஜ்ஞாநம் தம் வந்தே தேவகீஸுதம் ॥

ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா கோபாலநந்தந: ।
பார்தோ வத்ஸ: ஸுதீர்போக்தா துக்தம் கீதாம்ருதம் மஹத் ॥

வஸுதேவஸுதம் தேவம் கம்ஸசாணூரமர்தநம் ।
தேவகீபரமாநந்தம் க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும் ॥

பீஷ்மத்ரோணதடா ஜயத்ரதஜலா காந்தாரநீலோத்பலா
ஶல்யக்ராஹவதீ க்ருபேண வஹநீ கர்ணேந வேலாகுலா ।
அஶ்வத்தாமவிகர்ணகோரமகரா துர்யோதநாவர்திநீ
ஸோத்தீர்ணா கலு பாண்டவை ரணநதீ கைவர்தக: கேஶவ: ॥

பாராஶர்யவச:ஸரோஜமமலம் கீதார்தகந்தோத்கடம்
நாநாக்யாநககேஸரம் ஹரிகதாஸம்போதநாபோதிதம் ।
லோகே ஸஜ்ஜநஷட்பதைரஹரஹ: பேபீயமாநம் முதா
பூயாத்பாரதபங்கஜம் கலிமலப்ரத்வம்ஸி ந: ஶ்रேயஸே ॥

ஓம்.

ஓம் ஸத்குரவேநமః

# ஸ்ரீபகவத்கீதை

## மாஹாத்மியம்.

### பூதேவி சொல்லியது.

௧. ஓ ஸ்வாமி! பிராரப்த கர்மப்பயனை யனுபவித்துக்கொண்டிருக்கும் மனிதர்களுக்கு உங்களிடத்திற் சஞ்சலமில்லாத பக்தி யெப்படி யுண்டாகும்?

### ஸ்ரீமகாவிஷ்ணு சொல்லியது.

௨. பிராரப்த கர்மப்பயனை யனுபவித்துக்கொண்டிருப்பவனாயினும், ஸ்ரீ பகவத்கீதையை யெப்பொழுதும் சிரத்தையுடன் பாராயணஞ் செய்கிறவன்முக்திபெறுவான், சுகமடைவான், பூலோகத்திற் செய்யப்படும் கர்மங்களினாற் கட்டுப்படான்.

௩. மகா பாபங்களைச் செய்தவனாயினும், ஸ்ரீ பகவத்கீதையைப் பாராயணஞ் செய்தால், தாமரையிலையில் ஜலம் ஒட்டாததுபோல, பாபங்கள் அவனை யொருபொழுதும் அணுகா.

௪. ஸ்ரீ பகவத்கீதை இருக்கு மிடத்திலும், அதைப் பாராயணஞ் செய்யுமிடத்திலும், பிரயாகை முதலிய புண்ணிய தீர்த்தங்களெல்லா மிருக்கின்றன.

௫. அந்த இடத்திலேயே, ஸமஸ்த தேவதைகளும், ருஷிகளும், யோகிகளும், தேவஸர்ப்பங்களும், கோபால

கோபிகைகளும், வைகுண்ட துவாரபாலர்களும், நாரத மகாமுனியும், உத்தவரும், சகாயர்களா யிருப்பார்கள்.

௬. ஓ பூதேவீ! கீதாசாஸ்திரத்தைப் படிக்கும் இடத்திலும், அதன் அர்த்தவிசாரம் செய்யும் இடத்திலும், அதனை உபதேசிக்கும் இடத்திலும், கேட்கும் இடத்திலும் நான் சித்தமாயிருப்பேன்.

௭. ஸ்ரீ பகவத்கீதையே எனக்கு ஆசிரயம்; அந்தக் கீதையே என்னுடைய இருப்பிடம். கீதாசாஸ்திரத்தை யாசிரயித்ததனாலேதான், மூன்றுலோகங்களையும் நான் பரிபாலனஞ் செய்கிறேன்.

௮. இந்தக் கீதாசாஸ்திரத்திற் சொல்லப்பட்டவிஷயமானது மிக மேலான வித்தை. இது நித்தியமானது, பிரம்மஸ்வரூபமானது, நாசமில்லாதது. இது மோக்ஷவித்தையென்பதற்குச் சந்தேகமேயில்லை.

௯. இந்த வித்தையையே ஸ்ரீகிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்கு உபதேசித்தார். கீதாசாஸ்திரமானது மூன்றுவேதங்களின் ஸ்வரூபமாயும், பரமாநந்த ஸ்வரூபமாயுமுள்ளது; தத்துவஜ்ஞானத்தைப் போதிக்கின்றது.

௰. எவனொருவன் தினந்தோறும் சஞ்சலமில்லாத மனதுள்ளவனாய், கீதாசாஸ்திரத்தின் பதினெட்டு அத்தியாயங்களையும் பாராயணம் செய்கிறானோ, அவன் பிரம்மஜ்ஞானம்பெற்று, அதன்மூலமாய் மோட்சமடைவான்.

௰க. ஸ்ரீ கீதாசாஸ்திரத்தைத் தினந்தோறும் பூர்த்தியாய்ப் பாராயணம்செய்யச் சாமர்த்தியமில்லாமல் அதிற் பாதியைப் பாராயணம் செய்கிறவனுக்கு, கோதானஞ் செய்த புண்ணியப் பயன் கிடைக்குமென்பதிற் சந்தேகமில்லை.

௰உ. கீதாசாஸ்திரத்தில் மூன்றிலொருபாகத்தைத் தினப்படி பாராயணம் செய்கிறவனுக்குக் கங்காஸ்நான

புண்ணியப்பயன் சித்திக்கும். அதிற் பாதியைப் பாராயணம் செய்கிறவனுக்கு அக்கினிஷ்டோமம் என்னும் யாகம் செய்த புண்ணியப்பயன் கிடைக்கும்.

௰௩. பக்தியுடன் தினந்தோறும் ஓர் அத்தியாயத்தைப் பாராயணஞ்செய்கிறவன் ருத்திரலோகமடைந்து அங்கே பிரமதகணங்களுடன் கூடியிருப்பான்.

௰௪. ஓர் அத்தியாயத்தில் நான்கிலொருபாகத்தை எவனொருவன் பிரதிதினமும் பாராயணஞ்செய்கிறானோ அவன் பூலோகத்தில் ஒரு மந்வந்தரகாலம் * சிரஞ்சீவியாயிருப்பான்.

௰௫. கீதாசாஸ்திரத்திற் பத்து சுலோகங்களாவது, ஏழு, ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு சுலோகங்களாவது, தினப்படி பாராயணம் செய்கிறவன்,

௰௬. சந்திரலோகத்தைச்சேர்ந்து, அங்கே நிச்சயமாய்ப் பதினாயிர வருஷகாலம் ஜீவித்திருப்பான். கீதாசாஸ்திரத்தைத் தவறாமற் பாராயணம்செய்து வந்தவன் இறந்துபோனால், அவனுக்குத் தேவஜன்மம் கிடைக்கும்.

௰௭. ஸ்ரீபகவத்கீதா சாஸ்திரத்தைப் பாராயணஞ்செய்கிறவன் உத்தமமான மோட்சத்தையடைவான். மரணகாலத்திற் கீதையை ஸ்மரிக்கிறவன் உத்தமமான கதியையடைவான்.

௰௮. கீதாசாஸ்திரத்தைக்கேட்கவிருந்த ஆசையுள்ளவன் மகா பாபியாயிருந்தாலும் வைகுண்ட லோகத்தில் ஸ்ரீமகாவிஷ்ணுவுடன்கூடி யாநந்திப்பான்.

௰௯. பிரதிதினமும் நித்திய நைமித்திக கர்மங்களைக் கிரமமாய்ச் செய்துகொண்டு, எவனொருவன் கீதாசாஸ்தி

* 4,320,000 வருஷங்களடங்கியது ஒரு மகாயுகமெனப் பெயர். 71 மகாயுகங்கள் கொண்டது ஒரு மந்வந்தரம் (மநுவின் காலம்).

ரார்த்தத்தைத் தியானம்செய்கிறானோ, அவன் ஜீவன் முக்தனாய், இந்த ஸ்தூலதேகத்தை விட்டபிறகு மோட்சமடைவான்.

உ௰. ஜனகர் முதலான அநேக அரசர்கள் கீதாசாஸ்திரத்தை யாசிரயித்து, ஸமஸ்தபாபங்களையும் போக்கடித்துக்கொண்டு, உலகத்திற் பெருங்கீர்த்திபெற்று, மோட்சத்தையு மடைந்தார்கள்.

உக. இந்தக் கீதாமாகாத்மியத்தை விட்டுவிட்டு, கீதாசாஸ்திரத்தைமாத்திரம் பாராயணம் செய்கிறவர்களுக்குச் சாஸ்திரோக்தமான பயன் கிடைக்காது, சரீரப்பிரயாஸைதான் லாபம்.

உஉ. இந்தக் கீதாமாகாத்மியத்துடன்கூட கீதாசாஸ்திரத்தையும் பாராயணம் செய்கிறவர்கள் மேற்சொல்லிய பயன்களையும் மோட்சத்தையு மடைவார்கள்.

ஸூதமுனிவர் சொல்லியது.

உங. நான் சொல்லிய புராதனமான இந்தக் கீதாமாகாத்மியத்தைக் கீதாசாஸ்திரபாராயணம் செய்த பிறகு எவனொருவன் பாராயணஞ்செய்கிறானோ, அவன் அப் பயன்களை யனுபவிப்பானாக.

வராகபுராணத்திற் சொல்லப்பட்டிருக்கும் ஸ்ரீகீதாசாஸ்திர மாகாத்மியம் முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து.



ஸ்ரீ

க்ருஷ்ணாயநம:

# ஸ்ரீ பகவத்கீதை.

## முதல் அத்தியாயம்.

## அர்ச்சுன விஷாதயோகம்.

### த்ருதராஷ்டிரர் சொல்லியது.

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: ।
மாமகா: பாண்டவாஶ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய ॥

க. ஓ ஸஞ்சயா! புண்ணிய பூமியான குருக்ஷேத்திரத்தில் * யுத்தஞ்செய்ய ஆசை கொண்டவர்களாய்ச் சேர்ந்த என் புத்திரர்களாகிய துரியோதனாதிகளும், பாண்டுவின் மக்களாகிய தர்மராஜாதிகளும் என்ன செய்தார்கள்?

### ஸஞ்சயன் சொல்லியது.

த்ருஷ்ட்வா து பாண்டவாநீகம் வ்யூடம் துர்யோதநஸ்ததா ॥
ஆசார்யமுபஸங்கம்ய ராஜா வசநமப்ரவீத் ॥

உ. அரசனாகிய துரியோதனன், வ்யூகங்களாய் ஏற்படுத்தப்பட்டிருந்த பாண்டவர்களின் சேனையைப் பார்த்து, அப்பொழுது, துரோணாசாரியரிடம் சென்று, பின் வருமாறு சொன்னான்:

---

* இது பஞ்சாப் தேசத்தில் பானிபட் என்னும் ஊருக்குச் சமீபத்திலுள்ளது.

𑌪𑌶𑍍𑌯𑍈𑌤𑌾𑌂 𑌪𑌾𑌣𑍍𑌡𑍁𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌮𑌾𑌚𑌾𑌰𑍍𑌯 𑌮𑌹𑌤𑍀𑌂 𑌚𑌮𑍂𑌮𑍍 ।
𑌵𑍍𑌯𑍂𑌢𑌾𑌂 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌪𑍁𑌤𑍍𑌰𑍇𑌣 𑌤𑌵 𑌶𑌿𑌷𑍍𑌯𑍇𑌣 𑌧𑍀𑌮𑌤𑌾 ॥

௩. ஓ ஆசாரியரே! புத்திசாலியாயும், உமது சிஷ்யனாயு மிருக்கிற, த்ருபத ராஜனது புத்திரனாகிய த்ருஷ்டத்யும்நன் என்பவன் வ்யூகங்களாய்க் கட்டியதும், பெரியதாயு மிருக்கிற, பாண்டவர்களுடைய இந்தச் சேனையைப் பாரும்.

𑌅𑌤𑍍𑌰 𑌶𑍂𑌰𑌾 𑌮𑌹𑍇𑌷𑍍𑌵𑌾𑌸𑌾 𑌭𑍀𑌮𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌮𑌾 𑌯𑍁𑌧𑌿 ।
𑌯𑍁𑌯𑍁𑌧𑌾𑌨𑍋 𑌵𑌿𑌰𑌾𑌟𑌶𑍍𑌚 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌰𑌥𑌃 ॥

௪. இந்தப் பாண்டவ சேனையில், பெரிய வில்லாளிகளும், யுத்தத்தில் பீமார்ச்சுனர்களுக்குச் சமானமானவர்களு மாகிய சூரர்களிருக்கிறார்கள். அவர்கள் யாரெனில், ஸாத்யகி, விராடன், மகாரதனான த்ருபதன்.

𑌧𑍃𑌷𑍍𑌟𑌕𑍇𑌤𑍁𑌶𑍍𑌚𑍇𑌕𑌿𑌤𑌾𑌨𑌃 𑌕𑌾𑌶𑌿𑌰𑌾𑌜𑌶𑍍𑌚 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 ।
𑌪𑍁𑌰𑍁𑌜𑌿𑌤𑍍𑌕𑍁𑌨𑍍𑌤𑌿𑌭𑍋𑌜𑌶𑍍𑌚 𑌶𑍈𑌬𑍍𑌯𑌶𑍍𑌚 𑌨𑌰𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑌃 ॥

௫. இன்னும், த்ருஷ்டகேது, சேகிதானன், பராக்கிரம சாலியான காசிராஜன், புருஜித்து, குந்திபோஜன், மனிதர்களிற் சிரேஷ்டனான சைப்பியன்,

𑌯𑍁𑌧𑌾𑌮𑌨𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌵𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤 𑌉𑌤𑍍𑌤𑌮𑍌𑌜𑌾𑌶𑍍𑌚 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 ।
𑌸𑍌𑌭𑌦𑍍𑌰𑍋 𑌦𑍍𑌰𑍌𑌪𑌦𑍇𑌯𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌮𑌹𑌾𑌰𑌥𑌾𑌃 ॥

௬. இன்னும், சூரனான யுதாமன்யு, பராக்கிரமசாலியான உத்தமௌஜஸ், ஸுபத்திரையின் புத்திரனான அபிமன்யு, (வரிசையாய்த் தர்மராஜர், பீமன், அர்ச்சுனன், நகுலன், சஹதேவன் ஆகிய இவர்களுக்கும் த்ரௌபதைக்கும் பிறந்த புத்திரர்களாகிய) பிரதிவிந்த்யன், ச்ருதஸோமன்,

ச்ருத கீர்த்தி, ஸ்தாநீகன், ச்ருதஸேநன் என்னும் உபபாண்டவர்களுமிருக்கிறார்கள். இவர்களெல்லோரும் மகாரதர்களே.*

𑌅𑌸𑍍𑌮𑌾𑌕𑌂 𑌤𑍁 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾 𑌯𑍇 𑌤𑌾𑌨𑍍𑌨𑌿𑌬𑍋𑌧 𑌦𑍍𑌵𑌿𑌜𑍋𑌤𑍍𑌤𑌮 ।
𑌨𑌾𑌯𑌕𑌾 𑌮𑌮 𑌸𑍈𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌰𑍍𑌥𑌂 𑌤𑌾𑌨𑍍𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑌿 𑌤𑍇 ॥

எ. ஓ பிராமணோத்தமரே! யார் நமக்கு முக்கியமானவர்களோ, என்னுடைய சேனைக்கதிபதிகளோ, அவர்களைத் தெரிந்துகொள்ளும். உமக்குத் தெரியும்பொருட்டு அவர்களைச் சொல்லுகிறேன்.

𑌭𑌵𑌾𑌨𑍍𑌭𑍀𑌷𑍍𑌮𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌣𑌶𑍍𑌚 𑌕𑍃𑌪𑌶𑍍𑌚 𑌸𑌮𑌿𑌤𑌿𑌞𑍍𑌜𑌯𑌃 ।
𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌾𑌮𑌾 𑌵𑌿𑌕𑌰𑍍𑌣𑌶𑍍𑌚 𑌸𑍌𑌮𑌦𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌚 ॥

அ. அவர்கள் யாரென்றால்,—நீரும், பீஷ்மரும், கர்ணனும், யுத்தத்தில் ஜயமடையும் கிருபாசாரியரும், அசுவத்தாமனும், விகர்ணனும் (துரியோதனனுடைய தம்பி), அப்படியே, ஸோமதத்தனது புத்திரனாகிய பூரிச்ரவனும்,

𑌅𑌨𑍍𑌯𑍇 𑌚 𑌬𑌹𑌵𑌃 𑌶𑍂𑌰𑌾 𑌮𑌦𑌰𑍍𑌥𑍇 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌜𑍀𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌨𑌾𑌨𑌾𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌹𑌰𑌣𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌯𑍁𑌦𑍍𑌧𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌾𑌃 ॥

கூ. எனக்காகப் பிராணனை விடுவதற்கு நிச்சயங்கொண்ட மற்ற வீரர்களுமிருக்கிறார்கள். எல்லாரும் அநேகவிதமான ஆயுதங்களையும், யுத்த சாதனங்களையுமுடையவர்கள்; யுத்தத்தில் தேர்ந்தவர்கள்.

---

* ஆயுத வித்தையிற் றேர்ந்தவனாய், பதினாயிரம் வில்லாளிகளோடு யுத்தஞ்செய்யுந் திறமை யுள்ளவனுக்கு மகாரதன் என்று பெயர்.

𑌅𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 𑌤𑌦𑌸𑍍𑌮𑌾𑌕𑌂 𑌬𑌲𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌂 ।
𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 𑌤𑍍𑌵𑌿𑌦𑌮𑍇𑌤𑍇𑌷𑌾𑌂 𑌬𑌲𑌂 𑌭𑍀𑌮𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌂 ॥

௰. பீஷ்மரால் ரட்சிக்கப்பட்டிருக்கிற அப்படிப்பட்ட நம்முடைய சேனையானது அபரிமிதமா யிருக்கிறது. பீமனாற் காப்பாற்றப்பட்டிருக்கிற பாண்டவர்களுடைய இந்தச் சேனையானது மிதமாயிருக்கிறது.

[நம்முடைய சேனை பெரிது, பாண்டவர்களுடைய சேனை சிறிது—என்று ஓர் அர்த்தம்.

எதற்காகப் பீஷ்மரை நாம் ரட்சிக்கிறோமோ அப்படிப்பட்ட அந்தப் பாண்டவர்களுடைய சைனியமானது நம்மை ஜயிப்பதற்குப் போதாது. எதற்காகப் பீமனைப் பாண்டவர்கள் ரட்சிக்கிறார்களோ அப்படிப்பட்ட இந்த நம்முடைய சைனியமானது பாண்டவர்களை ஜயிப்பதற்குப் போதுமானதா யிருக்கிறது — என்று மற்றோர் அர்த்தம்].

𑌅𑌯𑌨𑍇𑌷𑍁 𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌯𑌥𑌾𑌭𑌾𑌗𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ।
𑌭𑍀𑌷𑍍𑌮𑌮𑍇𑌵𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑍁 𑌭𑌵𑌨𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌏𑌵𑌹𑌿 ॥

௰௧. நீங்க ளெல்லோரும் எல்லாவழிகளிலும் (வ்யூகத்திற்குள் பிரவேசிக்க வேண்டிய மார்க்கங்களி லெல்லாம்) அவரவருடைய முறைப்படி யிருந்துகொண்டு பீஷ்மரையே ரட்சிக்கவேண்டுமன்றோ ?

[உங்களுங்களுக்கு நியமிக்கப்பட்டிருக்கும் நிலைகளிலிருந்து கொண்டு நம்முடைய சேனாபதியைக்காக்கவேண்டும்].

𑌤𑌸𑍍𑌯 𑌸𑌂𑌜𑌨𑌯𑌨𑍍𑌹𑌰𑍍𑌷𑌂 𑌕𑍁𑌰𑍁𑌵𑍃𑌦𑍍𑌧𑌃 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 ॥
𑌸𑌿𑌂𑌹𑌨𑌾𑌦𑌂 𑌵𑌿𑌨𑌦𑍍𑌯𑍋𑌚𑍍𑌚𑍈𑌃 𑌶𑌂𑌖𑌂 𑌦𑌧𑍍𑌮𑍌 𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌵𑌾𑌨𑍍 ॥

௰௨. பராக்கிரமசாலியும், கௌரவர்களுக்குள் மூத்தவருமான பீஷ்மர், துரியோதனனுக்குச் சந்தோஷத்தை

யுண்டுபண்ணினவராய், உறக்கச் சிம்மநாதம் செய்து சங்கை யூதினர்.

𑌤𑌤𑌃 𑌶𑌂𑌖𑌾𑌶𑍍𑌚 𑌭𑍇𑌰𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌣𑌵𑌾𑌨𑌕𑌗𑍋𑌮𑍁𑌖𑌾𑌃 ।
𑌸𑌹𑌸𑍈𑌵𑌾𑌭𑍍𑌯𑌹𑌨𑍍𑌯𑌨𑍍𑌤 𑌸 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑍁𑌮𑍁𑌲𑍋𑌽𑌭𑌵𑌤𑍍 ।

கங. பிறகு, சங்குகளும், துந்துபிகளும், ஸூக்ஷ்ம மிருதங்க விசேஷங்களும் (உடுக்கு முதலியனவும்), ஸ்தூல வாத்திய விசேஷங்களும் (தம்பட்டங்களும்), சங்கீதத்தை யனுசரித்த மார்த்தல விசேஷங்களும் சீக்கிரமாய் வாசிக்கப் பட்டன. அந்தச் சப்தங்களெல்லாம் ஒன்று சேர்ந்து ஒலித்தன.

𑌤𑌤𑌃 𑌶𑍍𑌵𑍇𑌤𑍈𑌰𑍍𑌹𑌯𑍈𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 𑌮𑌹𑌤𑌿 𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌨𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 ।
𑌮𑌾𑌧𑌵𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌶𑍍𑌚𑍈𑌵 𑌦𑌿𑌵𑍍𑌯𑍌 𑌶𑌂𑌖𑍌 𑌪𑍍𑌰𑌦𑌧𑍍𑌮𑌤𑍁𑌃 ॥

கச. பிறகு, வெள்ளைக்குதிரைகள் கட்டின பெரிய ரதத்தில் வீற்றிருந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் அர்ச்சுனனும் தங்கள் தங்களுடைய சிரேஷ்டமான சங்குகளைப் பூரித்தார்கள்.

𑌪𑌾𑌞𑍍𑌚𑌜𑌨𑍍𑌯𑌂 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑍋 𑌦𑍇𑌵𑌦𑌤𑍍𑌤𑌂 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯𑌃 ।
𑌪𑍌𑌣𑍍𑌡𑍍𑌰𑌂 𑌦𑌧𑍍𑌮𑍌 𑌮𑌹𑌾𑌶𑌂𑌖𑌂 𑌭𑍀𑌮𑌕𑌰𑍍𑌮𑌾 𑌵𑍃𑌕𑍋𑌦𑌰𑌃 ॥

கரு. ஹ்ருஷீகேசர் * (ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி) பாஞ்சஜன்ய மெ†னும் சங்கைப் பூரித்தார். தனஞ்ஜயன் ‡ (அர்ச்

* ஹ்ருஷீக=இந்திரியங்களுக்கு, ஈசன்=நியாமகன் (அதிபதி) என்று அர்த்தம். ஹ்ருஷீகேச=சுகமயமான தலைமயிரை யுடையவ னென்று மற்றோர் அர்த்தம்.

† பஞ்சஜன னென்னும் அரக்கனா லுண்டான தென்று அர்த்தம்.

‡ வடக்குதிக்கு விஜயஞ்செய்து ஏராளமான திரவியத்தை ஜயித்தவன்.

சுனன்) தேவதத்தமெனும் சங்கைப் பூரித்தான். பயங்கரமான வியாபாரங்களையுடைய வ்ருகோதரன் $ (பீமன்) பௌண்ட்ர மென்னும் பெயரையுடைய பெரிய சங்கை யூதினன்.

கு நஹுவிஜயம்ராஜா கு॰ந்தீபு॰த்ரோயு॰திஷ்டிரஃ ।
நகு॰லஸ்ஸஹதேவஸ்ச ஸு॰கோஷமணிபு॰ஷ்பகௌ ॥

கரு. குந்திதேவியின் புத்திரரும், அரசருமாகிய, யுதிஷ்டிரர் ¶ (தர்மராஜர்) அநந்தவிஜயமென்னும் சங்கைப் பூரித்தார். நகுலனும் ஸஹதேவனும், ஸு॰கோஷம், மணிபுஷ்பகம் என்கிற தங்கள் தங்களுடைய சங்குகளைப் பூரித்தார்கள்.

காஸ்யஸ்ச பரமேஷ்வாஸ ஸ்ரீவம்டீசஹாரயஃ ।
த்ருஷ்டத்யு॰ம்நோ விராடஸ்ச ஸாத்யகிஸ்சாபராஜிதஃ ॥

கஎ. சிரேஷ்டமான வில்லையுடைய காசிராஜனும், மகாரதனை சிகண்டியும், த்ருஷ்டத்யும்ன (த்ருபத ராஜனது குமாரன்) னும், விராடனும், யுத்தத்திற் பின்னோடாத ஸாத்யகியும்,

த்ரு॰பதோத்ரௌபதேயாஸ்ச ஸவஸஃப்ருதிவீபதே ।
ஸௌபத்ரஸ்ச மஹாபாஹு॰ ஸம்வாந்தத்மு॰ஃப்ருதக்ப்ருதக் ॥

கஅ. த்ருபத ராஜனும், த்ரௌபதியின் மக்களு (உபபாண்டவர்கள்)ம், பெரிய புஜங்களையுடைய ஸு॰பத்திரையின் புத்திரனு (அபிமன்யு)ம், ஓ அரசனே (த்ருதராஷ்ட்ரா)! எல்லோரும் வேறு வேறாய்ச் சங்குகளைப் பூரித்தார்கள்.

---

$ வ்ருகம்' என்னு மக்கினியை வயிற்றி லுடையவன்.
¶ யுத்தத்தில் ஸ்திரமாயிருப்பவனென்று அர்த்தம்.

𑌸 𑌘𑍋𑌷𑍋 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌹𑍃𑌦𑌯𑌾𑌨𑌿 𑌵𑍍𑌯𑌦𑌾𑌰𑌯𑌤𑍍 ।
𑌨𑌭𑌶𑍍𑌚 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌂 𑌚𑍈𑌵 𑌤𑍁𑌮𑍁𑌲𑍋 𑌵𑍍𑌯𑌨𑍁𑌨𑌾𑌦𑌯𑌨𑍍 ॥

௧௯. கோஷிக்கப்பட்ட அந்தச் சங்குகளின் நாதமானது, ஆகாசத்தையும் பூமியையும் பிரதித்தொனியினால் நிரப்பி, த்ருதராஷ்டிர புத்திரர்களுடைய ஹ்ருதயங்களைப் பிளந்தது.

𑌅𑌥 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍 𑌕𑌪𑌿𑌧𑍍𑌵𑌜𑌃 ।
𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑌂𑌪𑌾𑌤𑍇 𑌧𑌨𑍁𑌰𑍁𑌦𑍍𑌯𑌮𑍍𑌯 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌃 ॥

௨௰. பிறகு, ஆயுதங்களின் சந்தடி நடந்துக்கொண்டிருக்க, குரங்குக் கொடியோனாகிய பாண்டவன் (அர்ச்சுனன்), யுத்தஞ்செய்வதற்கு நின்றுகொண்டிருந்த த்ருதராஷ்டிர புத்திரர்களைப் பார்த்து, வில்லை யெடுத்து;

['யுத்தத்தில் வில்லை யெடுத்து அர்ச்சுனனானவன் தான் சஸ்திரங்களைப் பிரயோகிக்கவேண்டிய சமயத்தில்' —என்றும் அர்த்தம்சொல்லலாம். அல்லது, 'பிரவர்த்திக்கச்செய்யவேண்டிய ஆயுதப் பிரயோகத்தில்நின்றுகொண்டிருந்த துரியோதனாதிகளையர்ச்சுனன் பார்த்து'— என்றும் அர்த்தம் சொல்லலாம்].

𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌂 𑌤𑌦𑌾 𑌵𑌾𑌕𑍍𑌯𑌮𑌿𑌦𑌮𑌾𑌹 𑌮𑌹𑍀𑌪𑌤𑍇 ॥
𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌰𑌥𑌂 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯 𑌮𑍇𑌽𑌚𑍍𑌯𑍁𑌤 ॥

௨௧. ஓ அரசனே (த்ருதராஷ்ட்ரா)! அப்பொழுது, கிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து இந்த வாக்கியத்தை (அர்ச்சுனன்) சொன்னான்:— "ஓ அச்யுதா *! இரண்டு சேனைகளின் மத்தியில் என்னுடைய ரதத்தை நிறுத்தும்;"

* அச்யுதன்=தேசகால வஸ்துக்களில் ('ச்யுதி'=அசைவு) நகருத லில்லாதவன்; அதாவது, நிர்விகாரி. தேசகால குணங்களினால் பாதிக்கப்படாதவன்; 'அ'=விஷ்ணுவிலிருந்து, 'ச்யுதன்' = இந்த வுலகத்தி லவதரித்தவன்.

𑌯𑌾𑌵𑌦𑍇𑌤𑌾𑌨𑍍𑌨𑌿𑌰𑍀𑌕𑍍𑌷𑍇𑌽𑌹𑌂 𑌯𑍋𑌦𑍍𑌧𑍁𑌕𑌾𑌮𑌾𑌨𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍 ।
𑌕𑍈𑌰𑍍𑌮𑌯𑌾 𑌸𑌹 𑌯𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌮𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌰𑌣𑌸𑌮𑍁𑌦𑍍𑌯𑌮𑍇 ॥

௨௨. "இந்த யுத்த உத்தியோகத்தில் என்னால் எவருடன் யுத்தஞ்செய்யப்படவேண்டு மென்கிற (நான் யாருடன் போர் செய்ய வேண்டுமென்கிற) சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு யுத்தஞ் செய்ய விரும்பினவர்களாயுள்ள இவர்களை (பீஷ்மத்துரோணாதிகளை), நான் எவ்வளவு தூரத்திலிருந்து பார்க்கமுடியுமோ (அவ்வளவு தூரத்தில் என்னுடைய ரதத்தை நிறுத்தும்)."

𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑌵𑍇𑌕𑍍𑌷𑍇𑌽𑌹𑌂 𑌯 𑌏𑌤𑍇𑌽𑌤𑍍𑌰 𑌸𑌮𑌾𑌗𑌤𑌾𑌃 ।
𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌸𑍍𑌯 𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌰𑍍𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌚𑌿𑌕𑍀𑌰𑍍𑌷𑌵𑌃 ॥

௨௩. "எந்த இவர்கள் யுத்தத்தில், கெட்டபுத்தியுள்ள த்ருதராஷ்டிர புத்திர (துரியோதன) னுடைய இஷ்டத்தை நிறைவேற்ற விரும்பினவர்களாய் இங்கே சேர்ந்திருக்கிறார்களோ, யுத்தஞ்செய்யப்போகிற அந்த அவர்களை நான் பார்க்க விரும்புகிறேன்."

ஸஞ்சயன் சொல்லியது.

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑍋 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤 ।
𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌰𑌥𑍋𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥

௨௪. ஓ த்ருதராஷ்ட்ரா! கிருஷ்ணமூர்த்தியானவர், குடாகேச * (அர்ச்சுன)னால் இப்படிச் சொல்லப்பட்டவ

---

* குடாகா = நித்திரைக்கு, ஈசன் = அதிபதி; அதாவது நித்திரையை ஜயித்தவன், எல்லாப் புக்கங்களிலும், எல்லா அவஸ்தைகளிலும் ஜாக்கிரதையுள்ளவன்.

குட + ஆ + கேச = வெல்லத்தைப் போன்ற மயிருள்ளவன் = சிவப்பு மயிரையுடையவன்.

ராய், இரண்டு சேனைகளின் மத்தியில் சிரேஷ்டமான ரதத்தை நிறுத்தி,

பீஷ்மத்ரோணப்ரமுகத꞉ ஸர்வேஷாம் ச மஹீக்ஷிதாம் ।
உவாச பார்த² பஶ்யைதாந்ஸமவேதாந்குரூநிதி ॥

உரு. "பீஷ்மத்துரோணர்களி னெதிரிலும், எல்லா ராஜாக்களி னெதிரிலும், ஓ பார்த்தா (அர்ச்சுனா)! சேர்ந்திருக்கப்பட்ட இந்தக் கௌரவர்களைப் பார்," என்று சொன்னார்.

தத்ராபஶ்யத்ஸ்தி²தாந்பார்த²꞉
பித்ரூநத² பிதாமஹாந் ।
ஆசார்யாந்மாதுலாந்ப்⁴ராத்ரூந்
புத்ராந்பௌத்ராந்ஸகீ²ம்ஸ்ததா² ॥
ஶ்வஶுராந்ஸுஹ்ருத³ஶ்சைவ
ஸேநயோருப⁴யோரபி ।

உசு-எ. பிறகு, அர்ச்சுனன், அந்த இரண்டு சேனைகளிலு மிருந்த சிறிய தகப்பன் பெரிய தகப்பன்மார்களையும் ஆசாரியர்களையும், அண்ணன் தம்பிகளையும், பிள்ளைகளையும், பேரப்பிள்ளைகளையும்; அப்படியே சிநேகிதர்களையும், மாமனார்களையும், உபகாரஞ் செய்திருக்கப்பட்டவர்களையும் பார்த்தான்.

---

குடா + கேச = குண்டைப்போல் வளைந்த நுனியுள்ள மயிருடையவன்.

குடா = கட்டைவிரலின் நுனியையும் ஆள்காட்டி விரலின் நுனியையும் சேர்த்தா லுண்டாகிற வளையம்; அது நிரம்பு மளவுள்ள மயிருடையவன். காதோரத்தில் குடாவைப்போல் வளைந்த மயிருள்ளவன்.

தாந்ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய: ஸர்வாந் பந்தூநவஸ்திதாந் ॥
க்ருபயா பரயாவிஷ்டோ விஷீதந்நிதமப்ரவீத் ॥

உஎ-அ. அந்தக் குந்தீபுத்திரனானவன் (அர்ச்சுனன்) யுத்த பூமியில் நின்றுகொண்டிருந்த அந்தப் பந்துக்களை யெல்லாம் பார்த்து, மிகுந்த இரக்கங்கொண்டவனாய், துக்கித்துக்கொண்டு இதைச் (பின் சொல்லப்போகிற வாக்கியத்தை) சொன்னான்:

['விஷாத'மென்னும் ஸம்ஸ்கிருதப் பதத்திற்கு 'துக்கத்தினால் மனதுக்குண்டாகும் துர்ப்பலம்' என்று அர்த்தம். இந்த விஷாதமுண்டானால் ஒரு காரியமும் செய்யவொட்டாது].

அர்ச்சுனன் சொல்லியது.

த்ருஷ்ட்வேமம் ஸ்வஜநம் க்ருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்திதம் ॥
ஸீதந்தி மம காத்ராணி முகம் ச பரிஶுஷ்யதி ।
வேபதுஶ்ச ஶரீரே மே ரோமஹர்ஷஶ்ச ஜாயதே ॥
காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக்சைவ பரிதஹ்யதே ।
ந ச ஶக்நோம்யவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மந: ॥

உஅ-கூ ஓ கிருஷ்ணா†! யுத்தத்தை விரும்பி வந்திருக்கப்பட்ட இந்த ஸ்வஜனங்களைப் பார்த்துக்கொண்டு நிற்கிற என்னுடைய அவயவங்கள் சிதிலமாகின்றன; முகமுலர்ந்து

† கிருஷ் + ண = பூரணமான (நிறைந்த) சுகத்தை யுடையவர்.
கிருஷ்ண = தைத்தியர்களைத் தமோகுணத்திற்கு இழுக்கப்பட்டவர்.

கிரு + ஷ் + ண = வெட்டப்பட்டதைத்தியர்களின் பிராணத்தையும் பலத்தையுமுடையவர். தேவதைகளுக்குக் கொடுக்கப்பட்ட பிராணத்தையும் பலத்தையு முடையவர். கிருஷ்ணம் = கருமை; எனவே, கரியர், கறுப்புநிறமுடையவர்.

போகின்றது; என் சரீரத்திற் குலுக்கலும் காண்கிறது ; மயிர்க்கூச்சலிடுகிறது ; காண்டீவ மென்னும் வில்லானது கையினின்று நழுவுகின்றது; உடம்போ தாபத்தினாலெறிக்கப்படுகின்றது; என் மனமும் பிரமிக்கின்றது ; நிற்கக்கூட என்னால் முடியாது.

𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾𑌨𑌿 𑌚 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌾𑌨𑌿 𑌕𑍇𑌶𑌵 ।
𑌨 𑌚 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌹𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌜𑌨𑌮𑌾𑌹𑌵𑍇 ॥

௩௧. ஓ கேசவா * (கிருஷ்ணமூர்த்தி)! விபரீதமான சகுனங்களைப்பார்க்கின்றனன் (அவச்குனங்கள் காணப்படுகின்றன). யுத்தத்தில் ஸ்வஜனங்களைக்கொன்று, அதற்குப் பிறகு, நன்மையைக் காண்கிலன்.

𑌨 𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑍇 𑌵𑌿𑌜𑌯𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌨 𑌚 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌸𑍁𑌖𑌾𑌨𑌿 𑌚 ।
𑌕𑌿𑌂 𑌨𑍋 𑌰𑌾𑌜𑍍𑌯𑍇𑌨 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦 𑌕𑌿𑌂 𑌭𑍋𑌗𑍈𑌰𑍍𑌜𑍀𑌵𑌿𑌤𑍇𑌨 𑌵𑌾 ॥
𑌯𑍇𑌷𑌾𑌮𑌰𑍍𑌥𑍇 𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌤𑌂 𑌨𑍋 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌭𑍋𑌗𑌾𑌃 𑌸𑍁𑌖𑌾𑌨𑌿 𑌚 ।
𑌤 𑌇𑌮𑍇𑌽𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌧𑌨𑌾𑌨𑌿 𑌚 ॥
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌃 𑌪𑌿𑌤𑌰𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌚 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌾𑌃 ।
𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌃 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌃 𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌃 𑌶𑍍𑌯𑌾𑌲𑌾𑌃 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌸𑍍𑌤𑌥𑌾 ॥

---

* க + ஈசவ = பிரம்மாவையும் ருத்திரரையும் ரட்சிக்கப்பட்டவர்.

கேச + வ = 'கேசி' என்னு மரக்கனைக்கொன்றவர்.

கேசவ = பிரம்மாவையும் ருத்திரரையும் பிரவர்த்திக்கச் செய்கிறவர்.

க + ஈ + இ + ஈச + வ = பிரம்மாவையும் லட்சுமியையும் காமனையும் ருத்திரரையும் பிரவர்த்திக்கச்செய்கிறவர், அல்லது, வசிக்கின்றவர்.

கேச + வ = சிரேஷ்டமான சுகத்தையுடையவர், பிரளயசமுத்திரத்திலாவது, பாற்கடலிலாவது, இருக்கப்பட்டவர், நல்ல தலைமயிருள்ளவர்.

கேசநாமமுள்ள அவதாரங்களையுடையவர்.

௩உ-௪. ஓ கிருஷ்ணா! ஜயத்தைவிரும்பேன். ராஜ்யத்தையுஞ் சுகத்தையும் விரும்பேன். ஓ கோவிந்தா † (கிருஷ்ணா)! ராஜ்யத்தினால் நமக்காவதென்னை? சுகத்தினாலென்ன பிரயோசனம்? ஜீவித்திருப்பதனாற் பயனென்ன? நமது ராஜ்யமானது யாருக்காகவிரும்பப்படுகின்றதோ, சுகத்திற்குவேண்டிய சாதனங்களும் சுகங்களும் யாருக்காக விரும்பப்படுகின்றனவோ, அவர்கள், பிராணத்தின்பேரிலும் தனத்தின்பேரிலும் ஆசையைவிட்டு, யுத்தத்திற்கு நின்றுகொண்டிருக்கிறார்கள். (அவர்கள் யாரென்றால்) ஆசாரியர்களும், தந்தைகளும், புத்திரர்களும், அப்படியே பாட்டனார்களும், மாமன்களும், மாமனார்களும், பேரப்பிள்ளைகளும், மைத்துனர்களும், அப்படிச் சம்பந்திகளும்.

வ௭தாஷஹஷ-ஜி ஹூரி வூ௰தாவி௮ய-ஸ௰உ௩ ।
கூவிமெ த்ரெலொக்ய ராஜ்யஸ்ய ஹெதோ: கிஷு-உ ஹீ க்ருதெ ॥

௩௫. ஓ மதுஸூதனா*(கிருஷ்ணா)! இவர்கள் என்னையடிக்கிறவர்களானபோதிலும், மூன்றுலோக ராஜ்யங்களெனக்குக் கிடைப்பதற்குக் காரணமாயிருந்தபோதிலுங்கூட இவர்களைக் கொல்வதற் கிஷ்டமில்லாதவனா யிருக்கிறேன். பூமிக்காக இவர்களைக் கொல்லஎனக் கிஷ்டமில்லையென்று சொல்லவும் வேண்டுமா?

---

† கோ + விந்த = இந்திரியங்களையடைபவர், எப்பொழுதும் இந்திரியங்களே அதிஷ்டானமாக (நிலையாக) உடையவர்.

கோ = கந்தர்வ வித்தைகளையும், தேனு, பூமி, ஸ்வர்க்கங்களையும், தேசரூபாவதாரங்களையும், ஞானகிரணங்களையும்; விந்தி = அடையச்செய்பவர்; ஆதலால் 'கோவிந்தர்' எனப்பெயர்.

கோ + விந்த = வேதங்களினாலறியப்படுகிறவர். வாக்குக்கு விஷ்ணுஜ்ஞானத்தைக் கொடுப்பவர்.

கோ + அவிம் + த = வாக்குக்களின் அஜ்ஞானத்தைப் போக்குகிறவர். ஆடு, மாடு ரூபங்களாயுள்ள தைத்தியர்களை நறுக்குகிறவர்.

* மது + ஸூதன = மதுவென்னும் தைத்தியனைக் கொன்றவர்.

நிஹத்ய தார்த்தராஷ்ட்ராந்ந: கா ப்ரீதி: ஸ்யாஜ்ஜநார்த்தந ।
பாபமேவாஶ்ரயேதஸ்மாந் ஹத்வைதாநாததாயிந: ॥

௩௬. ஓ ஜனார்த்தனா † (கிருஷ்ணா)! த்ருதராஷ்ட்ர புத்திரர்களான துரியோதனாதிகளைக்கொன்று, பிறகு ஜீவித்திருக்கும் நமக்கு என்ன சந்தோஷமுண்டாகும்? கொல்வதற்குச் சித்தமாயிருக்கப்பட்ட ‡ இந்த ஆததாயிகளைக் கொன்று ஜீவிக்கும் நம்மைப் பாபமே சூழும்.

[“ தன்னைக் கொல்லவந்தவனை விசாரிக்காமற் கொல்லவேண்டும்” என்னும் நீதிசாஸ்திரவாக்கியத்தைவிட, “அஹிம்ஸா பரமோ தர்ம:” (ஹிம்ஸை செய்யாதிருத்தல் முக்கியமான தர்மம்) என்னும் தர்மசாஸ்திரவசனமானது விசேஷமாய் மதிக்கத் தக்கதென்பது பொருள்.

யுத்தஞ்செய்யாமற் சும்மா இருக்கிற நம்மைக்கொன்று, பிறகு ஜீவித்திருக்கும் இந்தத் துரியோதனாதிகளைப் பாபம் சாரும் - என்றும் இந்தச் சுலோகத்திற் கர்த்தம் சொல்லலாம்].

தஸ்மாந்நார்ஹா வயம் ஹந்தும் தார்த்தராஷ்ட்ராந்ஸ்வபாந்தவாந் ।
ஸ்வஜநம் ஹி கதம் ஹத்வா ஸுகிந: ஸ்யாம மாதவ ॥

௩௭. ஓ மாதவா § (கிருஷ்ணா)! ஆதலால், நாம், பந்துக்களுடன் கூடிய (அல்லது, நமது பந்துக்களாகிய) த்ருத

† ஜன + அர்த்தன = ஜனங்களைக் கொல்லுகிறவர் = ஸம்ஹாரகர்த்தர்; பிறவித்துன்பத்தைப் போக்குபவர், நல்லோர்க்கு நற்கதியையும், தீயோர்க்குத் துர்க்கதியையுங் கொடுப்பவர்.

‡ வீடு முதலியவற்றிற்குத் தீவைப்பவன், விஷமிடுபவன், சஸ்திரத்தைக் கையிற் பிடித்தவன், தனத்தை யபஹரிப்பவன், அன்னியர்களின் பூமியையும் மனைவியையும் அபஹரிப்பவன் ஆகிய இந்த ஆறுபேரும் ‘ஆததாயி’களெனப்படுவார்கள்.

§ மா + தவ = லக்ஷ்மியின் நாயகர்; ஞானத்திற்கதிபதி.
மா + த + வ = ஞானத்தையும் தர்மத்தையும் பிரவர்த்திக்கச் செய்பவர்.

ராஷ்ட்ரபுத்திரர்களைக் கொல்லத் தகுந்தவர்களல்லம். பந்துக்களைக் கொன்று நாமெப்படிச் சுகமுடையவர்களாவோம்?

𑌯𑌦𑍍𑌯𑌪𑍍𑌯𑍇𑌤𑍇 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌲𑍋𑌭𑍋𑌪𑌹𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂 𑌦𑍋𑌷𑌂 𑌮𑌿𑌤𑍍𑌰𑌦𑍍𑌰𑍋𑌹𑍇 𑌚 𑌪𑌾𑌤𑌕𑌮𑍍 ॥
𑌕𑌥𑌂 𑌨 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌸𑍍𑌮𑌾𑌭𑌿𑌃 𑌪𑌾𑌪𑌾𑌦𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍁𑌮𑍍 ।
𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂 𑌦𑍋𑌷𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌦𑍍𑌭𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ॥

௩௮-௩௯. ராஜ்யலோபத்தினாற் கெடுக்கப்பட்ட மனதையுடைய துரியோதனாதிகள், வம்சக்ஷயத்தினாலுண்டாகுந் தோஷத்தையும், மித்திரத்துரோகத்தினால் விளையும் பாபத்தையும் அறியாதவர்களாயிருக்கிறார்கள்; ஆனபோதிலும், ஓ ஜனார்த்தன (கிருஷ்ண)! குலக்ஷயத்தினாலுண்டாகுந் தோஷத்தையறிந்த நம்மாலும் இந்தப் பாபத்திலிருந்து தப்பித்துக்கொள்வதற்கு அறியத்தகாத தெப்படி?

[இதனால் இவ்வளவு பாபமென்று துரியோதனாதிகளுக்குத் தெரியவில்லை. குலக்ஷயத்தினாற் பாபம் சம்பவிக்குமென் றறிந்து நாம் இந்தப் பாபத்திற் குட்படாமல் தப்பித்துக்கொள்ளவேண்டாமா]?

𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑍇 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌾𑌃 ।
𑌧𑌰𑍍𑌮𑍇 𑌨𑌷𑍍𑌟𑍇 𑌕𑍁𑌲𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑌧𑌰𑍍𑌮𑍋𑌽𑌭𑌿𑌭𑌵𑌤𑍍𑌯𑍁𑌤 ॥
𑌅𑌧𑌰𑍍𑌮𑌾𑌭𑌿𑌭𑌵𑌾𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌣 𑌪𑍍𑌰𑌦𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌷𑍁 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌸𑍁 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌵𑌰𑍍𑌣𑌸𑌂𑌕𑌰𑌃 ॥
𑌸𑌂𑌕𑌰𑍋 𑌨𑌰𑌕𑌾𑌯𑍈𑌵 𑌕𑍁𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌕𑍁𑌲𑌸𑍍𑌯 𑌚 ।
𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 𑌪𑌿𑌤𑌰𑍋 𑌹𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 𑌲𑍁𑌪𑍍𑌤𑌪𑌿𑌣𑍍𑌡𑍋𑌦𑌕𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ॥

---

மாதவ = 'மது' வென்னு மரக்கனது சம்பந்தி, அதாவது அவனுடைய சத்துரு.

௪௰-௨. வம்சக்ஷயமாகுங்கால், பரம்பரையாய் நடந்துவந்த குலதர்மங்கள் நசித்துப்போம். தர்மம் நசித்தால், குலத்தையும் மற்றெல்லாவற்றையும் அதர்மம் கவர்ந்து கொள்ளும். ஓ கிருஷ்ணா! அதர்மம் மேலிடுவதனால் குலஸ்திரீகள் கெடுவார்கள். ஓ வார்ஷ்ணேயா (வ்ருஷ்ணி வம்சஸ்தராகிய கிருஷ்ணா)! ஸ்திரீகள் கெட்டால் (துன்மார்க்கர்களானால்) வர்ணங்கள் (ஜாதிகள்) கலந்துபோகும். ஸங்கரமானது (அப்படி வர்ணங்கள் கலந்துபோவது) குலத்தைக் கெடுத்தவர்களுக்கும், குலத்திற்கும், நரகத்திற்கேயாகின்றது. அன்றியும், இவர்களுடைய பிதுர்தேவதைகள், லோபித்தபிண்டோதகக்காரியங்களுள்ளவர்களாய் (—அவர்களுக்கு அன்னபிண்டம், தண்ணீர், முதலியவைகளைக்கொடுக்கும் சிராத்தம், தர்ப்பணம் முதலான கர்மங்களைச் செய்பவர்களில்லாதவர்களாய்) நரகத்தில் விழுகிறார்களல்லவா?

𑌦𑍋𑌷𑍈𑌰𑍇𑌤𑍈𑌃 𑌕𑍁𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌵𑌰𑍍𑌣𑌸𑌂𑌕𑌰𑌕𑌾𑌰𑌕𑍈𑌃 ।
𑌉𑌤𑍍𑌸𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 ஜா𑌤𑌿𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌶𑍍𑌚 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌃 ॥
𑌉𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌣𑌾𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌨𑌰𑌕𑍇 𑌨𑌿𑌯𑌤𑌂 𑌵𑌾𑌸𑍋 𑌭𑌵𑌤𑍀𑌤𑍍𑌯𑌨𑍁𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮 ॥

௪௩-௪. குலத்தைக் கெடுக்கிறவர்களுடைய, வர்ணஸங்கரத்தை (ஜாதிகள் கலத்தலை) யுண்டாக்கும் இந்தத் தோஷங்களினாலே, ஸநாதனமாய் (எப்பொழுதும்) உள்ள வர்ணாசிரம தர்மங்களும், வம்ச தர்மங்களும் நசிக்கச் செய்யப்படுகின்றன. ஓ ஜனார்த்தனா (கிருஷ்ணா)! நசித்த குலதர்மங்களையுடைய (குல தர்மங்கள் நசித்த) மனிதர்களுக்கு நரகத்தில் எப்பொழுதும் இருப்பிடம் ஏற்படுகிறது என்று (பெரியோர்கள் சொல்லக்) கேட்டிருக்கிறோம்.

𑌅𑌹𑍋 𑌬𑌤 𑌮𑌹𑌤𑍍𑌪𑌾𑌪𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑌾 𑌵𑌯𑌮𑍍 ।
𑌯𑌦𑍍𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍁𑌖𑌲𑍋𑌭𑍇𑌨 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 𑌸𑍍𑌵𑌜𑌨𑌮𑍁𑌦𑍍𑌯𑌤𑌾𑌃 ॥

௪௫. ஐயையோ! நாம் பெரும்பாபத்தைச் செய்யச் சித்தமானோம். எந்தக் காரணத்தினால் ராஜ்யத்தின் பேரிலும் சுகத்தின்பேரிலும் ஆசையினால் பந்துக்களைக் கொல்லச் சித்தமானோமோ?

𑌯𑌦𑌿 𑌮𑌾𑌮𑌪𑍍𑌰𑌤𑍀𑌕𑌾𑌰𑌮𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑌾𑌣𑌯𑌃 ।
𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾 𑌰𑌣𑍇 𑌹𑌨𑍍𑌯𑍁𑌸𑍍𑌤𑌨𑍍𑌮𑍇 𑌕𑍍𑌷𑍇𑌮𑌤𑌰𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥

௪௬. பிரதிக்கிரியையில்லாமலும் (எதிர்த்துப் போர் செய்யாமலும்) சஸ்திரங்களில்லாமலு மிருக்கப்பட்ட என்னை, கைகளிற் சஸ்திரங்களையுடைய த்ருதராஷ்ட்ர புத்திரர்கள் கொல்வார்களானால், அஃது எனக்கு மெத்தவும் ஹிதமாயிருக்கும் (அல்லது, இஷ்டமாயிருக்கும்).

ஸஞ்சயன் சொல்லியது.

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌃 𑌸𑌂𑌖𑍍𑌯𑍇 𑌰𑌥𑍋𑌪𑌸𑍍𑌥 𑌉𑌪𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 ।
𑌵𑌿𑌸𑍃𑌜𑍍𑌯 𑌸𑌶𑌰𑌂 𑌚𑌾𑌪𑌂 𑌶𑍋𑌕𑌸𑌂𑌵𑌿𑌗𑍍𑌨𑌮𑌾𑌨𑌸𑌃 ॥

௪௭. யுத்தத்தில் அர்ச்சுனன் இவ்வாறு சொல்லி, துக்கத்தினாற் பீடிக்கப்பட்ட மனமுடையவனாய், பாணங்களோடுகூடிய வில்லை(நழுவ)விட்டு, ரதத்தின்பேரி லுட்கார்ந்திருந்தான்.

இவ்வாறு உபநிஷதர்த்தத்தை விளக்குவதும், பிரம்ம வித்தையைப் போதிப்பதும், யோக சாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ச்சுன ஸம்வாதமுமாகிய பகவத்கீதைகளில் அர்ச்சுன சோகத்தைப்பற்றிய முதல் அத்தியாயம் முற்றிற்று.



## இரண்டாம் அத்தியாயம்.

# ஸாங்கியயோகம்.

ஸஞ்சயன் சொல்லியது.

தம் ததா க்ருபயாவிஷ்டம் அச்ருபூர்ணாகுலேக்ஷணம் ।
விஷீதந்தமிதம் வாக்யம் உவாச மதுஸூதந: ॥

க. அவ்வாறு இரக்கத்தினால் ஆவரிக்கப்பட்டவனும் (கிருபை மிகுந்தவனும்), கண்ணீர் நிறைந்த வியாகுலமான கண்களையுடையவனும், துக்கித்துக்கொண்டிருப்பவனுமாகிய, அவனை (அர்ச்சுனனை)ப் பார்த்து, மதுஸூதனர் (கிருஷ்ணமூர்த்தி) இந்த வாக்கியத்தைச் சொன்னார்:

ஸ்ரீபகவான் * சொல்லியது.

குதஸ்த்வா கச்மலமிதம் விஷமே ஸமுபஸ்திதம் ।
அநார்யஜுஷ்டம் அஸ்வர்க்யம் அகீர்த்திகரம் அர்ஜுந ॥

உ. ஓ அர்ச்சுன! பூஜ்யர்களல்லாத அஜ்ஞர்களால் ஆசரிக்கப்பட்டதும், ஸ்வர்க்கத்திற்குத் தகாததும், அபகீர்த்திக்குக் காரணமானதுமாகிய துக்கமானது, ஆபத்துக் காலமாகிய அவசரத்தில் உன்னை யெப்படி அடைந்தது?

---

* பகமென்பது—அணிமாதி அஷ்டைசுவரியங்களையும், தைரியம், கீர்த்தி, ஸ்ரீ (லட்சுமி), ஞானம், வைராக்கியம் ஆகிய இவைகளையும் குறிக்கின்றது. இந்த ஆறு லட்சணங்களையு முடையவர் 'பகவான்.'

பூதங்களின் உற்பத்தியையும், நாசத்தையும், வரப்போகிற ஸம்பத்து விபத்துக்களையும், ஞானத்தையும், அஜ்ஞானத்தையும், எவரறிகிறாரோ, அவர் 'பகவான்' என்று சொல்லத்தகுந்தவர்.

[யுத்தம் செய்யவேண்டிய இந்தச்சமயத்தில் உன்னுடைய சொந்ததர்மம் (க்ஷத்திரியதர்மம்) போய், உனக்குத் துக்கமேன் வந்தது]?

𑌕𑍍𑌲𑍈𑌬𑍍𑌯𑌂 𑌮𑌾 𑌸𑍍𑌮 𑌗𑌮𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑍈𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑍍𑌯𑍁𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌂 𑌹𑍃𑌦𑌯𑌦𑍌𑌰𑍍𑌬𑌲𑍍𑌯𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑍋𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌪𑌰𑌂𑌤𑌪 ॥

௩. ஓ பார்த்தா! அதைரியமடையாதே. உனக்கு இது தகாது. ஓ சத்துருக்களைத் தபிக்கச்செய்கிறவனே (அர்ச்சுனா)! மனத்தில் இழிவான கோழைத்தனத்தை (பயங்காளித்தனத்தை) விட்டு, எழுந்திரு (யுத்தத்திற்குச் சித்தமாயிரு).

அர்ச்சுனன் சொல்லியது.

𑌕𑌥𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌮𑌹𑌂 𑌸𑌂𑌖𑍍𑌯𑍇 𑌦𑍍𑌰𑍋𑌣𑌂 𑌚 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 ।
𑌇𑌷𑍁𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌮𑌿 𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌹𑌾𑌵𑌰𑌿𑌸𑍂𑌦𑌨 ॥

௪. ஓ சத்துருக்களைக் கொல்பவனே! ஸ்ரீ கிருஷ்ணா! பூஜிக்கத்தக்கவர்களாகிய பீஷ்மரையும், துரோணரையும் பார்த்து, நான் யுத்தத்தில் பாணங்களால் எப்படி எதிர்த்துப் போர்புரிவேன்?

𑌗𑍁𑌰𑍂𑌨𑌹𑌤𑍍𑌵𑌾 𑌹𑌿 𑌮𑌹𑌾𑌨𑍁𑌭𑌾𑌵𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍇𑌯𑍋 𑌭𑍋𑌕𑍍𑌤𑍁𑌂 𑌭𑍈𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌪𑍀𑌹 𑌲𑍋𑌕𑍇 ।
𑌹𑌤𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌕𑌾𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌗𑍁𑌰𑍂𑌨𑌿𑌹𑍈𑌵
𑌭𑍁𑌞𑍍𑌜𑍀𑌯 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 𑌰𑍁𑌧𑌿𑌰𑌪𑍍𑌰𑌦𑌿𑌗𑍍𑌧𑌾𑌨𑍍 ॥

௫. பெரும் பிரபாவத்தை (சக்தி, அல்லது கீர்த்தியை) யுடைய பெரியோர்களைக் கொல்லாமல், இவ்வுலகில் அனுபவிப்பதற்குப் பிச்சையெடுத்த அன்னமாயினும் மேலானது. தனத்தை யிச்சிக்கிற குருமார்களைக்கொன்றோ, இவ்வுலகத்திலேயே ரத்தத்தினாற் பூசப்பட்ட போகங்களை யனுபவிக்கவேண்டும்?

[பெரியோர்களைக் கொல்லுவதைவிட, பிச்சையெடுத்துண்டு அனுபவிப்பது நல்லது,குருக்களைக்கொன்று, அவர்களுடைய ரக்தத்தைச் சிந்தி, அதனால்,அவ்வாறு ரக்தக்கலப்பானபோகங்களை யனுபவிக்கவும் வேண்டுமோ)?

நசைதத்வித்3: கதரந்நோ க3ரீயோ
யத்3வா ஜயேம யதி3 வா நோ ஜயேயு: ।
யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாம:
தேऽவஸ்தி2தா: ப்ரமுகே2 தா4ர்தராஷ்ட்ரா: ॥

௬. நமக்கு எது மேலானதோ,அதை அறியாமலிருக்கிறோம் (பிச்சையெடுப்பது நல்லதோ, யுத்தஞ்செய்வது நல்லதோ, தெரியாது—யுத்தஞ்செய்வது நலமோ, செய்யாதிருப்பது நலமோ தெரியாது). நாம் வெல்லுவோமோ என்னவோ? நம்மைத் துரியோதனாதிகள் வெல்லுவார்களோ என்னவோ? எவர்களைக்கொன்று நாம் ஜீவித்திருக்க இஷ்டப்படமாட்டோமோ, அந்தத் திருதராஷ்டிரபுத்திரர்களும் அவர்களைச் சேர்ந்த பீஷ்மத்துரோணாதிகளும் எதிரில் நின்றிருக்கிறார்கள்.

கார்பண்யதோ3ஷோபஹதஸ்வபா4வ:
ப்ருச்சா2மி த்வாம் த4ர்மஸம்மூட4சேதா: ।
யச்ச்2ரேய: ஸ்யாந்நிஶ்சிதம் ப்3ரூஹி தந்மே
ஶிஷ்யஸ்தேऽஹம் ஶாதி4 மாம் த்வாம் ப்ரபந்நம் ॥

௭. லோபத்தினாலுண்டாகிய தோஷத்தினாற்கெட்ட (திரஸ்கரிக்கப்பட்ட) ஸ்வபாவத்தையுடையவனும், தர்மத்தில் (எது தர்மமென்கிற) சந்தேகமடைந்த மனமுடையவனுமாய், உம்மைக்கேட்கின்றேன். எது நிச்சயிக்கப்பட்ட நன்மையாகுமோ, அதை யெனக்குச் சொல்லும். உமக்கு நான் சிஷ்யன். உம்மையண்டிய என்னை யாசீர்வதியும்.

[கொஞ்சங்கூடத் திரவியநஷ்டத்தை யெவன் பொறுக்கமாட்டானோ, அவனை உலகத்திற் கிருபணன் என்று சொல்வார்கள். ஆத்மஜ்ஞானமில்லாதவனும் அப்படிப்பட்டவனாகையால், அவனுக்கும் கிருபணன் என்று பெயர். இந்தக் கிருபணத்தன்மையினாலே, இச்சன்மத்தில் 'இவர்கள் என்னுடைய பந்துக்கள், இவர்கள் மறித்தபிறகு நான் உயிர்த்திருப்பானேன்' என்று தோன்றுகிற மமகாரமே தோஷம்].

𑌨𑌹𑌿 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑌮𑌾𑌪𑌨𑍁𑌦𑍍𑌯𑌾𑌦𑍍
𑌯𑌚𑍍𑌛𑍋𑌕𑌮𑍁𑌚𑍍𑌛𑍋𑌷𑌣𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌮𑍍 ।
𑌅𑌵𑌾𑌪𑍍𑌯 𑌭𑍂𑌮𑌾𑌵𑌸𑌪𑌤𑍍𑌨𑌮𑍃𑌦𑍍𑌧𑌂
𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌸𑍁𑌰𑌾𑌣𑌾𑌮𑌪𑌿 𑌚𑌾𑌧𑌿𑌪𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

௮. பூமியிற் சத்துருக்களில்லாத செழிப்பான ராஜ்யத்தையும் தேவதைகளின் ஆதிபத்தியத்தையும் (எஜமானத்தன்மை) அடைந்தபோதிலும், இந்திரியங்களை மிகவு முலரச்செய்கிற என்னுடைய துக்கத்தை எது போக்கடிக்குமோ அதை நான் காண்கில னல்லனே?

ஸஞ்சயன் சொல்லியது.

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌂 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶𑌃 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪𑌃 ।
𑌨 𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌂 𑌬𑌭𑍂𑌵 𑌹 ॥

௯. சத்துருக்களைத் தபிக்கச்செய்யு மர்ச்சுனன், ஸ்ரீகிருஷ்ணரைப்பார்த்து இப்படிச்சொல்லி, யுத்தஞ்செய்யேனென்று கிருஷ்ணருக் குரைத்துச் சும்மாவிருந்தான்.

𑌤𑌮𑍁𑌵𑌾𑌚 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌃 𑌪𑍍𑌰𑌹𑌸𑌨𑍍𑌨𑌿𑌵 𑌭𑌾𑌰𑌤 ।
𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌤𑌮𑌿𑌦𑌂 𑌵𑌚𑌃 ॥

௧௰. ஓ திருதராஷ்டிரா! ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் இரண்டுசேனைகளின் மத்தியில் துக்கித்துக்கொண்டிருக்கிற

அவனை (அர்ச்சுனனை)ப்பார்த்து, பரிகாசஞ்செய்கிறவரைப் போல இந்த வாக்கியத்தைச் சொன்னார்:

[ஞானவானாயிருந்தும் உனக் கிந்தத் துர்ப்புத்தி எப்படி வந்தது என்று பரிகாசஞ்செய்தார்போலும்.

"இந்த வாக்கியத்தைச்சொன்னார்" என்றால், ஸ்ரீ கிருஷ்ண ரானவர் இந்த அத்தியாயத்தில் ய௨-ஆவது சுலோகம் முதல், ய௮-ஆவது அத்தியாயம் ௬௬-ஆவது சுலோகம்வரை யடங்கிய பகவத் கீதைகளை யுபதேசித்தார் - என்றவாறு].

☞ மேற்கண்ட சுலோகங்களில், ((௧-ஆவது அத். ௨-ஆவது சுலோ: முதல்,௨-ஆவது அத். ௯-ஆவது சுலோ: வரை)பிராணிகளின் ஸம்ஸார துக்கத்திற்கு பீஜமென (விரை) த்தகும் சோகமோகங்கள் பிறப்பதற்குக் காரணங்கூறப்பட்டது. 'இவர்கள் என்னைச் சேர்ந்தவர்கள், நானுமவர்களுஞ் சம்பந்திகள்' என்னும் பிராந்தியினாலுண்டான ஸ்நேகம் விட்டுப்போகுமென்கிற எண்ணமே காரணமாக அர்ச்சுனனுக்குச் சோகமோகங்களுண்டாயினவென்று காட்டப்பட்டது. இந்தச் சோகமோகங்களினால் மதிகெட்டு விவேகமழிந்து, அர்ச்சுனனென்பவன், தான் யுத்தஞ்செய்ய வேண்டுமென்கிற எண்ணங்கொண்டுவந்திருந்தும், யுத்தஞ்செய்ய மனமில்லாதவனானான்; தனக்குத் தகாதகாரியமாகிய பிச்சையெடுக்க உத்தேசித்தான். இதனால், சோகமோகாதி தோஷங்களுடன் கூடியவர்களெல்லாரும் தங்களுடைய சொந்த தர்மங்களைக் கைவிட்டு இழிதொழிலைக் கைக்கொள்வார்களென விளங்குகின்றது. அவர்கள் தங்களுடைய சொந்த தர்மங்களை நடத்தினாலும், அகங்காரத்தோடு கூடியவர்களாய், பயனை விரும்பியே செய்வார்கள். இதனால், புண்ணியபாபங்கள் ஏற்பட்டு, பிறப்பு, இறப்பு, சுகம், துக்கம் ஆகிய இவைகளையே ஸ்வரூபமாயுள்ள ஸம்ஸாரமானது இடைவிடாமல் நிலைபெறுவதற்குக் காரணமாகின்றது. ஆகையால், ஸம்ஸாரத்திற்கு மூலகாரணம் சோகமோகங்களென்றும், ஸர்வகர்ம ஸந்நியாஸ (எல்லாக்கர்மங்களையும் செய்யாமல்விடுதல்) த்தோடுகூடிய ஆத்மஜ்ஞானத்தினாலன்றி, மற்றெதனாலும் இவைகளைப் போக்கடிக்க முடியாதென்றும் உலகத்

தவர்க்கெல்லாம் அநுக்கிரகம் செய்யும்பொருட்டு, உபதேசம் செய்யவிரும்பினவராய், ஸ்ரீவாஸுதேவமூர்த்தியானவர் அர்ச்சுனனுக்குச் சொல்வதுபோல, இந்தக் கிரந்தத்தைச் சொல்லுகிறார்.

அவருக்கும் நமக்கும் பந்துத்வமிருக்கின்றது, சிநேகமிருக்கின்றது; இவைகளுக்கு விரோதம் வருமே என்று, உண்மையாய்க் காரணமில்லாதிருக்கையிலேயே துக்கித்து, க்ஷத்திரியர்களுக்குரிய முதன்மையான தர்மமாகிய யுத்தத்தை அதர்மமென்றெண்ணி, தனக்குத் தர்மோபதேசஞ் செய்யவேண்டுமென்று சரணமடைந்த அர்ச்சுனனைப்பார்த்து,—ஆத்மதத்துவ ஞானமும், பிரதிபலனை விரும்பாமற் கர்மஞ்செய்வதனால் ஆத்மாவையடைவதற்குச் சாதனமாகுமென்னும் ஞானமும் உண்டாகாமல், இவனுக்கு அஜ்ஞானம் போகாதென்று நினைத்து, ஸ்ரீபகவானானவர் ஆத்யாத்மசாஸ்திரத்தை (வேதாந்தசாஸ்திரத்தை) யெடுத்துரைக்கின்றார் என்றவாறு.

தர்மமும், ஞானமும், உலகத்திற் குறைந்துவருவதைக்கண்டு, கருணைக்கடலாகிய பிரம்ம ருத்திராதி தேவதைகள் ஸ்ரீமந்நாராயணரைப் பிரார்த்திக்கவே, அவர் வியாஸரூபமாய் அவதரித்தார். வேதார்த்தஜ்ஞானமில்லாமல் ஸம்ஸாரத்தி லுழன்று துக்கித்துக் கொண்டிருக்கிற ஸ்திரீகளுக்கும், சூத்திரர் முதலானவர்களுக்கும், உயர்ந்த ஜன்மங்களையெடுத்தும் அவற்றிற் குரிய தர்மங்களை நடத்தாமல் நிலைகுலைந்து கீழ் குலத்தவருக்குச் சமானராயிருப்பவர்களுக்குங்கூட தர்மஜ்ஞானமார்க்கங்களைக்காட்டி, அவர்கள் மோட்சமடையும்படி செய்யவேண்டுமென்று ஸ்ரீ வியாஸபகவான் மகாபாரதத்தை எழுதியருளினர். அந்தமகாபாரதத்தின் அர்த்தங்களையெல்லாம் சுருக்கி, கிருஷ்ணார்ச்சுன ஸம்பாஷணரூபமான இந்த "பகவத்கீதை" யையும் எழுதி, அந்த மஹாபாரதமென்னும் கிரந்தத்திலேயே அடக்கிவைத்தார்.

## ஸ்ரீபகவான் சொல்லியது.

அஶோச்யாநந்வஶோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ஶ்ச பாஷஸே ।
கதாஸூநகதாஸூம்ஶ்ச நாநுஶோசந்தி பண்டிதா: ॥

௰௧. துக்கப்படத் தகாதவர்களைக்குறித்து நீ துக்கப் பட்டாய். ஞானியைப்போலவும் பேசுகிறாய். * ஆத்மஜ்ஞான முள்ளவர்கள் பிராணம் போனவர்களைக்குறித்தும், பிராணம் போகாமல் உயிர்த்திருப்பவர்களைக்குறித்தும், (சரீரம் நசித்துப்போகிறதே யென்றும், ஜீவாத்மா சரீரத்தைவிட்டுப் போகிறதேயென்றும்) வியசனப்படமாட்டார்கள்.

நத்வேவாஹம் ஜாது நாஸம் நத்வம் நேமே ஜநாதிபா: ।
நசைவ நபவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ॥

௰௨. நான் ஒருபொழுது மில்லாதிருந்ததில்லை. நீ இல்லாதிருந்தது இல்லை. இந்த அரசர்களில்லாதிருந்தது இல்லை. நாம் எல்லோரும் இனி இல்லாமற்போகிறதுமில்லை.

[ஸர்வேசுவரனாகிய நான் எப்பொழுது மிருப்பதுபோல, ஜீவாத்மாக்களாகிய நீங்களும் எப்பொழுதுமிருப்பவர்கள். ஆத்மாவுக்கு நாசமே கிடையாது; அஃது எப்பொழுதுமுள்ளது, ஆதியந்தமில்லாதது என்பது பகவத்கீதையின் முதலாவது ஸித்தாந்தம்.

ஆத்மா ஒன்றேயாயினும், சரீரங்கள் வேறுவேறாயிருப்பதைப் பற்றி, 'நாம் எல்லோரும்' என்று பன்மையாய்ச் சொல்லப்பட்டது].

தேஹிநோऽஸ்மிந் யதா தேஹே கௌமாரம் யௌவநம் ஜரா ।
ததா தேஹாந்தரப்ராப்திர் தீரஸ்தத்ர ந முஹ்யதி ॥

௰௩. இந்தத் தேகத்தில் ஆத்மாவுக்குக் குழந்தைப் பருவமும், யௌவனமும், கிழத்தனமும், எப்படி யுண்டாகின்றனவோ, அப்படியே, வேறொரு சரீரத்தை யடைவது

* குலக்ஷயத்தையும், வர்ணஸங்கரத்தையும்பற்றி அர்ச்சுனன் சொல்லியதைக்குறித்தது. இந்த விஷயத்தில் அவன் யோசனையுடன் பேசினவனானபோதிலும் உண்மையை யறியவில்லை.

முண்டாகின்றது., புத்திசாலியானவன் இந்த விஷயத்தில் மோகமடையான்.

[குழந்தைப்பருவ மாறி, யௌவனவஸ்தை வரும்பொழுது, குழந்தைப்பருவத்திலிருந்த ஆத்மாவானது நசித்து வேறு ஆத்மா பிறப்பதில்லை. அதுபோல, இந்தச் சரீரம் நசித்து, அதிலுள்ள ஆத்மாவுக்கு வேறு சரீரம் வருகின்றது. ஒரே சரீரத்தில் அவஸ்தைகள் (பால்யம் முதலியன) மாறும்பொழுது, ஆத்மாவானது மாறுபாடில்லாமலிருப்பதுபோல், ஒரு சரீரம் மாறி வேறுசரீரம் வரும்பொழுதும் ஆத்மா மாறுபடாது. தேகம் நசிக்குந்தன்மையது, மாறுபாடுள்ளது என்பது பகவத்கீதையின் இரண்டாவது ஸித்தாந்தம்.

அவஸ்தைகள் மாறினாலும், ஆத்மா ஸ்திரமாயிருக்கிறதென்னும் ஞானமிருப்பதனால், குழந்தைப்பருவம்போய் யௌவனம்வந்தால், நாம் துக்கப்படுவதில்லை. இதைப்போலவே, ஒரு தேகம் போய் வேறுதேகம் வந்தாலும், ஆத்மாமாறாமல் ஸ்திரமாயிருக்கிறதென்னும் ஞானமுள்ளவன் வியசனப்படமாட்டான்.

இந்தத் தேகத்தில் ஜீவாத்மாவென்னுமழியாப்பொருளொன்றிருக்கின்றதென்று ஸ்தாபிக்கப்பட்டது. ஆத்மாவுக்கு ஒரு தேகம் போனால் வேறுதேகம் வருமென்பது பகவத்கீதையின் மூன்றாவது ஸித்தாந்தம்.

ஜீவாத்மா நாசமடைகிறதே யென்றாவது, சரீரம் நாசமடைகிறதே யென்றாவது துக்கமுண்டாகவேண்டும். ஜீவாத்மாவானது எப்பொழுது மிருப்பது, நாசமற்றது, ஆதலால் ஜீவாத்மாவைக் குறித்து வியசனப்படவேண்டிய அவசியமில்லை யென்று முன் சுலோகத்திற் சொல்லப்பட்டது. சரீரம் எப்பொழுதும் மாறிக்கொண்டே யிருக்கும், அது நசிக்குந்தன்மையது, ஆதலால் இதைக் குறித்தும் வியசனப்படக் காரணமில்லையென்று இந்த (௰௪-வது) சுலோகத்திற் சொல்லப்படுகின்றது].

[illegible]
[illegible]

௧௪. ஓ குந்திபுத்திரா (அர்ச்சுனா)! சப்தம், ஸ்பரிசம் முதலான விஷய ஸம்பந்தங்கள், குளிர், சூடு முதலான சுக துக்கங்களை யுண்டாக்குகின்றன. இவை போக்கு வரவுற்றவைகள் (ஒரு பொழுது இருக்கும், ஒரு பொழுது இரா). ஆகையால், இவை அநித்தியமானவைகள் (எப்பொழுது மிருப்பவையன்று). ஓ பாரதவம்சத்தோனே! இவைகளைப் பொறுத்துக்கொள்.

[இவ்வாறாக பாஹ்யேந்திரிய நிக்கிரகஞ் சொல்லப்பட்டது.

குளிரே ஒருபொழுது சுகத்தைக்கொடுக்கின்றது, காலவித்தியாசத்தினால் மற்றொரு சமயத்தில் துக்கத்தையும் உண்டாக்குகின்றது. சுலோகத்தில், குளிர் சுகத்திற்கும், சூடு துக்கத்திற்கும் ஒப்பிடப்பட்டிருக்கிறது.

ஞான இந்திரியங்கள் (அல்லது, அறிபுலன்கள்).—த்வக் (தோல்), சக்ஷுஸ் (கண்), சுரோத்திரம் (காது), ஜிஹ்வ (நாக்கு), ஆக்கிராணம் (மூக்கு).

இந்திரிய விஷயங்கள்.— ஸ்பரிசம் (தொடுகிறது), ரூபம் (பார்க்கிறது), சப்தம் (கேட்கிறது), ரஸம் (ருசி), கந்தம் (முகருகிறது)].

𑌯𑌂 𑌹𑌿 𑌨 𑌵𑍍𑌯𑌥𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌤𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌰𑍍𑌷𑌭 ।
𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌂 𑌧𑍀𑌰𑌂 𑌸𑍋𑌽𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 ॥

௧௫. ஓ புருஷர்களிற் சிரேஷ்டமானவனே! சமமான சுகதுக்கங்களையும், தைரியத்தையு முடைய எவனை, இவைகள் பாதியாவோ, அவனன்றோ மோக்ஷத்திற்குரியவனாகிறான்?

[இவ்வாறாக அந்தரேந்திரிய நிக்கிரகங் கூறப்பட்டது.

சுகத்தையும் துக்கத்தையும் சமமாக நினைக்கிற தைரியசாலியை இந்திரிய விஷயங்கள் பாதிக்கமாட்டா. மோக்ஷமடையத் தகுந்

தவன் அவனே. ௧௪,௧௫-வது சுலோகங்களில் யோகாப்பியாசத்திற்குச் சாதனங்களான முக்கியாம்சங்கள் சொல்லப்பட்டன.

புரி + சயன் = புருஷன் = சரீரத்திற் படுத்துக்கொண்டிருப்பவன்].

நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத:।
உபயோரபி த்ருஷ்டோऽந்தஸ்த்வநயோஸ்தத்த்வதர்ஶிபி:॥

௧௬. இல்லாத வஸ்துவுக்கு இருக்குந்தன்மை யில்லை. இருக்கும் வஸ்துவுக்கு இல்லாத தன்மையில்லை. இவ்விரண்டின் நிச்சயம் தத்துவத்தை (உண்மையை) யறிந்தவர்களால் தெரியப்பட்டது.

[இல்லாதது இருப்பதில்லை. இருப்பது இல்லாமற் போவதில்லை. அஸத்தியம் ஸத்தியமாகாது, ஸத்தியம் அஸத்தியமாகாது. ஸத்தியம் = எப்பொழுதுமுள்ளது; அஸத்தியம் = இல்லாமை. ஸத்திய வஸ்து எது, அஸத்திய வஸ்து எது, என்னும் நிச்சயம் ஞானிகளுக்குத்தான் தெரியும்.

பானை இருக்கின்றது, துணி இருக்கின்றது, மரம் இருக்கின்றது, சுவர் இருக்கின்றது, இவை முதலான ஞானங்களில் "இருத்தல்" என்னும் அம்சமொன்றிருக்கிறது. அது மாறுபடுவதில்லையாகையால், விகாரமற்றது. பானை, துணி முதலியவைகள் மாத்திரம் ஒவ்வொன்றும் மாறிக்கொண்டேயிருக்குமாதலால், விகாரமுடையவைகளெனப்படும். இந்த விகாரங்கள் ஒரு காலத்தில் இருக்கும், மற்றொருகாலத்தில் இரா, ஆகையால் இல்லாதவைகளே. இந்தக் காரணத்தினால் இவைகளுக்கு 'அஸத்துக்கள்' என்று பெயர். 'இருத்தல்', அதாவது, இருக்குந் தன்மையமைந்த வஸ்து ஒருபொழுதுமில்லாமற் போவதில்லை, ஆதலால், அதற்கு 'ஸத்து' என்று பெயர். இந்த ஸத்தே பிரம்மமென்றும், ஆத்மாவென்றும் சொல்லப்படுவது.

'அஸத்து' என்றால், நசிக்கும் ஸ்வபாவமுள்ள சரீரம். 'ஸத்து' அத்தன்மையதல்லாத ஜீவன். அஸத்தாகிய தேகம் ஸத்தாகிற

தில்லை (நசியாமலிருப்பதில்லை). ஸத்தாகிய (நசிக்குந்தன்மையில்லாத) ஜீவாத்மா அபாவத்தை யடைவதில்லை (அஸத்தாவதில்லை). இப்படிச் சரீராத்மவிவேகம் ஞானிகளா லறியப்பட்டது].

அவிநாஸி து தத் வித்தி யேந ஸர்வமிதம் ததம் ।
விநாஸமவ்யயஸ்யாஸ்ய ந கஸ்சித் கர்துமர்ஹதி ॥

௰௭. எதனால் இவையெல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, அதை நாசமில்லாததாக (அது நாசமற்றதென்று) அறி. விகாரமில்லாத இதற்கு, யாரும் நாசத்தை யுண்டாக்கமுடியாது.

[இந்தச் சுலோகம் பிரம்மத்துவத்தைக் குறித்துச் சொல்லுகின்றது. அசேதனமாகிய ஜடவஸ்துக்களிலெல்லாம், சேதனமாகிய ஆத்மா வியாபித்துக்கொண்டிருக்கிறதென்பது தாற்பரியம். ஜகத்துக் காதாரபூதமாகிய பரமாத்மா வொருவருண்டென்பது பகவத்கீதையின் நான்காவது ஸித்தாந்தம். இஃது இந்தச் சுலோகத்தில் வெளியிடப்பட்டது].

அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா: ஸரீரிண: ।
அநாஸிநோऽப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வ பாரத ॥

௧௮. எப்பொழுது முள்ளவனையும், ஞானத்துக்கெட்டாதவனையும், நாசமில்லாதவனையு மிருக்கிற சரீரி (சரீரத்தையுடையவன் = ஆத்மா) யினுடைய இந்தத் தேகங்கள் நாசமுள்ளவைகளென்று சொல்லப்பட்டன. ஓ பாரதா (அர்ச்சுனா)! ஆகையால், யுத்தம் செய்வாயாக.

[மணற்பாங்கின்மீது கானலினால் தோற்றிய ஜலஞானமானது தகுந்த பிரமாணங்களினால் நிவர்த்தியாவது போலவும், கனவிற் காணப்படுகிற மாயா சரீரங்கள் ஜாக்கிரதாவஸ்தையில் இல்லாதது போலவும், இந்தத் தேகங்களுக்கும் முடிவு உண்டு.

'ஞானத்துக் கெட்டாத' தென்றால், பிரத்தியக்ஷப் பிரமாணங்களினால் வருத்த்றியக் கூடாததென்று அர்த்தம்.

'தேகம்' என்னும் பதத்திற்கு 'சேர்க்கப்பட்டது' என்று பொருள்.

ஜீவாத்மாவானது, நம்மால் அறியப்படுகிற பானை, சட்டி முதலியவைகளைப்போல அறியப்படக்கூடிய வஸ்துவன்று. ஆனால், அறியும் வஸ்துவா யிருக்கிறது. அறிகிறவன் ஜீவாத்மா, அறியப்படுகிறவை மற்ற வஸ்துக்கள் ].

ய ஏநம் வேத்தி ஹந்தாரம் யஶ்சைநம் மந்யதே ஹதம் ।
உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹந்யதே ॥

௧௯. கொல்லுகிறவனாய் இவனை (தேஹியை) எவன் தெரிந்துகொள்கிறானோ, கொல்லப்படுகிறவனென்று இவனை யெவன் நினைக்கிறானோ, அவர்களிருவரும் அறியாதவர்களாயிருக்கிறார்கள். இவன் (தேஹி = ஆத்மா) கொல்லுகிறவனுமல்லன், கொல்லப்படுகிறவனு மல்லன்.

[வேதமந்திரத்தையே சுலோகமாக இவ்விடத்தி லெழுதப்பட்டிருக்கிறது.

கொல்லுகிறவனென்கிற கர்த்ருத்துவமும் கொல்லப்படுகிறவனென்கிற கர்மத்துவமும், விகாரங்களாகையால், பிரம்மத்துக்கு இல்லை].

ந ஜாயதே ம்ரியதே வா கதாசி
ந்நாயம் பூத்வா பவிதா வா ந பூய: ।
அஜோ நித்ய: ஶாஶ்வதோ(அ)யம் புராணோ
ந ஹந்யதே ஹந்யமாநே ஶரீரே ॥

௨௰. இந்த ஆத்மா பிறப்பவனுமல்லன், இறப்பவனுமல்லன். இவன் ஒரு காலத்திலில்லாமலிருந்து மறுபடியுண்டாகிறவனுமல்லன். இவன் பிறப்பில்லாதவன், நாசு

மற்றவன், எப்பொழுது மிருப்பவன், புராதனன், சரீரம் நாசஞ்செய்யப்பட்டாலும் இவன் நாசமாவதில்லை.

[அநித்திய வஸ்துக்களுக்கு ஆறு அவஸ்தைகளுண்டு. அவைகளுக்குப் பாவவிகாரங்களென்று பெயர். அவையாவன:—க. பிறத்தல், உ. இருத்தல், ங. பரிணமித்தல் (மாறுதல்), ச. வளர்தல், ரு. குறைதல், சு. நசித்தல். இந்த ஆறு விகாரங்களும் ஆத்மாவுக்கில்லையென்று இந்தச் சுலோகத்திற் குறிக்கப்பட்ட அடைமொழிகளினால் விளங்குகின்றது.

இந்த ஆத்மா நமது தேகங்களைப்போலப் பிறப்பிறப்பு உடையதன்று. கற்பத்தின் ஆதியிற் பிறந்து, கற்பத்தின் முடிவில் இறக்கின்ற பிரஜாபதி முதலானவர்களின் சரீரங்களைப்போல, ஒரு காலத்திற் பிறந்து, வெகுகாலம் ஜீவித்திருந்து, நசிப்பதுமன்று.

புராணன் (புராதனன்) = புரா + அபி + நவ: = பூர்வத்திலும் புதிதாயிருக்கப்பட்டவனே. முன்னேயிருந்ததைவிட இப்பொழுது புதியதன்மை எதும் உண்டாகவில்லை. எப்பொழுதும் அபூர்வமாகவே அனுபவிக்கப்படத்தகுந்தவன்].

வெதாவிநாஶிநம் நித்யம் ய எநமஜமவ்யயம் ।
கயம் ஸ புருஷ: பார்த்த கம் காதயதி ஹந்தி கம் ॥

உக. ஓ அர்ச்சுனா! நாசமில்லாதவனும், பிறப்பில்லாதவனும், க்ஷயமில்லாதவனும், (ஆகையால்) நித்தியனு(எப்பொழுது முள்ளவனு) மாயிருக்கின்ற இந்த ஆத்மாவை எவன் அறிகிறானோ, அவன் கொல்லுகிறதெப்படி? யாரைக்கொல்லுகிறது? யாரைக்கொல்லுவிக்கிறது?

[நாசமில்லாதவன்.— ஆறாவது பாவவிகாரமில்லாதவன்; பிறப்பில்லாதவன்.— முதலாவது பாவ விகாரமில்லாதவன்; விருத்திக்ஷயமில்லாதவன்.— நான்காவது, ஐந்தாவது பாவவிகாரங்களில்லாதவன்; நித்தியன்.— மூன்றாவது பாவவிகாரமில்லாதவன். பிரம்மஜ்ஞானமுள்ளவன் எல்லாக்கருமங்களையு மொழித்துப் பற்றற்றிருப்பான்.

நித்தியமாயுள்ள ஆத்மஸ்வரூபத்தை யறிந்தவன், சரீரத்தைப் போக்கடிக்கையில் ஆத்மாவைப் போக்கடித்ததாக நினைப்பானோ? நினைக்கமாட்டான்.

நாசமில்லாதவன்.—காரணாந்தரங்களினா லுண்டாகும் நாசமில்லாதவன்; நித்தியன்.—சுபாவமாயுள்ள, அல்லது, ஸ்வதஸ்ஸித்தமான நாசமில்லாதவன்].

𑌵𑌾𑌸𑌾𑌂𑌸𑌿 𑌜𑍀𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌯𑌥𑌾 𑌵𑌿𑌹𑌾𑌯
𑌨𑌵𑌾𑌨𑌿 𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌨𑌰𑍋𑌽𑌪𑌰𑌾𑌣𑌿 ।
𑌤𑌥𑌾 𑌶𑌰𑍀𑌰𑌾𑌣𑌿 𑌵𑌿𑌹𑌾𑌯𑌜𑍀𑌰𑍍𑌣𑌾
𑌨𑍍𑌯𑌨𑍍𑌯𑌾𑌨𑌿 𑌸𑌂𑌯𑌾𑌤𑌿 𑌨𑌵𑌾𑌨𑌿 𑌦𑍇𑌹𑍀 ॥

௨௨. கிழிந்துபோன உடுப்புக்களைத் தள்ளிவிட்டு வேறு புதியவஸ்திரங்களை மனிதன் எப்படி யெடுத்துக் கொள்கிறானோ, அப்படியே ஜீவாத்மாவானது மூப்பு முதிர்ந்த சரீரங்களை விட்டுப் புதிதாகிய வேறு சரீரங்களை யடைகின்றது.

[தேகத்தோடிருந்தாலும் ஆத்மாவுக்கு விகாரங்கள் (மாறுபாடுகள்) இல்லை.

தர்மயுத்தத்திற் சரீரத்தை விட்டவர்களுக்கு, அதைவிட மேலான ஸ்வர்க்க சரீரமுண்டாகுமென்று சாத்திரங்களிற் சொல்லப்படுவதனால், இவர்களை யுத்தத்திற் கொல்லுவதற்குச் சந்தோஷப்படவேண்டுமே யன்றி, துக்கப்படவேண்டியதில்லை.

தேகாத்ம விவேகானுபவத்தைக் குறிக்கும்பொருட்டு இந்தச் சுலோகத்தில் உதாரணம் காட்டப்பட்டது].

𑌨𑍈𑌨𑌂 𑌛𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌨𑍈𑌨𑌂 𑌦𑌹𑌤𑌿 𑌪𑌾𑌵𑌕𑌃 ।
𑌨 𑌚𑍈𑌨𑌂 𑌕𑍍𑌲𑍇𑌦𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌪𑍋 𑌨 𑌶𑍋𑌷𑌯𑌤𑌿 𑌮𑌾𑌰𑍁𑌤𑌃 ॥
𑌅𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌦𑌾𑌹𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌕𑍍𑌲𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌶𑍋𑌷𑍍𑌯 𑌏𑌵 𑌚 ।
𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌰𑌚𑌲𑍋𑌽𑌯𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ॥

உங-ச. ஆயுதங்கள் இவனை (ஆத்மாவை) வெட்டமாட்டா, நெருப்பு இவனைக் கொளுத்தாது, ஜலமும் இவனை நனைக்கமாட்டாது, வாயு உலரச்செய்யாது. ஆகையால், இவன் வெட்டப்படத்தகாதவன், இவன் கொளுத்தப்படத் தகாதவன், நனைக்கப்படத் தகாதவன், உலரச்செய்யப்படத் தகாதவனுமாயிருக்கிறான். எப்பொழுது முள்ளவன், எங்கு முள்ளவன், ஸ்திரமாயிருப்பவன்; (ஆகையாற்றான்) அசையாதவன். இவன் வெகுகாலத்தோன்.

[ஆத்மதத்துவத்தைத் தெரிந்துகொள்வது மிகுந்த கஷ்டமாகையாற் சொன்ன வார்த்தைகளையே சொல்லி, பகவானாகிய வாஸுதேவர் போதிக்கின்றார். "கூறியது கூறல்" என்னுந் தோஷஞ் சொல்லுவதாயின், ஆத்மதத்துவத்தைக் குறித்துச் சொல்லக்கூடியவைகளெல்லாம் உ௰-ஆவது சுலோகத்திலேயே அடங்கியிருக்கின்றன].

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌯𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌵𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌨𑌾𑌨𑍁𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

உரு. இந்த ஆத்மா வெளிப்படையா யறியப்படத் தகாதவன், இவன் நினைவுக்கெட்டாதவன், இவன் மாறுதலடையாதவனென்று சொல்லப்படுகிறான். அந்தக் காரணத்தினால் இவனை இப்படித் தெரிந்துகொண்டு, விசாரப்படத் தகாதவனாயிருக்கிறாய்.

[எந்தப்புலனாலு மறியப்படக்கூடாமையால் 'வெளிப்படையாய் அறியப்படத்தகாதவன்' என்றும், 'நினைவுக்கெட்டாதவ' னென்றும் சொல்லப்பட்டது].

𑌅𑌥 𑌚𑍈𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌜𑌾𑌤𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌾 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇 𑌮𑍃𑌤𑌮𑍍 ।
𑌤𑌥𑌾𑌪𑌿 𑌤𑍍𑌵𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌨𑍈𑌨𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

௨௬. இப்பொழுது, இந்த ஆத்மாவை, எப்பொழுதும் பிறக்கிறவனாகவாவது, எப்பொழுதும் இறக்கிறவனாக வாவது நீ நினைப்பாய். ஓ ப்ருத்த புஜங்களையுடையோனே! அப்படியானபோதிலும் நீ இவ்வாறு துக்கப்படுவது தகாது.

[ஆத்மாவை, பிறக்கிறதும் இறக்கிறதுமாயிருக்கிற சரீரமென்றே நினைப்பாயானாலும், நீ வியசனப்படக்காரணமில்லை.

ஆத்மாவானது எப்பொழுதுமுள்ளதாயிருந்தபோதிலும், தேகத்தோடு கூடுவது பிரிவது என்னப்பட்ட பிறப்பும் இறப்பும் ஆத்மாவுக்கு மோக்ஷபரியந்தம் தப்பாமல் உண்டாகின்றதென்று நீ நினைப்பாயானாலும், நீ துக்கப்பட நியாயமில்லை].

ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு: த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச ।
தஸ்மாதபரிஹார்யேऽர்தே ந த்வம் ஶோசிதுமர்ஹஸி ॥

௨௭. பிறந்த வஸ்துவுக்கு நாசம் தப்பாமல் வருமன்றோ? இறந்தவஸ்து மறுபடி பிறப்பதும் தப்பாது. ஆகையால், விலக்க முடியாத விஷயத்தில் நீ துக்கப்படுவது தகாது.

[நசித்துப் போனது மறுபடியும் பிறப்பது எப்படியெனின்,— பிறப்பும் நாசமும், இருக்கின்றவஸ்துவுக்கே சம்பவிக்கிற வேறு வேறு அவஸ்தைகளேயன்றி, புதிதாய் ஒரு வஸ்துவும் இல்லாதது பிறப்பதில்லை. பருத்தியை நூற்றால் நூலாகின்றது. நூலை நெய்தால் துணியாகின்றது. துணி கிழிந்துபோனால் நூலாகவாவது பருத்தியாகவாவது ஆகும். கடைசியிலும் நமது கண்ணுக்குப் படாத பருத்தியின் அவயவமாகவாவது ஆகுமேயன்றி, கொஞ்சங்கூட இல்லாமலேபோகாது. ஆகையால், நசித்துப்போகும் வஸ்துக்களெல்லாம், வேறு வஸ்துக்களாக ஆகுமாகையால், இந்தச் சுலோகத்திற்சொல்லியவார்த்தைக்குக் குறைவுவராது.

ஜன்மம், மரணம் ஆகியஇவ்விரண்டும் எப்பொழுதும் உள்ள வையாகையாற் சோகப்பட வேண்டிய அவசியமில்லை].

அவ்யக்தாதீநி பூதாநி வ்யக்தமத்யாநி பாரத ।
அவ்யக்தநிதநாந்யேவ தத்ர கா பரிதேவநா ॥

உஅ. ஓ பரத வம்சத்தோனே! மனிதன் முதலான பூதங்கள் தெரிந்துகொள்ள முடியாத ஆதியையுடையவை கள். அறியக்கூடிய மத்தியை யுடையன. அறிய முடி யாத நாசமுடையனவைகளா யிருக்கின்றன. அதில் துக்க மேன்?

[மனிதன் முதலிய பூதங்கள் எங்கே யிருந்து உண்டாயின வென்றும், அவை நாசமாகுங்கால் எங்கே போகின்றன வென்றும் நம்மால் அறிய முடியாமலிருக்கிறது. நடுவிற் சிலகாலம் நமக்குத் தெரிகின்றன. அவற்றின் வரவும் போக்கும் நமக்குப் புலப்படாம லிருக்க நாம் அவற்றின் நாசத்திற்காக வியசனப்படுவானேன்]?

ஆஶ்சர்யவத்பஶ்யதி கஶ்சிதேந
மாஶ்சர்யவத்வததி ததைவ சாந்ய: ।
ஆஶ்சர்யவச்சைநமந்ய: ஶ்ருணோதி
ஶ்ருத்வாப்யேநம் வேத ந சைவ கஶ்சித் ॥

உகூ. யாரேனும் ஒருவன் இவனை (ஆத்மாவை) அற் புதவஸ்துவைப்போலப் பார்க்கிறான். அப்படியே இன்னு மொருவன் அற்புதவஸ்துவைப் போலச்சொல்லுகிறான். இந்த ஆத்மாவை மற்றொருவன் அற்புதத்தைப்போலக் கேட்கிறான். இன்னுமொருவன், கேட்டபோதிலும், இந்த ஆத்மாவைத் தெரிந்துகொள்ளாதவனா யிருக்கிறான்.

[எவனேனுமொருவன் இந்த ஆத்மாவைப் பார்க்கின்றான். அவன் ஆச்சரியமான வஸ்துவைப்போன்றவன். எவனொருவன் இந்த

ஆத்ம தத்துவத்தைக்குறித்துச் சொல்லுகின்றானோ அவனும் ஆச்சரியமான வஸ்துவைப்போன்றவன். எவனொருவன் இந்த ஆத்ம தத்துவத்தைக் குறித்துக்கேட்கின்றானோ அவனும் ஆச்சரியமான வஸ்துவைப் போன்றவன். சாதாரணமாய், பிரதி மனிதனும், கேட்டபோதிலும், தெரிந்துகொள்ள மாட்டாதவனாயிருக்கின்றான், ஆயிரத்திலொருவன் தெரிந்துகொள்ளுகின்றான்].

[அற்புதவஸ்துவைப்போ லிருக்கிற இந்த ஆத்மாவை எவனேனுமொருவன் பார்க்கின்றான், எவனேனுமொருவன் சொல்லுகின்றான், எவனேனுமொருவன் கேட்கின்றான். உண்மையான நிலைமையில் ஜீவாத்மா இன்னதென்று யாருமறியார்].

[எவனுடைய பிரதிபிம்பமாகிய இந்த ஆத்மாவை நன்றாய்த் தெரிந்து கொள்வது கஷ்டமோ, அந்த ஈசுவரனுடைய சாமர்த்தியத்தைக்குறித்துச் சொல்லவேண்டிய தென்னை? என்று ஈசுவரனுடைய சாமர்த்தியத்தைப்பற்றி இந்தச் சுலோகத்திற் சொல்லப்பட்டது].

𑌦𑍇𑌹𑍀 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌵𑌧𑍍𑌯𑍋𑌽𑌯𑌂 𑌦𑍇𑌹𑍇 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌭𑌾𑌰𑌤 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

௩௰. ஓ பரதவம்சத்தோனே! ஸமஸ்தமான (எல்லாப்) பிராணிகோடிகளுக்கும் தேகம் நாசஞ்செய்யப்பட்டாலும், இந்தத் தேகத்தையுடையவனாகிய ஆத்மா எப்பொழுதுமுள்ளவன், நாசஞ்செய்யப்படமாட்டாதவன். ஆகையால் நீ பூதங்களை யெல்லாங்குறித்துத் துக்கப்படுவது தகாது.

𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌮𑌪𑌿 𑌚𑌾𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌕𑌮𑍍𑌪𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ।
𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌦𑍍𑌧𑌿 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

௩௧. இஃதன்றியும், உன்னுடைய சொந்ததர்மமாகிய க்ஷத்திரிய தர்மத்தை யாலோசித்துச் சஞ்சலப்படத்தகாய். தர்மம் தப்பாத யுத்தத்தைவிட மேலான தர்மம் க்ஷத்திரியனுக்கு வேறு இல்லது அன்றோ?

[யுத்தமானது பிராணிகளுக்கு ஹிம்ஸையைச் செய்தபோதி லும், அந்தப் பிராணிகள் மேலான தேகத்தை யடையும்படி செய் கிறதனால், யாகாதிகளிற் செய்யும் பசு (ஆடு) ஹிம்ஸையைப்போல, இதுவும் தர்மந்தப்பாததேயாகும். வைத்தியன் செய்கின்ற ரணச் சிகிச்சையானது ரோகிக்கு எப்படியோ அப்படியே, யாகாதிகளிற் பசு ஹிம்ஸையும் அவைகளை ரக்ஷிக்கும் பொருட்டே செய்யப்படு கின்றது].

யத்³ருச்ச²யா சோபபந்நம் ஸ்வர்க³த்³வாரமபாவ்ருதம் ।
ஸுகி²ந: க்ஷத்ரியா: பார்த² லப⁴ந்தே யுத்³த⁴மீத்³ருஶம் ॥

௩௨. ஓ குந்தியின் மகனே! பிரயத்தன மில்லாமலே நேர்ந்ததும், திறக்கப்பட்ட ஸ்வர்க்கத் துவாரத்தை யுடை யதுமான, இப்படிப்பட்ட யுத்தத்தைப் புண்ணியமுள்ள க்ஷத்திரியர்களடைகிறார்கள்.

[இப்படிப்பட்ட யுத்தம் யார்க்குப் பிராப்தியாகின்றதோ அந்த க்ஷத்திரியர்கள் சுகமுடையவர்களல்லரா]?

அத² சேத்த்வமிமம் த⁴ர்ம்யம் ஸங்க்³ராமம் ந கரிஷ்யஸி ।
தத: ஸ்வத⁴ர்மம் கீர்திம் ச ஹித்வா பாபமவாப்ஸ்யஸி ॥

௩௩. இனி நீ தர்மத்தினின்றும் புரளாத இந்த யுத் தத்தைச் செய்யாமற் போனால், அதனால் உன்னுடைய சொந்த தர்மத்தையும் கீர்த்தியையு மிழந்து பாபத்தை யடைவாய்.

[பசுபதியுடன் போராடியது முதலானவைகளால் அர்ச்சுன னுக்குக் கீர்த்தியிருந்தது.

சொந்த தர்மம்=சொந்த தர்மத்தை நடத்துவதற்குப் பயனாகிய நிகரில்லாச்சுகம்.

கீர்த்தி=யுத்தத்தில் ஜயிப்பதனாலுண்டாகும் கீர்த்தி].

𑌅𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑌥𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇𑌽𑌵𑍍𑌯𑌯𑌾𑌮𑍍 ।
𑌸𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌰𑍍𑌮𑌰𑌣𑌾𑌦𑌤𑌿𑌰𑌿𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

௩௪. உனக்கு ஸ்திரமான அபகீர்த்தியையுங்கூட ஜனங்கள் சொல்லுவார்கள். கௌரவமானவனுக்கு அபகீர்த்தி மரணத்தை விட அதிகம்.

𑌭𑌯𑌾𑌦𑍍𑌰𑌣𑌾𑌦𑍁𑌪𑌰𑌤𑌂 𑌮𑌂𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌮𑌹𑌾𑌰𑌥𑌾𑌃 ।
𑌯𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌤𑍍𑌵𑌂 𑌬𑌹𑍁𑌮𑌤𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌲𑌾𑌘𑌵𑌮𑍍 ॥

௩௫. பயத்தினால் நீ யுத்தத்தினின்று ஓடிப்போனாயென்று மஹாரதர்கள் நினைப்பார்கள். (இதுவரையில்) அவர்களால் நன்கு மதிக்கப்பட்டிருந்தாய். (இப்பொழுது) நீ அற்பனென்று நினைக்கப்படுவாய்.

(துரியோதனன் முதலிய மஹாரதர்கள் நீ கர்ணனையும் மற்றுமுள்ள சூரர்களையுங்கண்டு பயந்து யுத்தஞ்செய்யாது பின்னிட்டதாகக் கொள்வார்கள். நற்குணங்களமைந்த தீரனென்று உன்னைத் துரியோதனாதிகள் இதுவரையில் மதித்திருந்தார்கள்; இனி அவர்களுக்கு உன்பேரிலிருந்த மதிப்பு குன்றிவிடும்].

𑌅𑌵𑌾𑌚𑍍𑌯𑌵𑌾𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌬𑌹𑍂𑌨𑍍 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑌵𑌾𑌹𑌿𑌤𑌾𑌃 ।
𑌨𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌵 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌂 𑌤𑌤𑍋 𑌦𑍁𑌃𑌖𑌤𑌰𑌂 𑌨𑍁 𑌕𑌿𑌮𑍍 ॥

௩௬. உன்னுடைய சத்துருக்கள் உன் சாமர்த்தியத்தை நிந்தித்து, அநேகமான சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லுவார்கள். அதைக்காட்டிலும் மிகுந்த துக்ககரமானது வேறுண்டோ?

𑌹𑌤𑍋 𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 𑌜𑌿𑌤𑍍𑌵𑌾 𑌵𑌾 𑌭𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 𑌮𑌹𑍀𑌮𑍍 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 𑌕𑍃𑌤𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 ॥

௩௭. ஓ குந்தியின்மகனே! யுத்தத்திற் கொல்லப்பட்டு ஸ்வர்க்கத்தையாவது அடையலாம், ஜயித்து ராஜ்

யத்தையாவது அனுபவிக்கலாம். ஆகையால் யுத்தத்திற்காக (யுத்தஞ்செய்ய) நிச்சயம் செய்துகொண்டவனாய் எழுந்திரு.

[யுத்தத்தில் ஜயித்தாலும் லாபமுண்டு, மரித்தாலும் லாபமுண்டு. ஆதலால் மனதைத் திடப்படுத்திக்கொண்டு யுத்தத்திற்கு எழுந்திரு].

ஸுகது:கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ ।
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி ॥

௩௮. சுகதுக்கங்களையும், லாபாலாபங்களையும், ஜயாஜயங்களையும் சமமாகக்கொண்டு, பிறகு யுத்தத்திற்குத் தலைப்படு. இவ்வாறாக, பாபத்தை யடையாதவனாவாய்.

[நீ சுகத்தை விரும்பவும் வேண்டாம், துக்கத்தை வெறுக்கவும் வேண்டாம். இப்படி நீ யுத்தஞ் செய்வாயாயின் உனக்குப் பாபம் சம்பவியாது.

யுத்தஞ் செய்வதைக்குறித்து ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் இவ்விடத்திற் பிரஸ்தாபித்துப் புத்திமதி சொல்லியது ஆகஸ்மிகமாய்ச் சொன்னதே யொழிய வேறன்று. அதாவது, யுத்தஞ்செய்வதற்கு வேண்டிய உபாயங்களை அர்ச்சுனனுக்குப் புகட்டுவது அவருடைய முக்கியமான உத்தேசமன்று.

இப்படி, சரீரத்தைக்காட்டிலும் வேறாகிய ஆத்மாவைத் தெரிந்துகொண்டு, யுத்தத்தில் ஆயுதங்கள் தாக்குவதனாற் சுக துக்கங்கள் முதலியவைகளுண்டானபோதிலும் புத்தி தடுமாறாமல், ஸ்வர்க்காதி பயன்களைக் கருதாமல், யுத்தத்தைச் செய்யக்கடவாய். இப்படிச்செய்தால், பாபத்தை, அதாவது, துக்கரூபமான ஸம்ஸாரத்தை யடையாய்—என்றும் அர்த்தங்கொள்ளும்].

ஏஷா தேऽபிஹிதா ஸாங்க்யே
புத்திர்யோகே த்விமாம் ஶ்ருணு ।
புத்த்யா யுக்தோ யயா பார்த
கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி ॥

௩௯. ஸாங்கிய ரீதியாக உனக்கு இந்தப்புத்தி சொல்லப்பட்டது. யோக ரீதியாக இந்த (பின்சொல்லப்போகிற) புத்தியையும் கேட்பாயாக: எந்தப் புத்தியுடையவனாய் நீ கர்மபற்றை விடக்கூடுமோ?

[௩௧-ஆவது சுலோகம் முதல் இதுவரை, அர்ச்சுனனுடைய சோகமோகங்களைப் போக்குவதற்கு லௌகிக நியாயம் சொல்லப்பட்டது. இது முக்கியோத்தேசமாகச் சொல்லப்படவில்லை, ஆகவின், முதலில் ஆரம்பிக்கப்பட்ட பரமார்த்த ஜ்ஞானமே இந்தச் சுலோகத்திற் பூர்த்தி செய்யப்பட்டது.

ஸாங்கியபுத்தி=பரமார்த்தஜ்ஞானம். அதுவே ஸம்ஸாரத்திற்கு ஹேதுக்களாகிய துக்கம் அஜ்ஞானம் முதலான தோஷங்களை நேராக நிவிர்த்தி செய்யும். யோகம்=அந்தப் பரமார்த்த ஜ்ஞானத்தை யுண்டுசெய்கிற கர்மயோகம். இது சுகம் துக்கம் முதலாகிய த்வந்த்வங்களைவிட்டு, ஈசுவரனை யாராதிக்கும் நிமித்தமாய்க் கர்மங்களைச்செய்வதும், ஸமாதியோகஞ் செய்வது மடங்கியது. இந்த யோகத்தினால் ஈசுவரப் பிரஸாதமுண்டாய், அதனால் ஞானோதயமாகி, புண்யபாபங்களின் பற்று அறும்.

ஸாங்கிய மார்க்கத்தை இதுவரை யுபதேசித்தேன். இனி யோகமார்க்கத்தைச் சொல்லுகிறேன். இந்த யோகமார்க்கத்தை அநுசரிப்பதனால் நீ கர்ம பந்தத்தைப் போக்கிக்கொள்ளலாகும்].

[ஸாங்கியமும் யோகமும் 'ஷட் தர்சனங்கள்' என்னப்பட்ட மதக்கோட்பாடுகள் ஆறினுட் சேர்ந்தவை. தத்துவ விசாரணை செய்வதும் ஊகிப்பதுமாகிய பரோக்ஷஜ்ஞானத்தை யுணர்த்துவது 'ஸாங்கியமாகும்.' சாதனைகளடங்கியதும் நீதி வைராக்கியங்களை வற்புறுத்திச் சமதமாதி இந்திரிய நிக்கிரஹ பூர்வகமாகத் தியானம் தாரணை ஆகிய இவைகளின் விசேஷத்தினாற் பரமாத்மாவுடன் ஐக்கியமாகும் வழியைக்காண்பிப்பதும் 'யோகம்' ஆகும். இதையே பக்தி மார்க்கமெனவுந் தகும். ஆத்மா நித்தியம், அதற்கு ஒருதேகம் போனால் மற்றொருதேகம் வரும் என்பது முதலாக உபதேசித்தனவெல்லாம் 'ஸாங்கியம்' எனப்படும். இந்தக்கோட்பாடுகள் யோக மதத்தி

மூமுண்டு, அதாவது, இவைகள் ஸாங்கியத்திற்கும் யோகத்திற்கும் ஸாமான்யமானவைகள். இனி யோகத்திற்குமாத்திரமே யுரிய கோட்பாடுகள் போதிக்கப்படுகின்றன. இவை அர்ச்சுனனுக்கு ஆறுதல் காட்டித் தைரிய மூட்டுகின்றன.

'கர்மபந்தம்' அல்லது 'கர்மப்பற்று' என்னும்பதம் அடிக்கடி இந்தப் புத்தகத்தில் உபயோகப்படுத்தப்படுகின்றது. ஹிந்துதத்துவ சாத்திரத்தின்படி பிரயத்னம்வீண்போகாது,பிரதிபயனைவிரும்பிச் செய்யப்பட்ட காரியங்களனைத்தும்—பூலோகசுகத்தை விரும்பித் தனதாசையை நிறைவேற்றிக்கொள்ளும்பொருட்டாவது, அல்லது, ஸ்வர்க்கானுபவம் கிடைக்குமென்னு மெண்ணத்துடனாவது செய்தால்—அவைகளுக்குத் தகுந்த பிரயோசனமில்லாமற்போவதில்லை. முக்கியமாய், பூமியில் மறுபடி பிறக்கவேண்டியது அவசியமாயேற்படுகின்றது. இந்தப் பிறவித் துன்பத்தையும், இந்த ஜன்மத்தில் நாம் செய்யும் காரியங்களின் பயனை யனுபவிக்க மறுபடி பூமியில் அநேக ஜன்மங்களெடுத்துப் படும் தண்டனையையும் விலக்கும் பொருட்டே தத்துவசாஸ்திரவிசாரணை செய்கின்றார்கள்].

[ஸாங்கியம்=புத்தியினால் தெரிந்துகொள்ளவேண்டிய ஆத்ம தத்துவம். ஸாங்கியஜ்ஞானம்=அப்படிப்பட்ட நித்தியமான ஆத்ம தத்துவத்தைத் தெரிந்துகொள்ளல். இது உ-ஆவது அத்தியாயம், ௰௨-ஆவது சுலோகம் முதல் உ-ஆவது அத்: ௩௰-ஆவது சுலோகம் வரைக்கும் சொல்லப்பட்டது. யோகம் = ஆத்மஜ்ஞான பூர்வகமான மோக்ஷத்திற்குச் சாதனங்களாயுள்ள கர்மங்களை யாசரிப்பதிற்புத்தி யுண்டாவது].

[ஸாங்கியம்=பரிசுத்தாத்ம தத்துவஜ்ஞானம். புத்தி=வாக்கு. ஆத்மஜ்ஞானத்தைக்குறித்த விஷயங்கள் சொல்லப்பட்டன. இனி, யோகம், அதாவது, உபாயத்தைக்குறித்த விஷயங்கள் சொல்லப்படும்].

நேஹாபிக்ரமநாசோஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே ।
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ॥

௪௰. இதில் ஆரம்பம் கெட்டுப்போவதில்லை; தப்பு இல்லை. இந்தத் தர்மத்திற் கொஞ்சமாகிலும் (இந்தத்

தர்மத்தைக் கொஞ்சம் அநுசரித்தாலும், அது பெரிய பயத்தினின்றும் காப்பாற்றுகின்றது.

[ஆரம்பம் கெடுவதில்லையென்றால் பயனுண்டாகாமற் போவதில்லை என்று அர்த்தம். பிரயத்தனஞ் செய்ததற்குத் தகுந்தபடி பயன் கிடைக்கும். பயம்=ஸம்ஸார பயம். தப்பு=சிகிச்சை செய்வது முதலிய காரியங்களில் உண்டாவதைப்போன்ற தப்பு. அன்றியும், ஆரம்பித்த காரியத்தை மத்திய காலத்தில் விடுவதனாலுண்டாகுந் தோஷத்திற்கும் தப்பு என்று சொல்லலாம்].

[இந்தக் கர்மயோகத்தை ஆரம்பித்து, அது நிர்விக்கினமாய் நடந்தேறாவிடினும் குற்றமில்லை. அதனாற் பாபம் விளையாது. இந்த யோகத்தைக் கொஞ்சமாத்திரம் ஆரம்பம் செய்தாலும் அது ஜநந மரண பயத்தைப்போக்கும்].

வ்யவஸாயாத்மிகா பு₃த்₃தி₄ரேகேஹ குருநந்த₃ந ।
ப₃ஹுஶாகா₂ ஹ்யநந்தாஶ்ச பு₃த்₃த₄யோ(அ)வ்யவஸாயிநாம் ॥

சக. ஓ குருவம்சத்தோனே! இதில் நிச்சய ஸ்வபாவமான புத்தி ஒன்று. நிச்சயமில்லாதவர்களுடைய புத்திகள் அநேகங் கிளைகளுள்ளனவாயும் அநந்தங்களாயுமிருக்கின்றன.

[நிச்சயஸ்வபாவமான புத்தி=இந்த உத்தமமார்க்கத்தில் (சிரேயோமார்க்கம், அல்லது, ஹிதவழியில்) நல்ல பிரமாணங்களினாற் பிறந்த நிச்சய ஸ்வபாவமுடைய ஸாங்கிய புத்தியும், யோக புத்தியும். இப்படிப்பட்டதல்லாத விபரீத புத்திகளே நிச்சயமில்லாத புத்திகள். அப்புத்திகளையுடையவர்கள் "அவ்யவஸாயிகள்" என்படுகின்றார்கள், அதாவது, ஸத்பிரமாணங்களினாற் பிறந்த விவேக ஜ்ஞான மில்லாதவர்கள்].

[வியவஸாயம்=நிச்சயம்=ஆத்மா சத்தியமென்னும் நிச்சயம்= ஆத்மஜ்ஞானம். மோக்ஷ இச்சையுள்ளவன் ஆசரிக்கும் கர்மங்களில் அவனுக்கிருக்கும் புத்தி ஆத்மஜ்ஞானத்துடன் கூடியதாகையால், "வியவஸாயாத்மிகம்" (நிச்சய ஸ்வபாவமுள்ளது) எனப்

படும். காம்ய கர்மங்களை யாசரிப்பதில் (பயனை விரும்பிக் கர்மங்களைச் செய்வதில்) ஆத்மஸ்வரூபத்தின் உண்மை விளங்காவிடினும் ஸ்வர்க்கம் முதலான பயன்களை விரும்பிக் கர்மங்களைச் செய்து பயனை யனுபவிப்பது ஏற்படுகிறபடியால், காம்யகர்ம விஷயமான புத்தி "அவ்யவஸாயாத்மிகம்" (நிச்சயமில்லாதது) எனப்படும். நிச்சய ஸ்வரூபமுள்ள புத்தி மோக்ஷமொன்றையே விரும்புமாதலின், அஃது 'ஒன்று' எனப்பட்டது. "அவ்யவஸாயிகள்"=ஸ்வர்க்கம், புத்திரர், பசுக்கள், அன்னம் முதலான பயன்களுக்குச் சாதனமான கர்மங்களை யாசரிப்பவர்கள். இவர்களுடைய புத்திகளும், பயன்களும் எண்ணித்தொலையாவாகையால், "அநந்தங்கள்" என்று சொல்லப்பட்டன. இக்கர்மங்கள் ஒவ்வொரு முக்கியமான பயனை யுத்தேசித்து விதிக்கப்பட்டிருந்தபோதிலும், தர்சபூர்ணமாஸம் * முதலியகர்மங்களைச் செய்தால் ஆயுள்விருத்தியாவதுபோல், இந்தக் கர்மங்களுக்கு அநேக அவாந்தரப்பலன்கள் † உண்டு; ஆகையால், வெகு 'கிளைகளுள்ளன' வென்று சொல்லப்பட்டது. பிரதானபலன்களையும் அவாந்தரபலன்களையும் ஆசியாமல், மோக்ஷமொன்றையே உத்தேசித்து நித்திய நைமித்திக கர்மங்களை ‡ யாசரிக்கவேண்டும். அவரவருடைய வர்ணாசிரமத்திற்குத் தகுந்த காம்ய கர்மங்களை, அவைகளின் பயன்களைக் கருதாமல், மோக்ஷசாதனங்களாகவே, நித்தியநைமித்திக கர்மங்களோடு சேர்த்துச் சக்தியானுசாரமாய் ஆசரிக்கவேண்டும்].

[புத்தியென்பது மனோவியாபாரத்தின் ஒருவகை மாறுபாடு. 'நிச்சயாத்மகம்' புத்தி; ஆங்கிலத்தில் Intelligence, Mental activity

---

* தர்சபூர்ணமாஸம்=யஜ்ஞ யாகாதிகர்மங்களிலொன்று.

† மத்தியில், தான் விரும்பாமல், பிராப்தியாகும் பயன். தச்சுவேலை செய்பவனுக்குக் கூலிகிடைப்பது பிரதான (முக்கியமான) பயன். அவன் வேலைசெய்வதனால் புஜவலிமை யுண்டாவது அவாந்தரபலன்.

‡ ஸந்தியாவந்தனாதிகள் நித்தியகர்மங்கள். அப்போதைக்கப்போது ஒருபயனை உத்தேசித்துச்செய்யும் காம்யகர்மங்கள் நைமித்திகமாகும்.

என்பன ஒவ்வும். இதனின்று, ஒருவனை நினைவுக்கும் அபிப்பிராயத்திற்கும் புத்தியென்று சொல்லலாயிற்று. மறுபடியும், மனதினால் நினைக்கப்பட்டதைக் குறிக்கும்பொருட்டுப் புத்தியென்னும் பதமே உபயோகமாயிற்று; அதாவது, நினைவின் விஷயம், உத்தேசம், பாவம் ஆகிய இவைகளைக்குறித்தது. இந்தச்சுலோகத்தில் 'புத்தி' யென்னும் பதத்தை உத்தேசம், அல்லது, விஷயமென்னும் அர்த்தங்கொடுப்பதாய்க் கொண்டால், "இதில் (யோகாப்பியாஸத்தில்), ஓ குருவம்சத்தோனே! சர்வதத்தன்மையுள்ள ஒரே விஷயமுண்டு (அதாவது, மூக்திபெறல்). ஊக்கமில்லாதவர்களின் உத்தேசங்கள் பல உள. அவைகள் எண்ணிறந்தவை; முடிவற்றவை" என்று பொருள்படும்].

யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவத³ந்த்யவிபஶ்சித꞉ ।
வேத³வாத³ரதா꞉ பார்த² நாந்யத³ஸ்தீதி வாதி³ந꞉ ॥
காமாத்மாந꞉ ஸ்வர்க³பரா ஜந்மகர்மப²லப்ரதா³ம் ।
க்ரியாவிஶேஷப³ஹுலாம் போ⁴கை³ஶ்வர்யக³திம் ப்ரதி ॥
போ⁴கை³ஶ்வர்யப்ரஸக்தாநாம் தயாபஹ்ருதசேதஸாம் ।
வ்யவஸாயாத்மிகா பு³த்³தி⁴꞉ ஸமாதௌ⁴ ந விதீ⁴யதே ॥

௪௨-௪. ஓ பார்த்தா! பலஸாதனங்களைக் குறித்த (பயன்களைத்தரும் காரியங்களைச்சொல்லுகிற) வேதவாக்கியங்களில் ஆசையுள்ளவர்களும், கர்மத்தைவிட இதரமானது (வேறு) இல்லையென்று சொல்பவர்களும், பயனை விரும்புவதே ஸ்வபாவமாயுள்ளவர்களும், ஸ்வர்க்கத்தின்மீது ஆசையுள்ளவர்களுமாகிய அற்பஜ்ஞானிகள் பிறப்பென்னுங் கர்மப் பயனைக் கொடுக்குந் தன்மையதும், சுகானுபவத்தையும் ஐசுவரியத்தையும் அடைவதற்குரிய அநேக கர்ம விசேஷங்களுடையதுமான, மலர்ந்த புஷ்பத்தைப்போற் சோபியாநின்ற (பிரகாசிக்கிற) இந்த வாக்கியத்தைச் சொல்லுகிறார்கள். இந்த வார்த்தைகளினால் அபஹரிக்கப்பட்ட மனதுடையவரும், சுகானுபவத்திலும்

ஐசுவரியத்திலும் ஆசை யுடையவருமான இவர்களுடைய மனதில் நிச்சய ஸ்வபாவமான புத்தி உண்டாகாது.

['வேதவாக்கியங்களில் ஆசையுள்ளவர்களும், கர்மத்தைவிட இதரமானது இல்லையென்று சொல்பவர்களும்'.—வேத வாக்கியங் களிற் சொல்லியபடி அணுவும் பிசகாமல் நடந்தால் நற்கதி யடை யலாமென்று யூதமதஸ்தர்களு மிப்படியே நம்புகிறார்கள்.

'ஸ்வர்க்கத்தின்மீது ஆசை'.—ஸ்வர்க்கமென்பது நிரந்தரமாய் ஒருவன் தங்கி இருக்கக்கூடிய இடமன்று. ஸ்வர்க்கானுபவம் சொற்பகாலந்தான் இருக்கும். அது சாசுவதமான பதவி அன்று. பௌதிகப் பிரபஞ்சத்தைப்போல் அதுவும் நாசமடையக்கூடியதே. மோக்ஷம் ஒன்றே உத்தமமான பதவி.

'பிறப்பென்னும் கர்மப்பயனைக் கொடுக்குந்தன்மையது'.—மறு ஜன்மத்திற் சுகமான பதவியும் மேன்மையும் அடையலாமென்று ஆசைகாட்டி நற்கர்மங்களைச் செய்யும்படி தூண்டுவது.

'மலர்ந்த புஷ்பத்தைப்போற் சோபியாநின்ற'.—உயிர்நிறவனா அலங்காரமாயும் ஆனந்தகரமாயுமுள்ள புஷ்பத்தைவிடப் பழமா னது நீடித்து அனுபவிக்கக்கூடிய ஆனந்தத்தைத் தரத்தக்கது.சாசு வதமில்லாத ஆனந்தத்தைக் குறிக்கவேண்டிய நிமித்தம் இங்கே பழத்திற்கு எதிரிடையாய்ப் புஷ்பத்தை உவமானங் கொடுக்கப்பட் டது.

வேதத்தினுட் கர்மகாண்டத்தை விசேஷமாகக் கொண்டாடி அனுஷ்டிப்பவர்கள் பூர்வமீமாம்ஸகர்களாதலின், இந்தச் சுலோகங் களிலடங்கிய வாக்கியங்கள் அவர்களை உத்தேசித்துச் சொல்லப் பட்டனவென்று தோன்றுகிறது].

['புஷ்பத்தைப்போற் சோபியா நின்ற'.—மேலுக்கு மாத்திரம் ஸுந்தரமாயிருக்கிற.

'கர்மத்தைவிட இதரமானது இல்லையென்றுசொல்பவர்கள்'.—ஸ்வர்க்கம் முதலியவைகளைவிட மேலான பிரயோஜனம் இல்லை என்பவர்கள்.

'பயனை விரும்புவதே ஸ்வபாவமாயுள்ளவர்கள்'.—கர்மத்தின் கண் மனத்தை யுடையவர்கள்.

'பிறப்பென்னும் கர்மப்பயனைக் கொடுக்குந்தன்மையது'.—ஸ்வர்க்காதி போகங்களை அனுபவித்த பிறகு ஜன்ம கர்ம மென்னும் பயனைக் கொடுப்பது.

'அபகரிக்கப்பட்ட மனதுடையவர்'.—அபகரிக்கப்பட்ட ஆத்மஜ்ஞானமுடையவர்=ஆத்மஜ்ஞானமில்லாதவர்.

'நிச்சயஸ்வபாவமான புத்தி'.—ஆத்மா யதார்த்தமென்னும் நிச்சயத்துடன் கூடியதும், மோக்ஷத்திற்குச் சாதனபூதமாயு மிருக்கிற கர்மவிஷயஜ்ஞானம். மோக்ஷத்தை இச்சிப்பவன் காம்யகர்மங்களிற் சம்பந்தப்படலாகாது].

[வேதங்களில் மேலுக்கு என்ன அர்த்தம் ஆகின்றதோ அந்த அர்த்தத்தில் ஆசை யுள்ளவர்கள் மோக்ஷமென்னும் பழத்தை விரும்பி, ஸ்வர்க்காதி புஷ்பங்களுடன் கூடிய வார்த்தைகளைச் சொல்லுகிறார்கள். (வேதங்கள் பரோக்ஷமாய்ப் பகவானைக் குறித்துச் சொல்லுகின்றன). போகத்தையும் ஐசுவரியத்தையும் அடைவதே வேதங்களின் பயன் என்பார்கள். இவர்களுக்கு ஈசுவரனிடத்தில் மனது சமாதானமடையும் பொருட்டான யுக்தியினால் நிர்ணயிக்கும் புத்தி உண்டாகாது. அந்தச் சமாதானமே மோக்ஷ சாதனம்].

[அவர்கள் மதியீனர்கள். அவர்களுக்குப் பகுத்தறிவுபோதாது. அநேக பயன்களையும் சாதனங்களையும் உத்தேசித்துத் தேவதைகளைக் குறித்துத் துதியாய்ச் சொல்லப்பட்டுள்ள வேதவாக்கியங்களைக்கண்டு இவர்கள் மோகிக்கின்றார்கள். ஸ்வர்க்கானுபவத்தையும் பசுக்கள் முதலிய பாக்கியத்தையும் மற்றுமுள்ள போக்கியங்களையும் அடைவதற்குக் காரணமாகிய கர்மத்தைத் தவிர வேறொன்றும் இல்லையென்று சொல்லுவார்கள். அவர்கள் ஆசைநிறைந்தவர்கள்; எப்பொழுதும் காமத்தையே விரும்பி அலைகின்றார்கள். அவர்களுடைய ஆசையின் முக்கியோத்தேசமான முடிவு ஸ்வர்க்கப்பேறு. பார்ப்பதற்குப் பூத்தமரத்தைப்போல் ரம்மியமாயும் கேட்பதற்கு மிகவும் இனிமையாயுமுள்ள வார்த்தைகளைச் சொல்லுகின்றார்கள்; கர்மம் செய்தவன்பயன் மறுபடி பிறப்பதே என்று அவர்கள் சொல்லுகிறார்கள். ஸ்வர்க்கத்தையும் பிரஜை பசுவாதிகளையும் பெற்று

போகைசுவரியங்களை அனுபவிப்பதற்குச் சாதனமான விசேஷ கர்மங்களையும் அவர்கள் எடுத்துச்சொல்லுகின்றனர்; இவ்வாறு சொல்லிக்கொண்டு இப்பேதைகள் ஸம்ஸாரத்தில் உழன்று தடுமாறுகின்றனர். போகைசுவரியங்கள் அவசியமாயிருக்க வேண்டுமென்பது இவர்கள் கருத்து. இவர்கள் அவைகளில் ஆசைகொண்டிருப்பதுமன்றி, அந்தப் போகைசுவரியங்களே தாங்களென்றும் பாவிக்கின்றனர். கர்மபல விசேஷங்களையே எடுத்துரைக்கும் இந்த வாக்கியங்களினால் இவர்களது விவேகமும்புத்தியும்(ப்ரஜ்ஞானமும்) மூடப்பட்டு மங்கிப்போயின. இவர்களுடைய மனதிற்—புருஷனுடைய போகங்களுக்கு இடமாகிய அந்தஃகரணத்தில், புத்தியில், ஸமாதியில்—ஸாங்கியத்தைக் குறித்தாகிலும், யோகத்தைக் குறித்தாகிலும் உறுதியான புத்தியுண்டாகாது].

𑌤𑍍𑌰𑍈𑌗𑍁𑌣𑍍𑌯𑌵𑌿𑌷𑌯𑌾 𑌵𑍇𑌦𑌾 𑌨𑌿𑌸𑍍𑌤𑍍𑌰𑍈𑌗𑍁𑌣𑍍𑌯𑍋 𑌭𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌨𑌿𑌰𑍍𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌥𑍋 𑌨𑌿𑌰𑍍𑌯𑍋𑌗𑌕𑍍𑌷𑍇𑌮 𑌆𑌤𑍍𑌮𑌵𑌾𑌨𑍍 ॥

௪௫. வேதங்கள் ஸத்வரஜஸ்தமமென்னும்முக்குணங்களை விஷயமாகக் கொண்டிருக்கின்றன. ஓ அர்ச்சுன! மூன்றுகுணங்களும் இல்லாதவனாகவும், குளிர் சூடு முதலான இரட்டைகள் (தொந்தங்கள்) இல்லாதவனாகவும், எப்பொழுதும் ஸத்வகுணத்திலேயே இருப்பவனாகவும், யோகக்ஷேமங்கள் இல்லாதவனாகவும், ஆத்மஜ்ஞானமுள்ளவனாகவும் நீ ஆவாயாக.

[வேதங்கள் (கர்மகாண்டம்) ஸத்வரஜஸ்தமோகுணங்களைப் பற்றிச் சொல்லுகின்றன; ஸம்ஸாரமே அவற்றின் விஷயம். மேற்கூறிய முக்குணங்களின் சம்பந்தாசம்பந்தங்களினாற்புண்ணியகர்மங்களும், பாபகர்மங்களும், மிசிர (கலப்பு) கர்மங்களும், இவற்றின் பயன்களும் ஸம்ஸாரத்தில் உண்டாகின்றன. ஆனால், நீ முக்குணங்களையுங் கடந்து நிற்கக்கடவாய், அதாவது, ஆசைகளற்று இருப்பாயாக. சுகதுக்கங்களுக்குக் காரணமாகிய இரட்டை (தொந்தங்)களுக்கு உள்ளாகாதே. எப்பொழுதும் ஸத்வகுணத்தைக் கைப்பற்றி இருப்பாயாக. சுத்தத்தைக்கொண்டு இல்லாததைச் சம்

பார்திக்கவும், சம்பாதித்ததைக் காப்பாற்றவும் விருப்பமுள்ளவனுக்குத் தர்மமார்க்கம் பிடிபடாது; ஆகையால், புதிதாய்ச் சம்பாதிக்க வேண்டுமென்னும் விருப்பத்தைத் தவிர்த்துவிடு, பழையவற்றைக் காப்பாற்ற வேண்டுமென்னும் கவலையைப்போக்கி நில். மேலும், ஆத்மாவை அறி; இந்திரியவிஷயங்களுக்கு இணங்காதே, ஜாக்கிரதையாய் இரு. உன்னுடைய கடமையைச் செய்யுங்கால் மேற்கூறிய புத்திமதியைக் கைக்கொண்டு நீ நடக்கவேண்டியது.

வைதிக கர்மங்களினால் உண்டாகும் அநந்தமான பிரயோஜனங்களையும் நாடக்கூடாதென்னின், அக்கர்மங்களைச்செய்து ஈசுவரார்ப்பணஞ் செய்வதனாற் பயனென்னை எனின்,—பின் வரும் சுலோகத்தைக் கவனிப்பாய்].

['யோகம்' என்றால் தனக்கு இல்லாததைச் சம்பாதித்தல்; அதைக் காப்பாற்றிக் கொள்ளல் 'க்ஷேமம்.'

மூக்குணம் பொருந்தியது (த்ரைகுண்யம்), என்பது ஸம்ஸாரம். மூன்று குணங்களு மில்லாதிருத்தல்—ஆசைகளுக்கு இடங்கொடாதிருத்தல்].

[மூக்குணங்கள் என்னும் சொல்லினால் ஸத்வரஜஸ்தமோ குணங்களையுடைய புருஷர்களைக் குறித்ததாகக் கொள்ளலாம். அவரவர்களுக்குத் தகுந்த ஹிதங்களை வேதங்கள் கூறுகின்றன. அந்நியோன்யமாய்க் கலந்திருக்கும் மூன்று குணங்களையும் நீ விருத்தி செய்வியாமல், ஸத்வ குணத்தை மாத்திரம் பெருக்கிக்கொள்வாயாக. ஆத்மஸ்வரூபமும் அதை அடைவதற்கான ஸாதனமும் தவிர வேறு யோக க்ஷேமங்கள் எவையும் இல்லாதவனாய், ஆத்ம ஸ்வரூபத்தையே தேடுவாயாக].

[மூக்குணம் பொருந்தியதெனின், ஸத்வரஜஸ்தமோகுண ஸம்பந்தமான ஸ்வர்க்காதிகளைச் சேர்ந்தது. அது வேதத்திற்கு வெளிப்படையாய் மேலுக்குத் தோற்றுகிற அர்த்தம். அப்படிப்பட்ட அர்த்தத்தைக் கண்டு நீ பிரமைப் படாதே. வேதங்கள் ஸ்வஸ்வரூபத்தில் (யதார்த்தமாய்) ஸ்ரீமகாவிஷ்ணுவைத் தெரியப் படுத்துகின்றன].

[கஎ-வது அத்தியாயத்தில் மூன்று குணங்களையும்பற்றி விவரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக் குணங்கள் பிரகிருதிக்கு

உரியவைகள், பிரகிருதியுடன் இடைவிடாது சேர்ந்திருக்கும்; தடுக்கமுடியாதசக்திகளென்று இவற்றைச் சொல்லத்தகும். இந்தக் குணங்கள் ஒன்ருேடொன்று கலந்து நிற்கும் ஏற்றத் தாழ்வுக்குத் தகுந்தபடி மனிதர்களுடைய குணகுணங்களும் இயல்பும் ஏற்படுகின்றன. எல்லாவஸ்துக்களுக்கும் உயர்வுதாழ்வு என்பன இந்தக் குணங்கள் ஒன்ருேடொன்று கலந்து நிற்கும் அளவின் வித்தியாசத்திஞலேயே அமைகின்றன. சுருக்கிச்சொல்லின், நன்மைதீமை என்னும் தன்மைகள் இதஞலேயே உண்டாகின்றன. மூக்குணங்களாவன:—

க. ஸத்வம்,—'யதார்த்தம், உண்மை, நன்மை;'

உ. ராஜஸம்,—'உற்சாகம், சுறுசுறுப்பு, தீமை;'

ங. தாமஸம்,—'மங்கல், அறியாமை, சோம்பல், உபேக்ஷை.'

இவைகளைத் தவிர்க்கவேண்டுமென்று அர்ச்சுனனுக்கு எச்சரிக்கை செய்வதஞல், அவன் அவைகளைக்கண்டுகொண்டு தன்னுடைய செய்கைகளிலும் மனேவியாபாரங்களிலும் அந்தக் குணங்களின் ஆற்றலை அடக்கி ஒட்டிவிட்டு, உற்சாக விசையிஞலல்லாமல் அறிவிஞல் ஊகித்து நடக்கவேண்டுமென்பது கருத்து].

["யோக க்ஷேமம்" என்பது தர்மசாஸ்திரவசனம். இருதரத்தாரில் ஒருவர் மற்றவருடைய சொத்து, அல்லது, உயிரையுங் கூடப் பாதுகாத்து அவைகளுக்கு உத்தரவாதமாயிருப்பதற்குச் சம்மதித்திருக்கும் ஓர் ஒப்பந்தம் என்று அர்த்தம். ஆகையால் ஒருவன் தன்னுடைய சொத்து, அல்லது, பொதுவாய் ஐஹிக (இவ்வுலகத்து) விஷயங்களுக்காகப்படும் கவலையைக் குறித்ததென்க.—மனு ஸ்மிருதி, VII., கஉஎ, VIII., உஙo].

யாவாநர்த²உத³பாநே ஸர்வத꞉ ஸம்ப்லுதோத³கே ।
தாவாந்ஸர்வேஷு வேதே³ஷு ப்³ராஹ்மணஸ்ய விஜாநத꞉ ॥

சசு. கிணறு முதலானவைகளிஞல் எவ்வளவு பிரயோஜனமுண்டோ அவ்வளவு பிரயோஜனம், முழுவதும் ஜலம்நிரம்பிய இடத்திஞலும் உண்டாகின்றது. வேதங்களிற் சொல்லப்பட்ட கர்மங்களிஞல் எவ்வளவு பிரயோஜன

மூண்டோ அவ்வளவு பிரயோஜனம் ஞானியாகிய பிரம்ம ஸம்பந்திக்கு உண்டாகின்றது.

[அநேக மடுக்களினாலும் கிணறுகளினாலும் குளங்கள் முதலிய வேறுவேறு இடங்களினாலும் குளித்தல் குடித்தல் ஆகிய இவை போன்ற என்னென்ன பிரயோசனமுண்டோ அந்தப் பிரயோசனங்களெல்லாம் நாலு பக்கங்களினின்றுந் தண்ணீர் ஓடிவந்து நிற்கும் ஓர் இடத்தினாலுண்டாகும் பிரயோஜனமெவ்வளவோ அவ்வளவேயாகும். அதாவது, குளங்குட்டைகளால் உண்டாகும் பிரயோஜனமனைத்தும், தண்ணீர் தங்கிய இடத்தினாலுண்டாகும் பிரயோஜனத்தில் அடங்கி இருக்கின்றது. அப்படியே, ஸமஸ்த (எல்லா) வைதிக கர்மங்களினாலும் என்னபயன்கள் உண்டோ அவையெல்லாம் உலகத்தைத் துறந்து பரமார்த்த தத்துவத்தை அறிந்து ஆனந்தியாகின்ற பிராஹ்மணனுடைய (விஜ்ஞானத்தினால்) உண்மையான அறிவினால் விளையும்பயனில் அடங்கி இருக்கின்றது; இந்த அறிவானது நாலுபக்கங்களிலிருந்து தண்ணீர் ஓடிவந்து நிற்கும் இடத்திற்கு ஒப்பாகும். சுருதிவசனம்:—"ஜனங்கள் செய்யும் நற்கருமங்களெல்லாம் உண்மையை நன்றாய் அறிந்த ஞானியானவன் செய்தவனாவான்" (சாந்தோக்யோ உபநிஷத்து, ச-க-ச).இதேஅபிப்பிராயம் பகவத்கீதை ச-ஆவது அத். ௩௩-ஆவது சுலோகத்திற்சொல்லபடுகின்றது. ஆகையால்,கர்மஞ்செய்யஅதிகாரமுள்ளவன் ஞானமார்க்கத்திற்கு உரியவனாகு முன்னர்க் கர்மங்களைச் செய்யவேண்டியது அவசியம். இந்தக் கர்மங்கள் கிணறுகள் குளங்கள் முதலியவற்றை ஒக்கும்].

[கிணற்றில், எவனுக்கு எவ்வளவு ஜலம் வேண்டுமோ அவ்வளவுதான் அவன் எடுத்துக்கொள்வதுபோல, முமுக்ஷுவானவன் (மோக்ஷத்தை விரும்புகிறவன்) வேதத்தில் மோக்ஷசாதனத்தை மாத்திரமே கிரகித்துக்கொள்வான்].

[கிணறு முதலியவற்றால் உண்டாகும் பிரயோஜனம் மகாஜலத்தினால் உண்டாகும் பிரயோஜனத்தில் அடங்கியிருப்பதுபோல, வேதங்களின்பலன் பிராஹ்மணனது பலனில் அடங்கியிருக்கின்றது. ப்ரஹ்ம + அணதி (பிரம்மத்தை அடைவோன்) என்னும் விக்ர

கத்திஞற்பிரம்மாபரோக்ஷஜ்ஞானமுள்ளவனே பிராஹ்மணன், அல்லது, 'பிரம்மஸம்பந்தி' எனப்படுவான். இந்த அபரோக்ஷ (நேரான) அனுபவமானது ஞானத்தினுல் விளையுமென்பதை உணர்த்தும் பொருட்டு "ஞானியாகிய பிரம்மஸம்பந்தி" என்று சுலோகத்திற் சொல்லப்பட்டது].

[நல்ல ஜலம் நிறைந்த ஒரு குளத்தைக் குடித்தல் குளித்தல் முதலிய பற்பல காரியங்களுக்கு உபயோகிப்பதுபோல, வேதங்களை நன்ருய்க் கற்றறிந்து அவைகளை உபயோகிக்கும் விதத்தையும் உணர்ந்த பிராஹ்மணன் வேதவாக்கியங்களை எவ்வித ஸ்வப்பிரயோஜனத்திற்கும் பயன்படுமாறு திருப்பிக்கொள்ளக்கூடும்—என்று இப்படிச் சிலர் இந்தச் சுலோகத்திற்கு அர்த்தம் உரைக்கின்றனர். புறமதஸ்தர்கள் தத்தம் மதக்கிரந்தங்களைப் பலவாருய் வியாக்கியானஞ்செய்து அர்த்தபேதங்கள் கற்பித்துத் தர்க்கித்து நிற்பதைக் கண்ணுற்றுளம். இப்படியே, புத்திசாதுர்யமுள்ள பிராஹ்மணர்களின் கையில் ஹிந்துக்களுடைய வேதம் அகப்பட்டுக்கொண்டிருக்கின்றதெனஅவர்கள் ஊகித்தார்கள்போலும். ஸ்ரீ கிருஷ்ணபகவான் வேதத்தை நிராகரிக்கும்படி சொன்னவரே அல்லர் என்று அவர்கள் ஒப்புக்கொண்டாலும், வேதங்களின் விஷயத்திற் கொஞ்சம் ஜாக்கிரதையுடன் இருக்கவேண்டுமென்றும் ஊகித்துப் புத்திக்கூர்மையால் அவற்றின் மெய்ப்பொருளைக் கைக்கொள்ளவேண்டுமென்றும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொல்லுவதாய் மேற்கூறிய சிலர் அர்த்தம் செய்கின்ருர்கள். கபிலரும், வேறு அத்தாக்ஷிகளையுங்கொண்டு உண்மையை உணரக்கூடாத இடத்து வேதத்தையே அத்தாக்ஷியாக ஒப்புக்கொள்ளுகின்றனர்].

𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍇 𑌮𑌾 𑌫𑌲𑍇𑌷𑍁 𑌕𑌦𑌾𑌚𑌨 ।
𑌮𑌾 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌰𑍍𑌭𑍂𑌰𑍍𑌮𑌾 𑌤𑍇 𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 ॥

சஎ. கர்மத்திற்ருன் (கர்மஞ்செய்வதற்குத்தான்) உனக்கு அதிகாரம். ஒரு பொழுதும் பயன்களில் அதிகாரம் இல்லை. கர்மப்பயன்களுக்கு ஏதுவானவனுய் ஆகாமலிருக்கக்கடவாய். கர்மஞ் செய்யாதிருப்பதில் உனக்கு விருப்பமுண்டாகக்கூடாது.

[நீ கர்மத்திற்கே அர்ஹன் (யோக்கியதை யுள்ளவன்), ஞான மார்க்கத்திற்குத் தக்கவனல்லை. அப்படியானபோதிலும், கர்மங்கள் செய்யும்பொழுது அந்தக் கர்மங்களின் பயனுக்கு நீ எவ்விதத்திலும் ஆசைப்படாதே. கர்மப்பயனுக்கு ஆசைப்படுவோயாயின், அந்தப் பலன்களை நீ அனுபவிக்கவேண்டிவரும். ஆகையால் கர்மத்தின் பலன் உனது உத்தேசமாய் இருக்கவேண்டும். பலன்களை விரும்பி ஒருவன் கர்மஞ்செய்வானாயின், அவன் மறுபடி பிறக்கவேண்டியது திண்ணம். 'பலன்களை விரும்பக்கூடாதெனின், துன்பத்துக்கிடமாகிய இந்தக் கர்மங்களைச் செய்வதனாற் பயனென்னை' என்று நீ கர்மஞ்செய்யாமல் இருக்கக்கூடாது. பிரயோஜனத்தை உத்தேசித்துக் கர்மஞ்செய்யத்தக்காதாயின், கர்மஞ் செய்வதெப்படியென்னில், அடுத்த சுலோகத்திற் சொல்லுகின்றார்].

[பலனை விரும்பாமல் பகவதாராதனை ரூபமாய்ச் செய்யப்படும் கர்மம் மோக்ஷசாதனமாகுமாதலின், எப்பொழுதும்ஸத்வகுணத்தையுடையவனாய் மோக்ஷத்தை விரும்புகின்ற உனக்குக் கர்மங்களில் மாத்திரமேயதிகாரம், அவற்றின் பலன்களில் அதிகாரமில்லை. கர்மத்திற்கும் அதன்பலனுக்கும் நீ ஏதுவாகக்கூடாது. அதாவது, கர்மத்திற்கு யான் கர்த்தனல்லேன் என்றும் பலனுக்குக் காரணனல்லேன் என்றும் நீ நினைக்கவேண்டும்].

[ஞானியாகிய நீயே பலனை விரும்புதல் கூடாதெனின், அஜ்ஞானிகள் விரும்பக்கூடாதென்று சொல்லவும் வேண்டுமோ? வேதத்தில் ருசியுண்டாக்கும் பொருட்டுக் கர்மங்களுக்குப் பலன்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. கர்மத்தைச் செய்வதற்குக் கர்மபலன் எவனுக்குக்காரணமாயிருக்குமோ அப்படிப்பட்டவனாக நீ ஆகாமலிருக்கக்கடவை. வேறுபலன்க ளில்லாமற் போயினும் எனது பிரஸாதம் (அநுக்கிரகம்) என்னும் பலன் உண்டு; ஆகையால் கர்மஞ் செய்தலைத் தவிர்க்கக்கூடாது. உலகின்கண், உனக்கு என்னவேண்டுமென வினவினும் தமது ஸேவையே வேண்டுமென்பவனிடத்துண்டாகும் பிரியம், சொந்தப் பிரயோஜனத்தை நாடிச் சேவை செய்பவன்மீ துண்டாகாது; ஆதலின், பக்திஜ்ஞானாதி பிரார்த்தனை செய்யவேண்டியது ஆவசியகமே].

[கர்மஞ் செய்யவேண்டியது ஆவசியகமெனவும், கர்மஞ் செய்தலே உத்தமமெனவும் இந்தக் கீதாசாஸ்திரத்தில் நேர்ந்தஇடங்களிலெல்லாம் ஸ்ரீகிருஷ்ணபகவான் வற்புறுத்திப் போதிக்கின்றனர். ஆயினும், ஸ்வப்பிரயோசனத்தை யுத்தேசித்துக் கர்மஞ் செய்தல் நிஷித்தம் எனவும், அது கெடுதல்எனவும் நாம் கொள்ளல் வேண்டும்].

யோக³ஸ்த²: குரு கர்மாணி ஸங்க³ம் த்யக்த்வா த⁴னஞ்ஜய ।
ஸித்³த்⁴யஸித்³த்⁴யோ: ஸமோ பூ⁴த்வா ஸமத்வம் யோக³ உச்யதே ॥

சஅ. ஓ தனஞ்சயா (அர்ச்சுனா)! பற்றைவிட்டு, பலன் சித்திப்பதிலும் சித்தியாதிருப்பதிலும் சமானமானவனாய், யோகத்தைக்கைக்கொண்டு கர்மங்களைச் செய்வாயாக. சமமாயிருத்தலே யோகமெனப்படும்.

[யோகநிலையை உறுதியாய்க் கைப்பற்றிநின்று கேவலம் ஈசுவராராதனார்த்தமாய் (ஈசுவரனைப் பூஜிக்கவேண்டுமென்னும் எண்ணமொழிய வேறுவிருப்பமில்லாதவனாய்) க் கர்மங்களைச் செய்யக்கடவை. "யான் செய்யுங் கர்மங்களால் ஈசுவரன் சந்தோஷமடையட்டும்" என்னும் எண்ணங்கூட உனக்கு இருக்கக்கூடாது. இம்மாதிரியான பற்றையுந் தவிர்த்து, ஜயமுற்றகாலைச் சந்தோஷமும் அபஜயம் நேர்ந்தக்கால் வியசனமும் இன்றி எப்பொழுதும் ஒரே சீராய் இருத்தலே நெறியாம். பயனை விரும்பாமற் கர்மங்களைச் செய்துஅதனால் மனது (ஸத்வம்) சுத்தமாய், ஞானமுண்டாவதே ஜயமெனப்படும். மனது மலினப்பட்டு (அல்வழிப்பட்டு) ஆசைப்பற்றுயிருத்தனிமித்தம் ஞானப்பிராப்தி யாகாதிருப்பதே அபஜயம் எனப்படும். கர்மங்கள் செய்வதில் அவன் அனுசரிக்க வேண்டியதாய் அர்ச்சுனனுக்குச் சொல்லப்பட்ட யோகம் யாதெனின்: ஜயம் அபஜயம் (அல்லது, லாபம் நஷ்டம்) இரண்டையும் சமமாக நினைக்கும் சமத்துவ புத்தியே. யோகமென்று அதற்கே பெயர்].

[ராஜ்யம் பந்துக்கள் முதலானவர்களிடத்து ஸங்கத்தை (அபிமானம், அல்லது, பற்றை) விட்டு, நீ ஜயம் பெற்றாலும் தோல்வியுற்றாலும் (அதைக்கவனியாமல்) ஒரே விதமாய் இருந்துகொண்டு, யுத்தம் முதலான கர்மங்களைச் செய்வாயாக.

'யோகத்தைக் கைக்கொண்டு' = உபாயத்தைக் கைப்பற்றி. யோகமென்னின் கர்மங்களில் தான் ஒட்டாமல் தப்பித்துக்கொள்ளும் உபாயமாம்.

'பற்றை விட்டு': பற்று (ஸங்கம்) = பலத்துடன் ஸ்நேகம் = பயனை ஆசித்தல்].

[இங்கு 'யோகம்' என்னும் பதத்தினால் ஷட்தர்சனங்களிலடங்கிய பிராணாயாமாதி யோகசித்தாந்தம் கூறப்படவில்லை. பொதுவாய் ஆத்மசம்பந்தமான பாரமார்த்திக நிலை குறிக்கப்பட்டது. 'யோகம்' என்னும் பதம் 'யுஜ்' = 'கூடுதல்' என்னும் பகுதியினின்று பிறந்ததாதலின் 'சேர்க்கை' எனப்பொருள்படும். அதாவது, அதிசய பக்தியினால் ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஐக்கியமாவதை உணர்த்தும்].

தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத்தனஞ்ஜய ।
புத்தௌ ஶரணமந்விச்ச க்ருபணா: பலஹேதவ: ॥

௪௯. ஓ தனஞ்சயா! சமத்துவபுத்தியுடன் கூடிய கர்மத்தைவிட (புத்தியோகத்தைவிட) ஏனைய கர்மம் மிகவும் குறைந்ததன்றோ? ஞானத்தில் ஆசிரயத்தை விரும்பக்கடவை (புத்தியைச்சரணமாக, அல்லது, புகலிடமாக அடையக்கடவை). பயனை விரும்புவோர் தீனர்கள் (கீழ் மக்கள்).

[சமத்துவ புத்தியுடன்கூடி ஈசுவராராதனார்த்தமாய்ச் செய்யப்படும் கர்மத்தைவிட, பயனை விரும்பிச் செய்யப்பட்ட கர்மம் ஜனன மரணாதிகளுக்குக் காரணமாயிருத்தல்பற்றி மிகவும் நிகிருஷ்டமானது (கீழ்ப்பட்டது). ஓ தனஞ்சயா! யோகவிஷயமான புத்தியையாவது, அதன் பரிபக்குவத்தினாலுண்டாகும் ஸாங்கிய புத்தியையாவது கைப்பிடி. அபயப்*பிராப்தியைவிரும்பி மேற்கூறிய புத்திமார்க்கத்தைச் சரணமடைவாயாக. அதாவது, பரமார்த்த

---

* அபயம் = பயமின்மை; சம்சாரபயத்தினின்றுந் தப்பித்துக்கொள்ளும்பொருட்டு யோகபுத்தியையாவது ஸாங்கியபுத்தியையாவது நாடு.

ஞானத்தையே புகலிடமாகக்கொள்ளக்கடவாய். என்னையெனின், பயனை விரும்பி (கர்மபலனை யனுபவிக்க ஆவல்கொண்டு) நிகிருஷ்டமான (கீழ்ப்பட்ட) கர்மத்தைச் செய்பவர்கள் தீனர்கள், கிருபணர்கள் (கீழ்மக்கள்; பாபிகள்) ஆவார்கள். சுருதி.— "ஓ கார்கி! அக்ஷரத்தை (அழியாப்பொருளை) அறியாது இவ்வுலகினின்று போகிறவன் (இறப்பவன்) கிருபணன்."—பிருஹதாரண்யக உபநிஷத்து, ௩-அ-௧௦].

[பயனது ஆசையைத் தவிர்த்தலும், ஜயாபஜயங்களிற் சமத்துவ விஷயமுமாகிய புத்தியுடன் கூடிய கர்மம் சம்சாரதுக்கங்கள் யாவையும் நிவர்த்திக்கச் செய்து மோக்ஷத்தை யடையும்படி செய்யும். மற்றைக் கர்மங்கள் சம்சாரத்தை யடையச் செய்யும். 'சரணம்' = நிவாஸஸ்தானம் = இருப்பிடம்: அந்தப் புத்தியிலேயே நில் என்று ஏவல். 'தீனர்கள் (கிருபணர்கள்)' = சம்சாரிகள்.

'புத்தியோகம்' = ஞான ஸ்வரூபமான உபாயம். 'சரணம்' = பற்றுக்கோடு, உயிர்நிலை].

கர்மங்கள் செய்வதைவிட, அதாவது, சமயாசாரத்திற்குரிய கர்மங்கள், யாகாதிகள், கிருச்ரசாந்திராயணாதி விரதங்கள், சரீரத்தைச் சுஷ்கிக்கும்(உலர்த்தும்)தவம்ஆகிய இவைமுதலிய கர்மங்களை ஸ்வப்பிரயோஜனத்தை நாடி, தனக்கு அதிக செளக்கியாதிகளோ, அல்லது,மறுமையிற் சுகானுபவமோர்பிராப்தியாக வேண்டுமென்றெண்ணிச்செய்வதினும்,மானஸிக (மனதினாலாய) பக்தி, பூஜை, ஆராதனைசெய்தல் மிகவும் மேலானது. இதையே ராஜயோக மென்பர். மனதின் மலினத்தைப்போக்கிச் சுத்திசெய்து, சரீரமாகிய ஸ்தூலப் பிரகிருதியை மனதிற்குக் கீழ்ப்படிந்து அடங்கி நடக்குமாறு செய்துகொள்ளல் கர்மங்களின் முக்கியமான கருத்து. இதையே பெருக்கி இதற்குரிய சட்டதிட்டங்களுடன்கூட்டி ஹடயோக மென்பர். மனதின் பயிற்சியும், தியானம், தாரணம் முதலிய அப்பியாசங்களும், ஆத்ம தர்சனத்தை நாடிநிற்றலும் ஞானயோகம், புத்தியோகம், அல்லது, ராஜயோகமெனப்படும்].

𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌜𑌹𑌾𑌤𑍀𑌹 𑌉𑌭𑍇 𑌸𑍁𑌕𑍃𑌤𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑍇 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑍋𑌗𑌾𑌯 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 𑌯𑍋𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌕𑍌𑌶𑌲𑌮𑍍 ॥

௫௦. புத்திசாலியானவன் இவ்வுலகில் இரட்டையாகிய புண்ணியபாபங்களை விட்டுவிடுகின்றான் (தொலைத்து ஒழிக்கின்றான்). அந்தக்காரணத்தினாலே, புத்தியுண்டாகும் பொருட்டுச் சித்தப்படு (யோகத்திற்கு ஆயத்தப்படு): கர்மங்களிற் சாமர்த்தியமே யோகமாகும்.

[மனதிற் சமத்துவபாவமுள்ள புத்திசாலியானவன் அந்தஃகரண சுத்தியின்மேல் ஞானமடைந்தவனாய் இவ்வுலகிற் சுகிருத துஷ்கிருத (புண்ணியபாப)ங்களிரண்டையுஞ் சாராமல் ஒதுக்குகின்றான். ஆதலால், நீ யோகஞ் செய்யத் தலைப்படு. யோகமே பலமாகும் (வலிமை, சக்தி). யோகமெனின், ஈசுவரனிடத்து மனதை நிறுத்தித் தனக்குரிய கடமைகளை, காரியங்களை (கர்மங்களை)க் கிரமமாகச்செய்து வருவதில் இலாபம் நேர்ந்தபோதிலும் நஷ்டம் நேர்ந்தபோதிலும், மனதிற் சந்தோஷமேனும் துக்கமேனும் கொள்ளாமல் ஜயாபஜயங்களிரண்டையுஞ் சமமாய் நினைக்குந் தன்மையேயாம். இந்த யோகம் ஒரு பெரிய சக்தியென்றே சொல்லவேண்டும். ஏனெனின், சம்சார (பிறவித்துன்ப) த்திற்கு நம்மை உட்படுத்துந்தன்மையுள்ள கர்மங்கள்கூட மேற்கூறிய சமத்துவபுத்தியினால் அத்தன்மைநீங்கி மோக்ஷத்திற்கனுகூலமாகிய நற்கருமங்களாகின்றன. ஆதலின், மனதில் ஏற்றத்தாழ்வு இல்லாச் சமபாவத்தைக்கொண்டாடு].

[யோகமென்றால், கர்மங்களைச் செய்யாதிருத்தலன்று. ஒருவன் தனது ஆசிரமம், நிலைமை, அந்தஸ்து ஆகிய இவைகளுக்குரிய காரியங்களையும் கடமைகளையுஞ் செய்தே தீரவேண்டும். "நான் உபநிஷத்துவாசிக்கின்றேன்; பகவத்கீதை பாராயணஞ்செய்கின்றேன்; வாஸுதேவமனனம் முதலிய வேதாந்தகிரந்த சிரவணம் பண்ணுகின்றேன்; அத்யாத்மவிசாரம் செய்கின்றேன்; கஜேந்திரமோக்ஷத்திற்கு ரகசியார்த்தமறிவேன்; பாகவதத்தில் தசமஸ்கந்

தம்முதலிய புராணசந்தர்ப்பங்களுக்கு அந்தரார்த்தம் வேறுளது, சீதாராமாஞ்ஜநேய ஸம்வாதத்தைத் தலைகீழாய் ஒப்பிப்பேன்; ஆதலின் நான் ஞானவிசாரணையிலிருப்பவன். பைராகிகளுக்கு அன்னமிடுகின்றேன், ஏழைகளுக் குதவுகின்றேன். கர்மஞ்செய்வதில் எனக்கு ஆசையில்லை. எனது யோக்கியதை அதற்குமேற்பட்டது. இல்லாவிடின் எனக்கு இந்தப்புத்தி தோன்றுவானேன்? ஞானமார்க்கமே மார்க்கம். 'ஞானம் விநாமோக்ஷம் நபவித்தியதி.' கர்மமார்க்கம் அஜ்ஞானிகளுக்கேற்றது. எச்சிலும் தீட்டும் எனக்கில்லை; விழுப்புமடியுமில்லை" என்று வீண் எண்ணங்கொண்டு பித்தேறித் திரிபவர்கள் அநேகர் இருக்கின்றார்கள். இவ்வாறு கர்மங்களை உதாஸினஞ்செய்து, தான் ஞானமார்க்கத்தில் நடக்கின்றேனென்று பிதற்றுதல் வெகு எளிது; மிகப்பாபம்; பெருமோசம்; டம்பித்து; வெறு மருள். "யோகரதோவா போகரதோவா ஸங்கரதோவா ஸங்கவிஹீந:| யஸ்ய பிரம்மணி ரமதேசித்தம் நந்ததி நந்ததி நந்தத்யேவ || பஜகோவிந்தம்...... ||," என்னும் பிரமாணத்தைக்காட்டி, மனோலயமே மோக்ஷமெனக்கூறி, ஸ்ரீ கிருஷ்ணரையும் சூளிதாஸரையும் உதாரணமாய் எடுத்துரைத்து, 'எதைப்புசித்தாலென், எங்கிருந்தாலென், எச்சகவாசஞ்செய்தாலென்?' என்று விபரீதவேதாந்தம்பேசிக் குலதர்மங்களை நடாத்தாது, தாம் கெடுவதேயன்றித் தம் மக்களையும் நற்போதனை நல்லொழுக்கமின்றி வளர்த்து, 'ஊரார் எம்மைத் துன்மார்க்கரெனல் தகாது, அவர்கள் எம்மனத்தையறிந்தாரில்லை,' என்று ஊருடன் ஒத்துவாழாமல் பிறர்மதிப்புக் கஞ்சாமல், தமது பிடிவாதமே வாதமாய் தர்மபத்தினியின்மனம் நோவ வேசியர் வீடே புகலிடமாய் மதிகெட்டு மயக்குண்டு, தாம் கொண்டதே கொள்கையாய், ஆசாரானுஷ்டானங்களைத் தூரப்படுத்தி, நீதிவேதாந்தங்களைக்குறித்து வெகுசித்திரமாய்ப் பெருத்த உபந்நியாசங்கள் கொடுக்கச் சித்தமாய்த் திரிவாருமுளர். "புத்தி:கர்மாநுஸாரிணீ" என்று தப்பித்துக்கொள்பவர் சிலர். 'இப்பொழுது நேர்ந்திருக்கும் துஸ்ஸகவாசங்கள் பூர்வஜன்மத்திற்செய்த கர்மத்தின் பயனாயிருப்பதனாற்றான் எனக்கு அவைகளை விட்டொழிக்க முடியவில்லை' யெனக் கையை விரிப்பவர் சிலர். இவ்வாறு பல

விதங்களாய்த் தமது நடவடிக்கையை மாற்றிக்கொள்ளா திருப்பதற்கு வேண்டிய பிரயத்னமே செய்துவருவார்கள். எவ்வித நியாயங்களைக்கொண்டு சமாதானஞ் சொன்னபோதிலும், கர்மத்தை அனுஷ்டியா திருத்தல் பெரும் பிழை ஆகும். அது குற்றமே. ஆதலின் ஸ்ரீ கிருஷ்ணர், கர்மஞ் செய்வதிலேயே உபாயம் ஒன்றிருக்கின்றதென்றும், அவ்வாறு செய்தலே யோகமென்றும் கூறுகின்றார். கர்மஞ்செய்வதில் அனுசரிக்கவேண்டிய யுக்தி யாதெனின் இந்த ௫௰-ஆவது சுலோகத்தி லெடுத்துரைத்ததேயாம். முன்னர் ௪௮-ஆவது சுலோகத்தில் சமத்துவ புத்திகொண்டிருப்பதே யோகமெனப்போதித்தார். அதையே விவரித்து, சமத்துவ புத்தியுடையவனாய், பாரத்தை ஈசுவரர்மீது சுமத்தி, இவ்வித யுக்தியினால், தான் கர்மப்பற்றினுக் குள்ளாகாது கர்மத்தைச் செய்தலே யோகமென்று சிஷ்யனுக்கு மனதில் நன்றாய்ப் பதியும்பொருட்டு மறுபடியும் ௫௰-வது சுலோகத்திற் சொல்லுகின்றார்].

[ஞானியானவன் அநிஷ்டமாயுள்ள மனுஷ்யாதிபயனாகிய சுகிருதத்தை ஆசியாமல் விடுவனேயன்றி உபாஸனாதிகளின் பயனாய்ப் பெரும்பயனாயிருக்கிற சுகிருதத்தைவிடான். வேதத்தில் கர்மக்ஷயம் (கர்மத்தின்பயன் சாசுவதமன்று, அஃது ஒருபொழுது குன்றி நாசமடையுமென்று) எங்கெங்கே சொல்லியிருந்தாலும் அஃது அஜ்ஞானிகளைக் குறித்துச்சொன்னதேயாம். மோக்ஷத்திற்கூட "காமாந்நீகாமரூப்யநு ஸஞ்சரன்" (விரும்பின அன்னத்தையும் விரும்பின ரூபத்தையும் உடையவனாய்ச் சஞ்சரித்துக்கொண்டு) என்று முதலாகிய வாக்கியங்களாற் புண்ணியானுபவம் சொல்லப்படுகின்றது. துஷ்கிருதத்தைப் பூர்த்தியாய் விடுவான். யோகமென்பது ஞானோபாயமாம். அஃதன்றோ கர்மத்திற் சாமர்த்தியம்!—இப்படியும் சிலர் வியாக்கியானம் செய்திருக்கின்றார்கள்].

𑌕𑌰𑍍𑌮𑌜𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌹𑌿 𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 ।
𑌜𑌨𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌪𑌦𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 ॥

௫௧. ஞானத்தோடு கூடிய புத்திசாலிகள் கர்மத்தினாலுண்டாகும் பயனையொழித்து ஜன்மமென்னும் (பிறப்பு

என்னப்பட்ட) கட்டினின்று (பந்தத்திலிருந்து) விடப் பட்டவர்களாய் உபத்திரவ மில்லாத (அநாமயமான) ஸ்தா னத்தை (பதவியை) யடைகின்றார்களல்லரோ?

[இஷ்டாநிஷ்ட (விரும்பியதும் விரும்பாததுமாகிய) சரீரப் பிராப்தியே கர்மஞ்செய்தலின் பயன். 'புத்தி' என்றால் சமத்துவ புத்தி. 'ஜன்மமென்னும் கட்டினின்று...... அடைகின்றார்கள்'—உயி ரோடிருக்கும்பொழுதே பிறவித் துன்பம் நீங்கினவர்களாய் மோக்ஷம் என்று சொல்லப்பட்ட, உபத்திரவங்களெவையுமில்லாத, பரம பத மாகிய ஸ்ரீ விஷ்ணுவின் ஸ்தானத்தை யடைகின்றார்கள்.

சமத்துவபுத்தியையுடைய ஞானிகள் கர்மப்பயனைக் கருதா ததனால் அவர்கள் செய்த நற்கர்மங்களுக்கு நல்லபிறப்பும், துஷ்கர் மங்களுக்குத் தீய பிறப்பும் இல்லை. அவர்களுக்கு மறுபிறப்பே இல்லை. அவர்கள் ஞானமடைந்து, மோக்ஷம் என்று சொல்லப் பட்டதும், எவ்விதத் துன்பமு மில்லாததுமான, விஷ்ணுபதவியை, அவர்கள் ஜீவித்திருக்கும்பொழுதே அடைகின்றார்கள்.

சக, ௫௦, ௫க ஆகிய இம்மூன்று சுலோகங்களிலும் 'புத்தி' என்னும் பதத்தினால், கர்மயோகத்தால் மனதின் மலம் நீங்கி (அந்த:கரணம் சுத்திப்பட்டு) அதனாலுண்டாகின்ற (சசு-ஆவது சுலோகத்தில், நாற்றிசைகளினின்றும் ஜலம் ஓடிவந்து நிரம்பிய இடத்திற்கு ஒப்பிடப்பட்ட) பரமார்த்த ஞானமாகிய புத்தியைக் குறித்ததாகவும் கொள்ளலாம்].

[புத்தியோகத்துடன் கூடியவர்களாய் (சமத்துவ புத்தி கொண்டு) பயனை விரும்பாமற் கர்மஞ் செய்பவர்களைக் குறித்து இந்தச்சுலோகம் சொல்லப்பட்டது].

[கர்மபலனை விரும்பாமல் ஈசுவரருக்குச் சமர்ப்பித்து நல்ல ஞானமுடையவர்களாய் மோக்ஷத்தையடைவர். யோகத்துடன் (யுக்தி, உபாயம்) கூடிய கர்மம் ஞானசாதனமாகும். ஞானமே மோக்ஷசாதனம்].

[வேதாந்த (தத்துவ) விஷயமான சூத்திரங்களுக்குச் சாதா ரணமாய்ச் சொல்லப்பட்ட மகிமை யாகிய—மறு ஜன்மத்தைப்

போக்கி மோக்ஷமளிப்பது என்னும்—சக்தி தம்முடைய சித்தாந்தத்திற்கு மூண்டென்று, அதாவது, தாம் இங்கு போதிக்கும் வழிப்படி நடந்தால் அந்தப்பயன் கிடைக்குமென்று கிருஷ்ண மூர்த்தி சொல்லுகின்றார். சுலோகத்தி லுபயோகப்படுத்தப்பட்ட 'அநாமயம்' என்னும் பதம் பரமாத்மாவுடன் ஐக்கியமாகும் நிலையைத் தெரிவிக்கின்றது. இந்தபதத்தினால், பிறப்பிறப்பு இல்லாமற் சிரஞ்ஜீவிகளாயிருக்கும் தெய்வத்தன்மையைப்போலாது ஒரு பொழுதும் அழியாத சாசுவத (நிலையான) பதவியென்று விசேஷார்த்தமாகும். ஏனெனின், மஹாப்பிரளயத்தில் தேவதைகள் நாசமடைகின்றார்கள். இந்திரன் முதலிய தேவர்கள் தவமகிமையுடைய மனிதனொருவனிடம் சாபத்தினால் வலிமை குன்றிச் சக்திகளிழந்து, துன்பமுறுவது கூடும். ஆதலின் ஒருவிதத் துன்பமுமில்லாத சதானந்தகரமான மோக்ஷ நிலையைக்குறிக்கும் பொருட்டு 'அநாமயம்' என்னும் பதம் உபயோகிக்கப்பட்டது].

யதா3 தே மோஹகலிலம் பு3த்3தி4ர்வ்யதிதரிஷ்யதி ।
ததா3 க3ந்தாஸி நிர்வேத3ம் ஶ்ரோதவ்யஸ்ய ஶ்ருதஸ்ய ச ॥

௫௨. உனது புத்தியானது மோஹமென்னும் மயக்கத்தை எப்பொழுது கடக்குமோ அப்பொழுது, கேட்கவேண்டியது கேட்டது ஆகிய இவைகளுடைய (இவ்விரண்டின் விஷயத்திலும்) வைராக்கியத்தை யடைவாய்.

[ஆத்மாநாத்ம விவேகத்தை (அழியாப்பொருளாகிய ஆத்மா, அல்லது, சித்து இன்னது, நசிக்குந்தன்மையதாகிய அநாத்மா, அல்லது, அசித்து இன்னது என்னும் ஞானத்தை) மறைத்து, விஷயங்களின்மீது அந்தஃகரணத்தை (மனதை) ப்பிரவர்த்திக்கச் செய்கின்ற மோஹம் என்னும் அழுக்கு நீங்கி உனது புத்தி எப்பொழுது பரிசுத்தமாகுமோ அப்பொழுது, நீ கேட்டுள்ளதின்பேரிலும் இனி கேட்கவேண்டியதின் பேரிலும் உனக்கு வெறுப்புத் தோற்றும். அவை இரண்டும் நிஷ்பிரயோஜனமென்று உனக்குப்புலப்படும்].

[நான் சொல்லியபடி நீ கர்மங்களைச் செய்துவரின் பாபக்ஷயமுண்டாகும்—பாபம் நசிக்கும். அற்பபயன்களின் பற்றுண்டாவதற்

குக் காரணமாகிய மோஹத்தை உனது புத்தி எப்பொழுது கடக்குமோ அப்பொழுது, விடத் தக்கவையென உனக்கு எம்போலியரா லிதுவரை சொல்லப்பட்டவைகளும், இனி சொல்லப்போகிறவைகளுமாகிய பயன்கள் முதலியவற்றில் வைராக்கிய முண்டாகும்.

மனதினுக்கு மித்தியாஞானம் போகும் வரைக்கும் ஈசுவரார்ப்பணமாகக் கர்மங்களைச் செய்தல்வேண்டும்.

சுலோகத்திலுள்ள 'நிர்வேதம்' என்னும் ஸம்ஸ்கிருதபதத்தை 'வைராக்கியம்' என மொழிபெயர்த் தெழுதியிருக்கின்றோம். சிலர் அந்தப் பதத்திற்கு 'மிகுந்த லாபம்' என அர்த்தஞ்செய்து, "பெரியோர்களாற் கேட்கத் தகுந்ததும் கேட்கப்பட்டதுமாகிய வேதம் முதலியவற்றின் பயனை அடைவாய்" என்று சுலோகத்திற்குத் தாற்பரியஞ் சொல்லுகின்றனர்].

['கேட்கவேண்டியது'=சுரோதவ்யம். கேட்டவைகளாவன=வேதங்கள். மற்றவைகளாவன=தத்துவ விசாரணை விஷயமான தர்சனங்கள். 'ச்ரு'=கர்ணபரம்பரையாய்க் கேட்டு ஒப்புக்கொள்ளல். 'ச்ருதம்'=வேதங்களிற் கூறப்பட்ட சித்தாந்தங்கள்; ஸ்மிருதி=அவற்றின் கர்மபாகம். ஆகவே, 'சுரோதவ்யம்' எனின் 'ஒப்புக்கொள்ள வேண்டிய விஷயம், அல்லது, 'மீமாம்ஸம், வேதாந்தம் முதலிய தர்சனங்களினால் வேதங்களுக் கமைக்கப்பட்ட அர்த்தம்' என்று பொருள்படும்].

ஶ்ருதிவிப்ரதிபந்நா தே யதா³ ஸ்தா²ஸ்யதி நிஶ்சலா ।
ஸமாதா⁴வசலா பு³த்³தி⁴ஸ்ததா³ யோக³மவாப்ஸ்யஸி ॥

௫௩. சுருதிகளினால் அநேக விதமாய்த் தெரிந்து கொண்டிருக்கும் உனது அந்தஃகரணமானது விக்ஷேபமில்லாததாய் ஆத்மாவினிடத்து விகற்பஞானமற்று எப்பொழுது இருக்குமோ, அப்பொழுது விவேகஞானரூபமான ஸமாதியை நீ அடைவை.

['சுருதிகள்'—வேதங்கள். 'அந்தஃகரணம்'—புத்தி. 'விக்ஷேபம்'—தப்பு எண்ணங் கொள்ளல், அலைதல், வியாபித்தல், கவலை யாய்ந்தோடல். 'விகற்ப ஞானமற்று'—சந்தேகமற்று, சஞ்சலமில்லாப் புந்திகொண்டு. 'ஆத்மாவினிடத்து': ஆத்மதர்சனம் ஸமாதி ஸ்திதியிற்றான் கிரணலாமாதலின், 'ஆத்மா' என்பதற்குப் பதிலாக 'ஸமாதி' என்று சுலோகத்திற் சொல்லப்பட்டது. இஃது ஆகுபெயர்களி லொன்று. வீட்டிலுள்ளோரைக் குறிக்குமிடத்து 'வீடு' எனச் சொல்வதிற் காண்க].

[ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி லக்ஷணங்க ளமைந்த அநேக ஸாத்திய ஸாதன ஸம்பந்தங்களைக் குறித்து நீ கேட்டிருப்பவற்றினாற் கலக்கமுற்றிராநின்ற உனது மனமானது, தான் தியானிக்கின்ற ஆத்மாவினிடத்து, தப்புக்களிலும் சந்தேகத்திலும் அலைந்து தடுமாறாமல், உறுதியாய் நின்றால், அப்பொழுது நீ யோகம், அல்லது, ஸமாதியை,—விவேகத்தினால் விளையும் ப்ரஜ்ஞை, அல்லது, ஞானத்தை—அடைவாய்].

["என்னிடத்துக் கேட்டதனால் விசேஷமாய்த் தெரிந்துகொண்டதும், ஒரே விதமானதாயு மிருக்கின்ற உனது புத்தியானது (மனதில்) எப்பொழுது நிலையுள்ளதாகுமோ அப்பொழுது நீ ஆத்மாவலோகநத்தைத் அடையக் கூடும் (ஆத்மாவைப் பார்க்கலாகும்)" என்றோரர்த்தம் சொல்லலாம். சாஸ்திரத்தி லுண்டான ஆத்ம ஞானத்துடன் கூடிய கர்ம யோகமானது நிலையான புத்தி (ஸ்திதப்ரஜ்ஞத்) என்னும் ஞான நிஷ்டையை உண்டாக்கும். அஃதாத்மாவலோகனத்தைச் சாதிக்கும்].

["உனது புத்தி, முதலிற் சுருதிகளுக்கு விரோதமானதாயினும், அதன் பிறகு பிரம்மம் பிரத்தியக்ஷமாதலின், அஃது எப்பொழுது வேதார்த்தத்திற்கு அநுகூலமாகிய தத்துவ நிச்சய விஷயத்தில் விரோதமான வாக்கியங்களினாற் கூட அசைக்க முடியாததாய், பேரிகைகள் முழங்கி யொலிக்கினும் அசைந்து சஞ்சலப்படாத தாகுமோ, அப்பொழுது உபாயத்திற் (யோகத்திற்) சித்தியடைந்தவனாவாய்" என்று மற்றோரர்த்தம் சொல்லலாம்].

## அர்ச்சுனன் சொல்லியது.

ஸ்தி²தப்ரஜ்ஞஸ்ய கா பா⁴ஷா ஸமாதி⁴ஸ்த²ஸ்ய கேஶவ ।
ஸ்தி²ததீ⁴꞉ கிம் ப்ரபா⁴ஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ॥

௫௪. ஓ கேசவா! ஸமாதியி லிருக்கும் நிலையான புத்தி யுள்ளவனுக்கு (ஸ்திதப்ரஜ்ஞை யுடையவனுக்கு) சப்தம் (பாஷை) யாது? (ஸ்திரமான புத்தி யுள்ளவன் ஜனங்களா லென்னவென்று சொல்லப்படுவான்? உறுதிப்புத்தி யுள்ளோன் சொல்வது என்னை?) அவன் இருப்பது எவ்வாறு? நடப்பது எவ்வாறு?

['நானே பரப்ரம்மம்' என்னும் திட ஞானங்கொண்டு ஸமாதி த்யானத்திலேயே நிலைத்த புத்தியுள்ளவனைப்பற்றி ஜனங்கள் என்ன சொல்லிக்கொள்வார்கள்? அப்படி உறுதியான ஞானமுள்ளவன் என்ன பேசுவான்? எப்படி யுட்காருவான்? எப்படி நடப்பான்?

ஸ்திரமான ஞானமுடையவனுக் குள்ள லக்ஷணங்க ளின்னவை யென்று தெரிந்துகொள்ளும் பொருட்டு இந்தச் சுலோகத்தில் அர்ச்சுனன் கேட்கின்றான்].

[அர்ச்சுனன் இந்தச் சுலோகத்திற் கேட்கும் கேள்விகளை, வினாக்கள் ஆறினுள் அறியாமையாகவேனும் ஐயமாகவேனும் கொள்ளலாகாது. அறி வினாவாகவே கொள்ளல் தகும். அர்ச்சுனனுக்குத் தெரிந்திருந்தும், லோகோபகாரார்த்தமாய் அவனிந்தக் கேள்விகள் கேட்கின்றான்.

ஸ்திதப்ரஜ்ஞன்=நிலைபெற்ற ஞானமுள்ளவன். பாஷை=லக்ஷணம். 'ஸமாதியி லிருத்தல்' என்பது ஒரிலக்ஷணமாயினும் வேறு லக்ஷணங்கள் யாவையென வினவினன்].

## ஸ்ரீ பகவான் சொல்லியது.

ப்ரஜஹாதி யதா³ காமாந்ஸர்வாந்பார்த² மநோக³தாந் ।
ஆத்மந்யேவாத்மநா துஷ்ட꞉ ஸ்தி²தப்ரஜ்ஞஸ்ததோ³ச்யதே ॥

௫௫. ஓ பார்த்தா! ஆத்மாவினிடத்து ஆத்மாவைக் கொண்டே சந்தோஷிப்பவனாய் மனத்திலுள்ள விருப்பங்களை யெல்லாம் எப்பொழுது விடுவானோ அப்பொழுது அவன் நிலையான புத்தியுள்ளவ னெனப்படுவான்.

[ஆதிமுதற்கொண்டே ஸர்வகர்மஸந்நியாஸியாய் ஞானயோக நிஷ்டனாகவாவது கர்மயோக நிஷ்டனாகவாவது இருப்பவனைக் குறித்து, இந்த ௫௫-ஆவது சுலோகம் முதல் உ-ஆம் அத்தியாயம் முடிகிறவரையில், நிலையான புத்தியுள்ளவனுக்குரிய லக்ஷணங்களும், அந்தஞானத்தையடைவதற்கான சாதனங்களும் சொல்லப்படுகின்றன. தேர்ந்த யோகிகளின் லக்ஷணங்களே சித்தியடைவதற்கான சாதனங்களென்று அத்யாத்ம சாஸ்திரங்களி லெல்லாம் சொல்லப்படுகின்றன. ஏனெனில், அவை பிரயத்னத்தினாற்சாதிக்கத்தக்கவை. பிரயத்னத்தினாற்சாதிக்கக்கூடியவைகளாயும் அவ்வயே சாதனங்களாயு மிருக்கப்பட்ட லக்ஷணங்களை ஸ்ரீ பகவான் சொல்லுகின்றார்.

மனதிற்பிரவேசியாநின்ற இச்சாவிசேஷங்களை(விருப்பங்களை) யெல்லாம்பூர்த்தியாய்த்துறந்து, வெளியுலக(பாஹ்யப்பிரபஞ்ச)த்து லாபங்களில் அபேக்ஷையின்றி, பரமார்த்த தர்சனம்ருதரஸ லாபமுடைந்தவனாய்இத்தரமானவைகளின்மீது வெறுப்புற்றுத் தனது பிரத்யகாத்ம ஸ்வரூபத்தினிடத்தே ஒருவன் ஸந்துஷ்டி * யடைவானாயின் அவன்நிலைத்தபுத்தி யுள்ளவனாவான். ஆத்மாநாத்மவிவேக † த்தினாலுண்டாகும் ஞானமுடையவனே ஸ்திதப்பிரஜ்ஞன் (நிலைத்த புத்தி யுள்ளவன்) ஆவான். அவனே வித்வான் (அறிந்தவன்)

* ஆசைகளனைத்தையுந் துறந்த பின்னர்ச் சந்தோஷத்தை யுண்டாக்குவதற்கான காரண மேதுமின்றி, சரீரதாரணத்திற்கு (சரீரத்தை வைத்துக்கொண்டிருப்பதற்கு) மாத்திரம் காரணம் சேஷித்து (மீந்து) நிற்குமாயின், அவனது நடவடிக்கையானது பித்தன், அல்லது, குடிவெறியனது நடவடிக்கைக் கொப்பாகுமாதலின் 'தனது ஆத்மாவினிடத்தே சந்துஷ்டிகொண்டு' எனக் கூறினார்.

† ௫உ-ஆவது சுலோகத்தின் அடியிற் கொடுக்கப்பட்டிருக்கும் குறிப்பில் இதன் விவரம் காண்க.

எனப்படுவான். அஃதாவது, மண்ணாசை பொன்னாசை மக்களாசை ஆகிய ஆசைகளையெல்லா மொழித்து, (ஸர்வகர்ம) ஸந்நியாஸியாய், ஆத்மாவினிடத்து ஆநந்தித்துக்கொண்டு அதனிடத்தே விளையாடிக்கொண்டு (ஆத்மாராமனாய் ஆத்மக்ரீடனாய்) இருப்பவனெவனோ அவனது ஞானமே நிலையுள்ளதாம்].

[ஆத்மா வொன்றனையே விஷயமாகக்கொண்ட மனத்தினாற் சந்தோஷமடைந்து மற்றுமுள்ள ஆசைகளை (காமங்களை) யெல்லாம் எப்பொழுது விடுவானோ அப்பொழுது அவனுக்கு ஸ்திதப்ரஜ்ஞத்துவத்தின் கடைசி நிலைமையுண்டாகும் (அவனது புத்திமிகவும் நன்றாய் ஊன்றின நிலையைக்கொள்ளும்). இந்தநிலை வசீகாரம் என்னும் பெயருள்ள நான்காவது அவஸ்தை (நிலை) யாம்].

[பரமாத்மாவினிடத்துப் பரமாத்மாவினாலேயே இருந்துகொண்டு ஆசைகளையெல்லாம் விட்டுவிடுகின்றான். பரமாத்மாவினிடத்திருப்பவனுக்குப் பரமாத்மாவின் பிரஸாதத்திலேயே திருப்தியும் ஆனந்தமும் உண்டாகும்].

து:கேஷ்வநுத்விக்நமநா: ஸுகேஷு விகதஸ்ப்ருஹ: ।
வீதராகபயக்ரோத: ஸ்திததீர்முநிருச்யதே ॥

ருசு. தளராத மனமுடையவனும், சுகங்களில் ஆசை வைக்காதவனும், ராகமும் (ஆசையும்) பயமும் க்ரோதமுமில்லாதவனுமாகிய முனியானவன் நிலையானபுத்தியுள்ளவன் எனப்படுவான்.

['தளராத மனமுடையவன்'=துக்கம் சம்பவித்தகாலத்து மனம் க்ஷோபையையடைந்து குன்றிப்போகா திருப்பவன். துக்கங்கள் ஆத்யாத்மிகம் (வியாதிமுதலியவற்றா லுண்டாவன), ஆதிபௌதிகம் (திருடராலும், பிசாசங்கள் முதலியவற்றாலு முண்டாவன), ஆதிதைவிகம்(இடிவிழுதல் முதலியவற்றா லுண்டாவன,என மூவகைக்காரணங்களினாலுண்டாகும்.சுகத்திலு மிப்படியே மூன்று விதங்களுண்டெனச் சொல்லலாம். சுகங்களில் ஆசையில்லாமற் போவதெனின், எருவரட்டியை மூறித்துவைத்தமாத்திரத்திலேயே

அக்னி (நெருப்பு) எப்படி விருத்தியாகின்றதோ அப்படிச் சுகங்கள் விளைந்தக்கால் விருத்தியடையா திருத்தலாம். முனி=ஸந்நியாஸி].

[‘துக்கங்கள்’=இஷ்டமான வஸ்துக்களில்லாமற் போதல் முதலிய துக்ககாரணங்கள். ‘சுகங்கள்’=இஷ்டமானவைகள். ‘ராகம்’=தனக்கு இல்லாதவைகளின்மீது விருப்பம். ‘பயம்’=இஷ்டமானதொன்று தன்னைவிட்டுப் போவதற்கும் அநிஷ்டமானதொன்று வருதற்கும் காரணமாயிருப்பவைகளைப் பார்த்து துக்கப்படுதல். ‘குரோதம்’=பிரியமாயுள்ளது போதலினாலும் பிரியமில்லாதது வருதலினாலும் துக்கமுண்டாகி, அதுமேலிட்டு, தனக்குள்ளேவிளைவிக்கும் மனோவிகாரம். ‘முனி’=ஆத்மாவை மனனம் (மனதினால் தியானம்) செய்யும் ஸ்வபாவம் (தன்மை) யுள்ளவன். இது முன்சுலோகத்திற் சொல்லப்பட்ட நிலைமைக்கு முந்திய படியாம். இஃது ஏகேந்த்ரியம் என்று சொல்லப்பட்ட மூன்றாவது அவஸ்தை (நிலை) யாம்].

[முன்சுலோகத்திற் சொல்லப்பட்ட ஞானோபாயங்களே இன்னும் மூன்று சுலோகங்களில் விவரிக்கப்படும். ‘ராகம்’=கெட்ட விஷயங்களை நல்லவிஷயங்களெனப் பிரமித்தல்].

𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌾𑌨𑌭𑌿𑌸𑍍𑌨𑍇𑌹𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌮𑍍 ।
𑌨𑌾𑌭𑌿𑌨𑌨𑍍𑌦𑌤𑌿 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 ॥

ருஎ. எவனொருவன் எதனிடத்தும் ஸ்நேகமில்லாதவனாய், அந்தந்த நன்மை தீமைகளையடைந்து சந்தோஷியாமலும் த்வேஷியா (வெறுக்கா) மலும் இருப்பனோ அவனது புத்தி நிலையுள்ளதாம்.

[‘எதனிடத்தும்’=தேகம், பிராணன் முதலானவைகளிலெல்லாம்.

‘எதனிடத்தும் ஸ்நேகமில்லாதவனாய்’=பிரியமானவைகளின் மீதெல்லாம் உதாஸீனனாய். ‘நன்மை’=தனக்கு இஷ்டமானது உண்டாதல். அதுபோதல் ‘தீமை’ யாம்.

இது முன்சுலோகத்திற் சொல்லப்பட்டதைவிடக் கீழ்ப்பட்ட தசை (அந்தஸ்து, நிலை) யாம். இஃது இரண்டாவது படியாகும். இதற்குப்பெயர் வ்யதிரேகம் (வேறுபாடு) எனப்படும்.

நன்மை தீமைகளைப்பற்றிச் சந்தோஷமும் வெறுப்புமில்லாதிருப்பதற்கு 'எதனிடத்தும் சிநேகமில்லாதிருத்தலே' காரணமாகும்].

யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோங்காநீவ ஸர்வஶ: ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥

௫அ. இவன் எப்பொழுது ஆமையின்து அவயவங்களைப்போல் இந்திரியங்களை எல்லா விஷயங்களினின்றும் திருப்பி யிழுத்துக்கொள்வனோ அப்பொழுது இவனது புத்தி நிலையுள்ளதாம்.

[இவன் ஞான நிஷ்டையில் இருக்கின்ற யதி (சந்நியாசி). இந்திரியங்களை விஷயங்களினின்றும் திருப்பி, மனதை ஆத்மாவினிடத்து வைக்கின்றான். "ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி, னெழுமையு மேமாப் புடைத்து"—திருக்குறள்].

[இந்தச்சுலோகத்திற்சொல்லப்பட்ட நிலை யதமானம் என்னும் முதலாவது தசை (அவஸ்தை, அந்தஸ்து, நிலைமை, படி) யாம். இவ்வாறாக நான்கு ஞானநிஷ்டைகள் போதிக்கப்பட்டன— ௧. யதமானம், ௨. வ்யதிரேகம், ௩. ஏகேந்திரியம், ௪. வசீகாரம். இவைகளில் முதலாவது சொன்னதைச் சாதித்தாற் பின் சொல்லியது உண்டாகும். ஒன்றின்பின்னொன்று படிப்படியாய் உயர்ந்த அந்தஸ்தாம்].

விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந: ।
ரஸவர்ஜம் ரஸோப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே ॥

௫௯. ஆஹாரமில்லாத புருஷனுக்கு ராகம் (ஆசை) நிற்க, விஷயங்கள் இல்லாமற் போகின்றன. ஆத்மஸ்வ

ரூபத்தைப் பார்த்தவனுக்கு ராகம்கூட இல்லாமற் போகின்றது.

['புருஷன்'—தேகத்தையுடையவன்; மனிதன். 'விஷயங்கள்'—இந்திரியங்களினால் அநுபவிக்கத் தகுந்தவைகள்; இவ்விடத்தில் "இந்திரியங்கள்" என்னும் அர்த்தத்தில் உபயோகிக்கப் பட்டிருக்கிறது. 'ஆஹாரமில்லாதவன்'—விஷயங்களை ஸ்வீகரிக்காதவன் (மனந்தனிற் கொள்ளாதவன்). 'ஆத்மஸ்வரூபத்தைப் பார்த்தவன்'—"பிரம்மமேநான்" என்று கொண்டவன்.

இந்திரியவிஷயங்களை யனுபவிப்பதற்குச் சக்தியில்லாத ரோகியினுடைய இந்திரியங்களும் விஷயங்களைக்கண்டவுடனே பின்னிடைகின்றன. ஆனால் அவைகளை யனுபவிக்க வேண்டுமென்னும் ஆசைமாத்திரம் ஒழிவதில்லை. அஃதெப்படி ஒழிகின்றதெனின் இந்தச்சுலோகத்திற் சொல்லுகின்றார்:—கடுந்தவத்தினால் இந்திரிய விஷயங்களை யநுபவியாத மூர்க்கனுக்கும் இந்திரியங்களானவை விஷயங்களின்மீது செல்லாமல் அவைகளினின்றும் பின்னிடைகின்றன வென்பது உண்மையே. ஆனால் அந்த 'ரஸம்' * மாத்திரம் போவதில்லை. அந்த ரஸமும் (சூக்ஷ்மமான ஆசையும்) பரமார்த்த தத்வமாகிய பிரம்மத்தைக்கண்டு "அஹமேவ தத்" (நானே அவன்)

என்று நினைக்கின்ற யதிக்கு (ஸந்நியாசிக்கு) இல்லாமற் போகின்றது. அஃதாவது அவனுக்கு விஷய விஜ்ஞானம் (புலன்களினால் விஷயங்களைப் பார்ப்பது) நிர்ப்பீஜமாகின்றது (பயனற்றதாகின்றது). இதன்பொருள் :

---

* 'ரஸம்'—ராகம், ஆசை; விஷயங்களை யனுபவிக்க வேண்டுமென்னும் மனச்சார்பு. 'ரஸிகன்,' 'ரஸஜ்ஞன்' என்னும் பதங்களிலும் இந்த அர்த்தத்திலேயே அஃது உபயோகப்படுத்தப்பட்டிருக்கின்றது.

யதார்த்த ஞானமில்லாதவரையில் விஷயங்களின்மீதுள்ள ராகம் (ஆசை) நசிக்காது * ஆகையால் யதார்த்தஞானமாகிய பிரஜ்ஞையை ஸ்திரப்படுத்திக் கொள்ளவேண்டும்].

[இந்திரியங்களுக்கு ஆஹாரம் விஷயங்களேயாம், விஷயங்களைவிட மேலான, அஃதாவது, மிகுந்த சுககரமான ஆத்மஸ்வரூபத்தைப் பார்த்தால், ராகம் (ஆசை) கூட இல்லாமல் ஒழிந்து விடும்].

[இதுகாறும் போதித்து வந்த ஞானமானது பிரயத்னமின்றிச் சித்திக்காதென்பது பின்வரும் சுலோகங்களினால் வெளியாகும். ஆஹாரம் (உணவு) இல்லாதவனுக்கு இதரவிஷயங்களை யனுபவிக்கும் சக்தியில்லாமற்போகும்—மற்ற விஷயங்களில் விருப்பமாவது இல்லாமற்போகும். ஆயினும், ரஸத்தை (ருசியை) விரும்புவது முதலியன நிவர்த்தியாகா. இந்த விருப்பம் அபரோக்ஷ ஞானத்தினால் நீங்கும்].

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித: । ௬௦
இந்த்ரியாணி ப்ரமாதீனி ஹரந்தி ப்ரஸபம் மன: ॥

௬௦. ஓ குந்தீபுத்திரா! புருஷன் பிரயத்னம் செய்து கொண்டிருப்பவனானாலும் ஞானவந்தனானாலும் அவனு

* ஆசைகளொழிந்தால் ஞானம் உதிக்குமென்றும், ஞானமுதித்தால் ஆசைகளொழியுமென்றும் சொல்வதனால் ("நீந்தத் தெரிகிறவரையில் தண்ணீரில் இறங்குவதில்லை, தண்ணீரிலிறங்குகிறவரையில் நீந்தத் தெரிவதில்லை" என்பது போலன்று; "கலியாணம் ஆகும் வரையில் பைத்தியம் தெளியாது, பைத்தியம் தெளிகிறவரையிற் கலியாணமாகாது" என்பது போலன்று) 'அந்யோந்யாச்ரய' மென்னுந் தோஷத்திற்கு இடமாகாது. ஏனெனின், முதன் முதலில் ஞானம்தோன்றியவுடனே, புலன்களினாலனுபவிக்கத் தகுந்த ஸ்தூலாகாரமான விஷயங்களின்மீது ஆசை மறைகின்றது; ஞானம் உறுதிப்பட்டுப் பக்குவமான ஸ்திதியையடைந்தால், மிகவும் சூக்ஷ்மமாய் மனதிற்றங்கியிருக்கும் ஆசைகளும் நாசமாகின்றன.

டைய மனதை, க்ஷோபையுண்டாக்குந் தன்மையுள்ள இந்திரியங்கள் பலாத்காரமாய் இழுக்கின்றன.

[இந்திரியங்கள் விஷயங்களோடு கலக்கின்றன என்றவாறு. ஆத்மாவைக் காண்பதனாலன்றி இந்திரியங்களை ஜயித்தல் முடியாது. ஆகையால் ஞானநிஷ்டை துர்லபமானது—கஷ்டமானதாம். க்ஷோபை=வியாகுலம், துன்பம், கலக்கம்.

அபரோக்ஷ ஞானமில்லாமல் வெறும் ஞானமுள்ளவனா யிருந்தாலும், சாதாரணமான பிரயத்னங்கள் செய்பவனாயிருந்தாலும், சரீரத்தின்மீது அபிமானமுள்ளவனுடைய மனதை இந்திரியங்கள் இழுக்கின்றன].

[யதார்த்தமான ஞானத்தைப்பெற்று அதை நிலைநிறுத்திக் கொள்ள விரும்புகின்றவன் முதன்முதலில் இந்திரியங்களைத் தனது வசப்படுத்திக்கொள்ளல்வேண்டும். என்னையெனின், அப்படி வசப்படுத்திக்கொள்ளாவிடின் தோஷமுண்டு; தீமைவிளையும்.

இந்திரியங்கள் அபாயத்தை, அல்லது, துன்பத்தை விளைவிக்குந் தன்மையுடையன. புலன்களினால் அநுவிக்கக்கூடிய-விஷயங்களின்மீது சார்புள்ளவனுடைய மனதை அவை (இந்திரியங்கள்) சஞ்சலப்படுத்துகின்றன. அவன் யதார்த்தத்தை யுணர்ந்தவனானாலும் பகுத்தறிவுள்ளவனானாலும் அவனது மனதை இந்திரியங்கள் இவ்வாறு கவர்ந்து சஞ்சலப்படுத்தியபின்னர் விஷயானுபவத்திற்கு இழுத்துக்கொண்டே போகின்றன].

['பிரயத்னம்': இந்திரியவிஷயங்களின் கெட்ட ஸ்வபாவத்தைப்பற்றி அடிக்கடி நினைத்தலே அவன் செய்யும் பிரயத்னமாம்].

61 தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: ।
வஸே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥

௬௧. அவன் அவைகள் (இந்திரியங்கள்) எல்லாவற்றையும் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு என்மீது ஆஸக்தி (விருப்பம், பிரீதி) யுள்ளவனாய் ஸமாதிநிலையில் இருக்கக்

கடவன். எவனுக்கு இந்திரியங்கள் ஸ்வாதீனமாய் இருக்கின்றனவோ அவனது ஞானம் நிலையுள்ளதாகும்.

[அவன் தனது இந்திரியங்களையெல்லாம் வசப்படுத்திக்கொண்டு, ஸர்வபிரத்யகாத்மா (எல்லாவற்றிற்கும் ஆத்மா) வாயிருக்கப்பட்ட வாஸுதேவ மூர்த்தியாகிய என்னைத் தியானித்துக்கொண்டு சாந்தமான நிலையில் உட்கார்ந்திருத்தல்வேண்டும். ஆஸக்தியுடன் தியானிப்பதெனின், "நாந்யோஹம்" (யான் அவனையன்றி வேறானவனல்லேன்) என்ற திடமான பாவனையுடன் இருத்தலாம். அப்பியாஸபலத்தினால் இந்திரியங்களை வசப்படுத்திக்கொண்டு இப்படி யுட்கார்ந்திருக்கும் யதி (ஸந்நியாஸி)யினுடைய ஞானமானது நிலையுள்ளதெனப்படும்].

['என்மீது ஆஸக்தியுள்ளவனாய்'—என்மீது மனதை நிறுத்தினவனாய் பகவானிடத்துச் செலுத்தி நிறுத்தப்பட்ட மனமானது பாபங்களை யெல்லாம் நசிக்கச்செய்யுமாதலின் இந்திரியங்கள் சுத்திப்பட்டு விஷயாநுராகம் (விஷயங்களை யனுபவிக்கவேண்டுமென்னும் ஆசை) இல்லாதவைகளாய் ஸ்வாதீனப்படுகின்றன].

[மிகுந்த பிரயத்னம் செய்பவனுக்கு இந்திரியங்கள் வசப்படும். 'என்மீது ஆஸக்தியுள்ளவனாய் ஸமாதிநிலையில் இருக்கக்கடவன்' என்பதற்குப் பதிலாக 'என்மீது மனதைச்செலுத்தினவனாய், நான் எல்லாவற்றையும்விட உத்க்ருஷ்டமானவனென்று என்னைத் தெரிந்துகொள்கின்றவன்' என்றும் அர்த்தம் சொல்லலாம்].

['அவன் (உட்கார்ந்து) இருப்பது எவ்வாறு?' என்று ருச-ஆவது சுலோகத்தில் அர்ச்சுனன் கேட்ட கேள்விக்கு இந்த சுக-ஆவது சுலோகத்திற் பதில்சொல்லப்பட்டதென் றுணர்க].

த்₄யாயதோ விஷயாந்பும்ஸ: ஸங்க₃ஸ்தேஷூபஜாயதே ।
ஸங்கா₃த்ஸஞ்ஜாயதே காம: காமாத்க்ரோதோ₄(அ)பி₄ஜாயதே ॥ 62

சுஉ. விஷயங்களைக்குறித்து ஆலோசித்துக்கொண்டிருக்கின்ற புருஷனுக்கு அவைகளின்மீது பிரீதியுண்டா

கின்றது. விஷயப்பிரீதியினால் ஆசை பிறக்கின்றது. ஆசையினாற் குரோதம் பிறக்கின்றது.

[இப்பொழுது *, மேற்சொல்லியபடி சாதிக்கச் சக்தியில்லாதவனுக்குண்டாகும் அநர்த்தங் (இடுக்கண்)களுக்கெல்லாம்மூலம் † இன்னதென்று சொல்லப்படுகின்றது.—

விஷயங்களின் விசேஷந்தைக்குறித்து ‡ ஆலோசித்தால் அவைகளின்மீது பிரீதியுண்டாகின்றது......தான் ஆசைப்பட்டதை மற்றொருவன் விரும்புவானாயின் உடனே அவன்மீது கோபமுண்டாகுமன்றோ]?

['விஷயங்கள்': இந்திரியவிஷயங்கள் இன்னவையென்று ௨-ஆம் அத். ௧௪-ஆவது சுலோகத்தினடியில் வரையப்பட்டிருக்கின்ற குறிப்பில் விவரம் காணலாம். இப்புஸ்தகத்தின் ௩௭-ஆவது பக்கத்தைப் பார்க்க].

63 க்ரோதாத்பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்ரம:।
ஸ்ம்ருதிப்ரம்சாத் புத்திநாசோ புத்திநாசாத்ப்ரணச்யதி॥

௬௩. கோபத்தினால் (குரோதத்தினால்) அவிவேகம் (மோகம்) உண்டாகின்றது. அவிவேகத்தினால் மறதியுண்டாகின்றது. மறதியினாற் புத்திநாசமாகின்றது. புத்தி கெடுவதனால் அவன் நசித்துப்போகின்றான்.

[கோபத்தினால் மோகம் (நியாயம் இன்னது, அநியாய மின்னதென்று பகுத்தறியுந்தன்மையில்லாத அவிவேகம்) விளைகின்றது. கோபங்கொண்டவனுக்கு மதமேறி அவன் மூடத்தனத்தினாற் குருவைக்கூட இகழ்வதுண்டன்றோ? இந்த மதத்தினால் மறதியுண்டா

* 'இப்பொழுது'=இதுவரையிற்போதிக்கப்பட்ட மார்க்கத்தை யனுசரியாதபொழுது.

† 'மூலம்': அஃதாவது, வெளியுலகிற்காணப்படும் வஸ்துக்கள், அல்லது, விஷயங்களைக்குறித்து நினைத்தலேயாம். இதுவே துன்பங்களுக்கெல்லாம் காரணமென்று காட்டுகின்றார்.

‡ அவைகளின் அழகு முதலானவற்றைக்குறித்து.

களின் வழிச்சென்று அவ்வவ் விஷயங்களின் குணாகுணங்களைக் கவனிப்பதே தொழிலாயிராநின்ற மனது, ஆத்மா இன்னது அநாத்மா இன்னது என்று அவன் பகுத்தறியும்படியான விவேகஜ்ஞானத்தைப் போக்குகின்றது. அஃதெவ்வாறமையும்? சரியான வழியிற் செல்லு மொருகப்பலைக் காற்று தப்புவழியில் அடித்துக்கொண்டு போவதுபோல், ஆத்மாவினிடத்துள்ள ஞாபகத்தை மனது இந்திரிய விஷயங்களின்மீது திருப்பிச் செலுத்துகின்றது].

[இது ஸாஹித்தியத்தில் நேர்த்தியான போலி அலங்காரம். கப்பல் அலைகளினால் அலைக்கப் படுகின்றது. அலைகள் காற்றினால் எழுப்பப்படுகின்றன. கப்பலே மனிதனது புத்தியாம். அது போய்ச் சேரவேண்டிய நிலையாவது அடைக்கலமாகிய பரமபதமாம். இனிமையான விஷயங்களின்மீது இங்குமங்கும் செல்லாநின்ற புலன்களே அலைகளெனப்படுவன. தனது ஆசைகளினால் அவ்விஷயங்களின்மீது அப் புலன்களைச் செலுத்துகின்ற அந்தஃகரணமே காற்றெனப்படும். புலன்கள் மனதை அலைக்கின்றன; கப்பலைக் காற்று அடிப்பதுபோல, காமக்குரோதங்களுடன் கூடிய அந்தஃகரணம் மனதைத் தள்ளிப் புரட்டிச் சின்னாபின்னப்படுத்துகின்றது].

தஸ்மாத்³யஸ்ய மஹாபா³ஹோ நிக்³ருஹீதாநி ஸர்வஶ꞉ ।
இந்த்³ரியாணீந்த்³ரியார்தே²ப்⁴யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி²தா ॥ 68

௬௮. ஓ பெருத்த புயங்களை யுடையோனே! ஆகையால், எவனுடைய இந்திரியங்கள் பூர்த்தியாய் விஷயங்களினின்று நிக்கிரகிக்க (உட்கொள்ள) ப்பட்டனவோ, அவனுடைய புத்தி நிலைபெற்றதாகும்.

[ஆகையால் எல்லா விதங்களிலும் நிக்கிரகிக்கப்பட்ட இந்திரியங்களுள்ளவனே ஞானியாவான்].

[௬௦, ௬௧, ஆகிய இவ்விரண்டு சுலோகங்களிலும் குறிக்கப்பட்ட கொள்கையைப் பலவழிகளில் விவரித்தெடுத்துரைத்துப், பகவான் அதையே சித்தாந்தப்படுத்தி இந்தச் சுலோகத்தில் முடிக்கின்றார் என்றவாறு.

இந்திரியங்கள் விஷயங்களை விரும்பிப் போதல் தீமை பயக்குமெனக் காட்டப்பட்டது. ஆகையின், சப்தாதி விஷயங்களின் மீது செல்லவொட்டாமல் அடக்கப்பட்ட இந்திரியங்களையும் மனத்தையுமுடையவனது ஞானமே நிலைபெற்றஞானமென்றுணர்வை].

யா நிஶா ஸர்வபூதாநாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ ।
௬௯ யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிஶா பஶ்யதோ முநே: ॥

௬௯. பிராணிகளுக்கெல்லாம் எது இரவோ அதனில் யோகி விழிக்கின்றான். எதனிடத்துப் பூதங்கள் விழித்திருக்கின்றனவோ, தெரிந்து கொள்ளும் முனிவனுக்கு அஃது இரவாகும்.

[பிராணிகளுக்கெல்லாம் இரவாயிருப்பது பரமார்த்த தத்துவமாம். ஞானிக்கு ராத்திரியாவது லௌகிக வைதிக வியவகாரங்களாம்.

ஆத்மஜ்ஞானம் பூதங்களுக்கெல்லாம் இரவுபோன்றது. சப்தம் முதலிய விஷயஜ்ஞானம் ஞானிக்கு இரவுபோன்றது.

பூதங்களுக்கெல்லாம் ராத்திரியா யிருப்பது பரமேசுவரரது ஸ்வரூபம். அதனில் ஞானி விழித்திருப்பதென்னின் நல்ல அபரோக்ஷ ஞானமுடையவனாதல். ஞானிக்கு ராத்திரியாயிருப்பது விஷயஸ்வரூபம். 'முனி'—மனனஞ்செய்பவன்.

சாதாரண ஜனங்களுக்குப் புலப்படாதது பரமார்த்த தத்துவம்; அது ஞானிக்கு நன்றாய்த் தெரியும். அவர்களுக்குத் தெரிந்தது உலக வியவகாரம்; அது ஞானிக்குத் தெரியாது].

[லௌகிக வைதிக வியவகார விஷயங்களுக்குக் காரணம் அவித்தையாம். விவேகமும் ஸ்திதப்பிரஜ்ஞையுமுடையவனுக்கு அவித்யா நாசனம் ஆகின்றதாதலின் அவனுக்கு ஷை லௌகிக வைதிக வியவகார விஷயங்களுமற்றுப்போகின்றன. அவித்தை ஞானத்திற் கெதிரில்லாது. இவ்வபிப்பிராயத்தை வியக்தப்படுத்தும்பொருட்டுப் பகவான் சொல்லுகின்றார்:—உயிர்ப்பிராணிகளுக்கெல்லாம் பரமார்த்த தத்துவம் இயற்கையில் தாமஸகுணம்பொருந்

திய இருளாம்; ஆதலின் அது கலக்கம் விளைவிக்கின்றது. அந்தப் பரமார்த்த தத்துவத்தை ஸ்திதப்பிரஜ்ஞை யுடையவன் மாத்திரமே அறிய வல்லவன். நிசாசரர் (இரவில் திரிவோர்)களுக்குப் பகலாயிருப்பது மற்றவர்களுக்கு இரவாயிருப்பதுபோல (நிசாசரருக் கொப்பான) அஜ்ஞர் (மூடர்)களுக்குப் பரமார்த்ததத்துவம் இருளாயிருக்கின்றது, இராத்திரியைப்போ லிருக்கின்றது; ஏனென்றால், அதனிடத்தில் மனதைச் செலுத்தாதவர்களுக்கு அது துர்லபமாயிருக்கின்றது. பரமார்த்த தத்துவத்தை யொட்டிப் பார்க்கும்பொழுது, அவித்தை உறங்குங்கால் ஜிதேந்திரியனுகிய யோகி விழித்துக்கொண்டிருக்கின்றான். சாமான்ய ஜீவஜந்துக்க ளெல்லாம் விழித்துக்கொண் டிருப்பதாய்ச் சொல்லப்படும்பொழுது, (வாஸ்தவத்தில் அவர்கள் அஜ்ஞானமென்னும் நித்திரையில் ஆழ்ந்திருக்கின்றார்கள். கிராஹ்ய கிராஹக—'பார்ப்பவன்' 'பார்க்கப்படுவது' என்னும் பேதமிருப்பதே இதற்கு அடையாளமாம்). ராக்காலத்தில் உறங்குங்கால் ஸ்வப்நாவஸ்தையிலுள்ளவர்களைப்போல் அவர்கள் இருக்கும்பொழுது,—பரமார்த்த தத்துவத்தையறிந்த முனிவருக்கு, அந்த ஜாக்கிரதாவஸ்தையானது அவித்தையேயாதலின், இரவாகும்.

ஆதலால், கர்மஞ் செய்தல் மூடர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கின்றதேயன்றி ஞானிகளுக்கில்லை. ஞானமுண்டானவுடன், சூரியோதயத்தில் இருளைப்போல் அவித்தை யொழிகின்றது. ஞானோதயமாகும்வரை, கர்மங்களெனவும், சாதனங்களெனவும் காரியங்களெனவும் பல வுருவங்களாய் அவித்தை தோற்றுகின்று விதியென மதிக்கற்பெற்றுக் கர்மங்களுக்கெல்லாம் காரணமாகின்றது. விதியென மதிக்கப்படாத தெதுவும் கர்மஞ் செய்வதற்குக் காரணமாகாது. ஒருவன் கர்மஞ்செய்யும்பொழுது அது தன் கடமையென்றும் வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றதென்றும் மதித்துச் செய்கின்றானேயொழிய, இந்தத் துவைதப் பிரபஞ்சத்தை மாயையென்றும் இருள்போன்றதென்றும் கருதியன்று. ஆத்மஸ்வரூபத்தையறிந்து இவ் வுலகத்தை மாயை யெனவும் இரவுபோன்ற தெனவும் கொள்பவன் கர்மஞ் செய்யவேண்டிய ஆவசியகமில்லை; கர்மங்களை

விடுதலே அவனுக்குத் தகும். ஆகவே, ஞானநிஷ்டையி லிருப்பதே அவனது கடமையெனப் பகவான் ௩-ஆம் அத்தியாயம் கஎ-ஆவது சுலோகத்திற் காட்டுகின்றார்].

ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம்
ஸமுத்ரமாப: ப்ரவிசந்தி யத்வத் ।
தத்வத்காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே
ஸ சாந்திமாப்நோதி ந காமகாமீ ॥

எ௰. நிரப்பப்பட்டும் சலனமடையாத நிலையிலிருக்கின்ற சமுத்திரத்(தை) தில் ஜலம் எப்படிப் பிரவேசிக்கின்றதோ, அப்படியே விருப்பங்களெல்லாம் எவனிடத்துப் பிரவேசிக்கின்றனவோ அவன் சாந்தமான நிலையை அடைவான். ஆசைகளை விரும்புகின்றவன் சாந்தமான நிலையை அடையான்.

[எவனுக்கு விருப்பங்களெல்லாம் ஆத்மாவினிடத்தே அடங்குகின்றனவோ அவன் மோக்ஷம் பெறுவான்.

எவனொருவன் ஆத்மாவைத்தரிசித்தலினால் விளைந்த திருப்தி கொண்டவனாய், சப்தம் முதலிய விஷயங்கள் இந்திரியங்களுக்குப் புலப்படினும் புலப்படாவிடினும், விகாரமின்றியிருப்பனோ அவன் விருப்பு வெறுப்புக்கள் அற்றவனாவன்.

எவனொருவன் விஷயங்களினால் நிரப்பப்பட்டவனாயிருந்தும் கர்வமில்லாதிருப்பனோ, பிரயத்தனஞ் செய்யாதிருப்பனோ, விஷயங்களில்லாவிடின் வியசனப்படாதிருப்பனோ, அவன் மோக்ஷமடைவன்].

[விவேகியாயும் ஆசைகளை விட்டவனாயும் ஸ்திரமான புத்தியை யுடையவனாயு மிருப்பவனே மோக்ஷமடைவான்; ஆசைகளை யொழியாமல் அவற்றைவிரும்புகின்றவன் அடையான். இதை உதாரணத்தால் விளக்கும்பொருட்டுப் பகவான் இந்தச் சுலோகத்தைச் சொல்லுகின்றார்.

சமுத்திரம் எப்புறத்திலும் நீர் நிரம்பியுள்ளது. எல்லாப் பக்கங்களினின்றும் ஜலம் வந்து விழுந்தாலும் அதன் நிலைமை மாறாத் தன்மையது; எப்பொழுதும் அது கரையைக் கடவாமல் மாறுபாடின்றியே இருக்கின்றது. இவ்விதமாகப் பலவித ஆசைகளும் எந்த முனிவனிடத்து வந்து அடங்கி அவனை வாதியாதிருக்குமோ— விஷயங்கள் எதிரிலிருந்தாலும் அவனில் யாதொருவிகாரத்தையும், உண்டுபண்ணா திருக்குமோ— ; எவனுடைய ஆத்மாவில், அதனைத் தனக்குட்படுத்தாமல், வந்து ஒடுங்கி ஐக்கியமாகுமோ; அந்த முனிவன் சாந்தமான ஆனந்த நிலையை, மோக்ஷத்தை யடைகின்றான்; மற்றவனுகிய உலக விஷயங்களிற் பற்றுள்ளவன் அடையான்].

விஹாய காமாந்ய: ஸர்வாந் புமாம்ஶ்சரதி நிஸ்ப்ருஹ: ।
நிர்மமோ நிரஹங்கார: ஸ ஶாந்திமதிகச்சதி ॥

எக. எந்தப் புருஷன் விருப்பங்களை யெல்லாம் விட்டொழித்து ஆசை யில்லாதவனுயும் மமகார மில்லாதவனுயும் அகங்கார மில்லாதவனுயும் நடப்பனோ, அவன் சாந்தமான நிலையையடைவன்.

['நடப்பனோ'—ஜீவனத்திற்கு வேண்டிய வவ்வளவு மாத்திரம் வியாபாரம் (வியவகாரம்) வைத்துக்கொண்டு நடப்பனோ. 'அகங்காரம்'—தன்னைப் பெருமைப்படுத்திக்கொள்ளல். 'சாந்தமான நிலை'—ஸம்ஸார துக்கங்களெல்லாம் அற்றுப்போதல் என்னும் மோக்ஷம்.

'விருப்பங்கள்'—ஒருவன் விரும்புவனவாகிய சப்தம் முதலிய விஷயங்கள். 'அகங்காரமில்லாதவன்'—தேகத்தினிடத்து அஃது ஆத்மாவென்னும் அபிமான மில்லாதவன்.

'நடப்பனோ' என்பதற்குப் பதிலாகப் 'புசிப்பனோ' என்று அர்த்தஞ் செய்து, 'நான் புசிக்கின்றேன்' என்னும் அகங்கார மமகாரங்க ளில்லாதவனுய் முக்தி பெறுவான்—என்றுங் கொள்ளல் தகும்].

[அஃதப்படி யிருக்கின்றமை பற்றி,—எந்தத்துறவி பிராண னைக் காப்பாற்றிக்கொள்வதற்கு இன்றியமையாதவைகளை மாத்திரம் பெற்றுத் திருப்தி கொண்டு காமங்களைவிட்டுச் சஞ்சரிப்பனோ, அப் படி இன்றியமையாத ஆவசியகமானவற்றின்மீதும் பற்றற்று எவன் இருப்பனோ; சரீரம் நிலைப்பதற்கு முக்கியமாய் வேண்டியவைகளை யும் தனதென்று பாவியாமல் எவன் இருப்பனோ; தான் ஞான முடையவன் என்று தனது அறிவுக்குத் தானே மெய்ச்சி வீண் பெருமை பாராட்டிக் கர்வங்கொள்ளாதிருப்பனோ—நிலைத்தபுத்தி யுள்ள அவன், பிரம்மஸ்வரூபத்தை யறிந்த அவன், ஸம்ஸார துக்கங் களில்லாதவனாய்ச் சாந்தமான நிலையை, நிர்வாண தசையை யடை கின்றான். சுருக்கிச் சொல்லின், அவன் பிரம்மமே ஆகின்றான்].

['சாந்தமான நிலை'—சாந்தி, இது கபிலர் சொல்லுகின்ற ஜீவ ன்முக்தி என்றுணர்க. ஜீவன் முக்தி: விடுபட்ட ஒரு நிலைமை, அஃ தாவது, தேகத்தினின்றும் ஆத்மா பிரிந்திருக்கும் ஸ்திதி. ஒருவன் பிழைத்திருக்கும்பொழுதே இவ்வாறு ஆத்மா பிரிவதுண்டு. ஆயி னும் உண்மையில் உடல் வேறு ஆத்மா வேறாகப் பிரிவதில்லை. தேகம் ஆத்மாவைக் கொஞ்சங்கூடப் பாதித்துக் கட்டுப்படுத்தாமை யினால் ஆத்மா தேகத்துடன் சம்பந்தப்படாமற் பிரிந்திருப்பதற் கொப்பாகும். இதைப் பிரம்மபதமென்று சொல்வதனால், பரமாத் மாவைப்போல ஜீவாத்மாவும் பிரகிருதியின் ஆளுகைக்குட்படாமல் ஸ்வதந்தரமாயிருக்கின்றதென்றும், சுருக்கிச்சொல்லின், அதனு டன் ஐக்கியமானால் எந்த ஸ்திதியி லிருக்குமோ அந்த ஸதிதியிலிருக் கின்றதென்று அர்த்தம்].

72 ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த² நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி
ஸ்தித்வாஸ்யாமந்தகாலேऽபி ப்ரஹ்மநிர்வாணம்ருச்ச²தி ॥

எஉ. ஓ பார்த்தா (அர்ச்சுனா)! இது பிரம்ம ஸம் பந்தமான ஸ்திதியாகும். இதைப்பெற்று (அவன்) மோகத் தையடையான். முதிர்ந்த வயதிலுங்கூட இந்த ஸ்திதியி லிருந்துகொண்டு பிரம்மாநந்தத்தை யடைகின்றான்.

[கர்மங்களையெல்லாம் விட்டுப் பிரம்மஸ்வரூபமாயிருத்த லென்னும் ஞானமே 'பிரம்ம ஸம்பந்தமான ஸ்திதி' யென்று சொல்லப் பட்டது. கிழவயதில் ஸந்நியாசியானவன்கூட மோக்ஷத்தை யடைகையில், பிரம்மசர்யத்தினின்றே ஸந்நியாசியாகி ஜீவனகாலமெல்லாம் பிரம்மத்தினிடத்தே யிருப்பவனுக்கு மோக்ஷம் கிடைக்குமென்று சொல்லவும் வேண்டுமோ]?

[இவ்விதமாக ஞானமார்க்கம் துதிக்கப்பெற்றது என்றவாறு.

முன்சொல்லிய நிலைமை—அனைத்தையுந் துறந்து பிரம்மத்தினிடத்தில் வசித்தல்—பிரம்மத்தின் ஸ்திதியேயாம். ஒருவன் இந்த நிலையை அடைந்தபிறகு பிரமைக் குட்படான். ஒருவன் தனது அந்த்யகாலத்தில் இந்த நிலையிலிருந்தாலும் அவன் மோக்ஷத்தை யடைவான், பிரம்மாநந்த மனுபவிப்பான். ஆதலின், ஆதிமுதற் கொண்டு தன்னுயுள்பரியந்தம் துறவியாயிருந்தவனுக்குப் பிரம்ம நிர்வாணபதவி பிராப்தியாகுமென்று நாம் சொல்ல வேண்டியதே இல்லை. அவன் நற்கதியடைவது திண்ணம்].

இவ்வாறாக உபநிஷதர்த்தத்தை விளக்குவதும், பிரம்மவித்தையைப் போதிப்பதும், யோகசாஸ்திரமும், ஸ்ரீ கிருஷ்ணார்ச்சுன ஸம்வாதமுமாகிய பகவத்கீதைகளில்

ஸாங்கிய யோகத்தைப்பற்றிய

இரண்டாம் அத்தியாயம்

முற்றிற்று

---

ஆறாம் ஷௌண்முகாநந்த ஸ்வாமியார்

மூன்றும் அத்தியாயம்.

# கர்மயோகம்.

~~~~~~~~~~~~~~~~

அர்ச்சுனன் சொல்லியது.

ஜ்யாயஸீசேத்கர்மணஸ்தே மதா புத்திர்ஜநார்தந।
தத்கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேஶவ॥

க. ஓ ஜனார்த்தன (கிருஷ்ண)! ஞானம் கர்மத்தை விடச் சிரேஷ்டமானதென்பது உமது அபிப்பிராயமாயின், ஓ கேசவா! அதற்காகக் கோரமான கர்மத்தில் என்னை யேன் பிரவர்த்திக்கச் செய்கின்றீர்?

[அர்ச்சுனன் இவ்வாறு கேட்டதனால் 'ஞானகர்மஸமுச்சயம்" அஃதாவது, ஞானத்துடன் சமானமாகக் கர்மத்தையுஞ் சேர்த்து ஆசரித்தல் ஸித்தாந்தமன்றென்று ஸ்பஷ்டமாய் ஏற்படுகின்றது.

ஞானநிஷ்டையே ஆத்மாவலோகனத்திற்குச் சாதனம், கர்மநிஷ்டை அந்த ஞானநிஷ்டையை விளைவிப்பதாகும். இந்திரியங்களின் வியாபாரங்களனைத்தும் குன்றுவதனால் உண்டாகும் ஆத்மாவலோகனமே (ஆத்மாவைத் தரிசித்தலே) சாதித்தற்பாலதாயின், சகல கர்மங்களையும்விட்டு ஞானத்தையே யாசரிக்குமாறு எனக்குக் கட்டளையிட்டருளும். ஸர்வேந்திரிய வியாபார ரூபமாயிராநின்ற கர்மத்தில் என்னையேன் பிரவேசிக்கச் செய்கின்றீர்?

கர்மத்தைவிட ஞானம் மிகவு மேலானதெனப் புகன்றீர். அஃதப்படியாயின் நிவ்ருத்தி கர்மங்களைவிட்டு யுத்தமென்னப்பட்ட கோரமான கர்மத்தைச் செய்யும்படி ஏன் உத்தரவளிக்கின்றீர்]?

[இந்தக் கீதாசாஸ்திரத்திற் சொல்லப்படுகின்ற 'ஸாங்க்யம்,' 'யோகம்' என்னும் இரண்டுமதக் கொள்கைகளும் அவற்றிற்கு
~~~~~~~~~~~~~~~~

முறையே சம்பந்தப்பட்டனவாகிய 'நிவ்ருத்தி,' 'ப்ரவ்ருத்தி' என்னும் மார்க்கங்களும் விரிவாய்ப் பகவானால் எடுத்துரைக்கப்பட்டன. இரண்டாம் அத்தியாயம் ௫௫-ஆவது சுலோகம்முதல் அந்த அத்தியாயம் முடிகிறவரையில், ஸாங்கியமதத்தை யநுசரிப்பவர்களுக்கு ஸந்நியாஸமே தர்மமென்றும், ௬ அத்தியாயம்௭௨-ஆவது சுலோகத்தில், அவர்கள் ஸந்நியாஸத்தை மேற்கொள்வதனாலேயே கிருதார்த்தர்களாவார்களென்றும் பகவான் சொல்லியிருக்கின்றார். யோகபுத்தியைச் சார்ந்தவனாகிய அர்ச்சுனனுக்குக் கர்மமே கர்த்தவ்யமென்றும் சொல்லியிருக்கின்றார். ஆயினும் அந்தக் கர்மத்தினால் மாத்திரமேமுக்தி பெறலாமென்று சொன்னாரில்லை (௨-ஆம் அத்தியாயம், ௪௯-ஆவது சுலோகத்தைப்பார்க்க). இதனாற் கலக்கமுற்றவனாய் அர்ச்சுனன் பகவானைக் கேட்கின்றான்.

இவ்வாறு அர்ச்சுனன் கலங்கியது நியாயமெனவே தோற்றுகின்றது. எங்ஙனமெனின், மோக்ஷத்திற்கு ஸாக்ஷாத் ஸாதனமாகிய ஸாங்கிய மதத்தைப் பக்தனாகிய அர்ச்சுனனுக்கு எடுத்துரைத்துப் பிறகு திருஷ்டாதிருஷ்டமாயுள்ள அநேக அநர்த்த யுக்தமான கர்மமார்க்கத்தை யநுசரிக்கும்படி சொல்லலாமோ? அர்ச்சுனனது கேள்வி அவனது மனதின் நிலைமைக் கிசையந்தே இருக்கின்றது. ஸாங்கியத்தையும் யோகத்தையும் மேலே சொல்லியபடி வேறு வேறாய் விபாகித்துச் சாஸ்திரம் சொல்லும்பொழுதுதான் பகவான் சொல்லிய மறுமொழி நன்கு விளங்கும்].

[ஞானமுங் கர்மமு மொன்றாய்க் கலந்திருக்க வேண்டுமென்று அர்த்தமானால் மோக்ஷசாதனம் ஒன்றாகவேயிருக்கும். அப்படியாயின், ஞானம் கர்மத்தைவிட மேலானதென்று அர்ச்சுனன் சொன்னதனால் அவன் ஞானத்தையும் கர்மத்தையும் வேறுபடுத்தியது நியாயமாகாது. ஒரு காரியத்தை முடிப்பதற்குச் சாதனம் ஒன்றாயின் பலிதார்த்தங்களினால் அந்தச்சாதனம் பன்மையாகக்கூடாது. ஞானமுங் கர்மமுஞ் சேர்ந்து மோக்ஷத்திற்கு ஒரே சாதனமாயின், அவையிரண்டும் வேறுவேறென்றும் வெவ்வேறு பயன்களைத் தருகின்றன வென்றும் கொள்ளமுடியாது. இப்படிக்கொள்வது சாத்தி

யமாயின் அர்ச்சுனன் ஞானத்தையும் கர்மத்தையும் இரண்டு மார்க்கங்களாகக் கொண்டதற்கு நியாயமேற்படும்].

வ்யாமிச்ரேணேவ வாக்யேந புத்திம் மோஹயஸீவ மே ।
ததேகம் வத நிச்சித்ய யேந ச்ரேயோऽஹமாப்நுயாம் ॥

உ. கலக்கமாயிருப்பதை யொத்த வாக்கியத்தினால் எனது புத்தியை மோகிக்கச் செய்கின்றீர் போலும். எதனால் யான் மேன்மையடைவேனோ அஃதொன்றை நிச்சயித்து இயம்பும்.

[பகவான் தெளிவாகவே சொல்லுகின்றார். ஆயினும் மந்த புத்தியையுடைய எனக்கு அவரது வாக்கியம் கலக்கமாயிருப்பதைப் போல்தோற்றுகின்றது அதனால் என் "புத்தியை மோகிக்கச் செய்கின்றீர் போலும்." என்றுகலக்கத்தைப் போக்குவதற்கு ஏற்பட்ட நீர் என்னையேன் கலக்கச் செய்கின்றீர்? வெவ்வேறு அந்தஸ்துள்ள முமுக்ஷுக்களுக்காக ஏற்பட்டிருக்கின்ற ஞானம் கர்மம் என்னப்பட்ட இரண்டு மார்க்கங்களையும் ஒரே புருஷன் அநுஷ்டிக்கக் கூடாதெனின், "அர்ச்சுனனுக்கு இதுவே அடுத்தது, அவனுடைய ஸ்திதிக்கும் புத்திக்கும் இதுவே பொருந்தியது" என்று உமது மனத்தில் நன்றாய் நிச்சயித்[illegible] ஞானமோ கர்மமோ யாதேனு மொன்றை யெனக்[illegible] சொல்லும். மோக்ஷமடைவதற்கு ஞானமார்க்கம் நல்[illegible]க்கம் நன்று, சொல்லும்.

ஞான நிஷ்டையைவிடக் கர்ம[illegible]மான தென்று பகவான் சொல்லியிருந்தால், அவைகளி[illegible] பற்றி மாத்திரம் அர்ச்சுனன் தெரிந்துகொள்ள வ[illegible]ன்? ஞானம் கர்மம் ஆகிய இரண்டினில் ஒன்றனைமா[illegible]க்குச் சொல்வேண்டும் இரண்டையும் சொல்வே[illegible]வான் சொன்னவரல்லர். அப்படி அவர் சொல்லி[illegible] இரண்டையும் நமக்கு உபதேசியார் ஆதலால் ஒன்றை மா[illegible]போமென்று அர்ச்சுனன் நினைக்கலாம்].

ஸ்ரீபகவான் சொல்லியது:

லோகே(அ)ஸ்மிந் த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயாநக ।
ஜ்ஞாநயோகேந ஸாங்க்யாநாம் கர்மயோகேந யோகிநாம் ॥

௩. ஓ பாபங்களற்றவனே! இவ்வுலகின்கண் இரண்டு விதமான நிஷ்டைகள் பூர்வத்தில் என்னாற் சொல்லப்பட்டன. ஞானிகளுக்கு ஞானமென்னும் நிஷ்டையினாலும், யோகிகளுக்குக் கர்மயோகமென்னும் நிஷ்டையினாலும் ஆசாரம் சொல்லப்பட்டது.

['பூர்வத்தில்:' சிருஷ்டியின் ஆதியில் வேதார்த்த ஸம்பிரதாயத்தை வெளியிட்டபொழுது. 'நிஷ்டை'—அநுஷ்டிக்க வேண்டியது. 'ஞானயோகம்': பிரம்மசர்யாச்ரமத்திலேயே ஸந்நியாஸிகளான பரமஹம்ஸ பரிவ்ராஜகர்களுக்கும், அங்ஙனமல்லாது கர்மங்களை யாசரிப்பவர்களுக்குக் 'கர்மயோக'மும் விதிக்கப்பட்டது].

[பகவான் அர்ச்சுனனது கேள்விக்குச்சரியான விடையளிக்கின்றார். இவ்வுலகிற் சாஸ்திரார்த்தாநுஷ்டானத்திற்கு அதிகாரமுள்ள மூன்று வர்ணத்தவர்களுக்கும், சிருஷ்டியின் ஆதிகாலத்தில் முதன்முதலில் ஜனங்களைச் சிருஷ்டித்து அவர்களுக்கு அபிவிருத்தியும் ஆனந்தமும் உண்டாவதற்குச் சாதனமாகிய வேதார்த்த ஸம்பிரதாயத்தை மறுபடியும் வெளியிட்ட ஸர்வஜ்ஞ ஈசுவரனாகிய என்னால் இரண்டு நிஷ்டைகள், அதாவது, மார்க்கங்கள் போதிக்கப்பட்டன. அவையாவன:—

௧. ஞானயோகம்.—ஞானமே யோகமாகும். இது ஸாங்கியர்களுக்கு ஏற்பட்டது. அவர்கள் ஆத்மாநாத்மவிஷயவிவேக ஞானமுள்ளவர்கள்; பிரம்மசர்யாச்ரமத்திலேயே உலகத்தைத் துறந்தவர்கள்; வேதாந்த விஜ்ஞான நிச்சயார்த்த மறிந்தவர்கள்; ஸந்நியாஸிகளில் உத்தமோத்தமர்களான ப்ரமஹம்ஸர்களெனப்பட்டவர்கள்; பிரம்மத்தினிடத்திலேயே வஸிப்பவர்கள்.

௨. கர்மயோகம்.—கர்மஞ் செய்தலே யோகமாகும். இது கர்மஞ்செய்வதற்குச் சார்புள்ள யோகிகள், அஃதாவது, கர்மிகளுக்கு ஏற்பட்டது].

[‘ஞானிகள்’: ஸங்க்யா=புத்தி; இதையுடையவர்கள் ஸாங்கியர்கள்; ஆத்மா ஒன்றே விஷயமான ஞானமுடையவர்கள். இதற்குத் தகாதவர்களாய்க் கர்ம யோகாதிகாரிகளா யிருப்பவர்கள் ‘யோகிகள்’ ஆவர். விஷயங்களினிடத்து வியாகுலமான புத்தியுடையவர்களுக்கு (விஷயங்களை யநுபவிக்கவில்லையே யென்று துக்கிப்போர்க்கு)க் கர்ம யோகத்தில் அதிகாரம் (அவர்கள் கர்மயோகஞ் செய்யக்கடவர்). அப்படி வியாகுலமில்லாத புத்தியுடையவர்களுக்கு ஞானயோகம் ஏற்பட்டிருக்கின்றது. ஆதலின் கலக்கமுண்டாக்கத்தக்க வார்த்தைகளைப் பகவான் சொன்னாரில்லை யென்பது சிலருடைய கொள்கையாம்].

[‘ஸநகர்’ முதலானவர்களைப்போல் இல்லறம் முதலிய கர்மங்களை யொழித்து ஞானநிஷ்டர்களா யிருப்பவரும், ‘ஜனகம்காராஜர்’ முதலானவர்களைப்போல் இல்லறம் முதலிய கர்மங்களைச் செய்துகொண்டே ஞானநிஷ்டர்களா யிருப்பவரும் ஆகிய இருவகுப்பினர் உளர். இவர்களிருவரில், முதலிற் சொல்லிய ‘ஸநகாதிகள்’ ஸாங்கியர்களாவர்; இரண்டாவதாகச் சொல்லிய ‘ஜனகாதிகள்’ யோகிக ளெனப்படுவர். ஞானநிஷ்டர்களானபோதிலும் அதிகாரிகளா யிருப்பதனால் ஈசுவரப்பிரீதியாகவும் லோகோபகாரார்த்தமாகவும் கர்மமார்க்கத்தையநுசரிப்பவர்களும் யோகிகளாவர். ‘பிரியவ்ரதன்’ முதலானோர் ஈசுவரப்பிரீதியாக மாத்திரமே கர்மஞ் செய்பவர்கள். நீ ‘ஜனகர்’ முதலானவர்களைப்போல கர்மத்தையாசரித்துக்கொண்டே ஞானத்திற் குரியவனாவை.—இது சிலருடைய கொள்கையாம்].

𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑌨𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌨𑍍𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌽𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ।
𑌨 𑌚 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑌨𑌾𑌦𑍇𑌵 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌸𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ।

௪. கர்மங்களை யாசரியாமற் போவதனால் மனிதன் ஞான நிஷ்டையை யடையான். கர்மங்களை விடுகின்ற மாத்திரத்தினாலேயே ஞானசித்தியைப் பெறான்.

[(௫-ஆம் அத்தியாயம் முதற்சுலோகத்தில் அர்ச்சுனன் குறித்த கர்மத்தைவிட) ஞானச்சிரேஷ்டத்துவம் நிராகரிக்கப்படவில்லை.

அன்றியும், அவ்விரண்டு நிஷ்டைகளும் வேறுவேறு யோக்யதையுள்ளவர்களால் அநுஷ்டிக்கத்தக்கவை யென்றதனால் ஞானமார்க்கம் ஸந்நியாஸிக் குரியதாயிற்று. பகவானுடைய அபிப்பிராயமு மிப்படியே யென்று தோற்றுகின்றது. பந்தத்திற்குக் காரணமாகிய கர்மத்தைச் செய்யுமாறு பகவான் வற்புறுத்தியதனால் வியசனமுற்று அர்ச்சுனன் கர்மமே செய்யாதிருக்க நிச்சயித்திருப்பதைக் கண்டு பகவான் இந்த நான்காம் சுலோகத்தைச் சொல்லுகின்றார்.

அல்லது, இது வரையிற் சொல்லப்பட்டதற்கும் இனி சொல்லப்போகிறதற்குமுள்ள சம்பந்தத்தைப் பின்வருமாறு எடுத்துரைக்கலாம் :

ஞானமும் கர்மமும் பரஸ்பர விரோதமாயிருப்பதனால் ஒரே புருஷன் அவ்விரண்டையும் ஏககாலத்தில் அநுஷ்டிக்கமுடியாது. அஃதாவது, அவை ஒன்றையொன்று அபேக்ஷியாமல் புருஷார்த்தத்தைத் தரத்தக்கவையென்று ஆகின்றது. ஆயினும் உண்மையாதெனின் : கர்மமார்க்கம் புருஷார்த்தப்பிராப்திக்கு நேரான ஏதுவன்று ; ஆனால் இது ஞானநிஷ்டையை விளைவிக்கக்கூடிய சாதனமாகும். கர்மயோக பரிபக்குவத்தினால் அமைந்த ஞானநிஷ்டையானது வேறெவ்வகைச் சகாயத்தையு மெதிர்பாராமல் நேராய்ப் புருஷார்த்தத்தை யடைவிக்கும். இதனை விளக்கும் பொருட்டுப் பகவான் சொல்லுகின்றார்].

[கர்மங்களாவன, யஜ்ஞயாகாதிகள் முந்திய ஜன்மங்களில் இக்கர்மங்களைச் செய்திருந்தாலும் இந்த ஜன்மத்திற் செய்தாலும் அவை பாபங்களைப் போக்குவதற்குக் காரணங்களாயிருப்பதனால் அந்தஃகரணத்தைச் சுத்திப்படுத்தி ஞானோற்பத்திக்கு இடங்கொடுத்து ஞான நிஷ்டைக்கு வழிகாட்டுகின்றன. அந்தஃகரணசுத்தியில்லாமற் கேவலம் கர்மத்தியாகத்தினால் மாத்திரம் ஞானசித்தியுண்டாகாது. "மகாபாரதம்-சாந்திபர்வ"த்தில் (உ0சு-அ) "பாப கர்மங்கள் நசித்து, தெளிவான கண்ணாடியிற்போல, தன்னில் ஆத்மாவைப் பார்க்கக்கூடுமாயின், அப்பொழுது ஞானம் உதிக்கும்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

கர்மங்களைச் செய்யாதிருப்பதனால் ஒருவன் நைஷ்கர்மியத்தை (கர்மத்திற்குட்படாத நிலைமையை), அஃதாவது, ஞானநிஷ்டையை அச்சமற்ற ஆத்மாவின் ஸ்திதியை, அடையமாட்டான். இப்படிச் சொன்னதனால்—"கர்மங்களைச் செய்யாதிருத்தலினால் மனிதன் கர்மத்தினின்று விமுக்தனாகான்" என்றதனால்—இதற்கு விரோதமான வழியினால், அதாவது, கர்மங்களைச் செய்வதனால், மனிதன் கர்மத்தினின்று விடப்பட்ட ஸ்திதியை, நைஷ்கர்மியத்தை (ஞானநிஷ்டையை) அடைகின்றான், என்று தொக்கிச் சொன்னது போலாயிற்று. அப்படியாயின், கர்மஞ் செய்யாதிருப்பதனால் மனிதன் நைஷ்கர்மியமடையாமற் போவதற்குக் காரணமென்னை? இதற்கு மறுமொழியாவது:

ஏனெனின், கர்மஞ்செய்தலே நைஷ்கர்மியத்திற்குச் சாதனமாயிருக்கின்றது. தகுந்த சாதனங்களின்றி எதையுஞ் சாதிக்க முடியாதன்றே? சுருதிகளிலும் இந்தக் கீதாசாஸ்திரத்திலும் சொல்லப்படுகிறபடி கர்மயோகமானது ஞானயோகத்திற்குச் சாதனமாயிருக்கின்றது].

[கர்மங்களைச் செய்ய ஆரம்பியாமலே போவதனாலும் ஆரம்பித்த கர்மங்களை விடுவதனாலும் ஞானநிஷ்டை யுண்டாகாது. பயன்களின்மீது விருப்பமில்லாத கர்மங்களினாற் பகவானை ஆராதிக்காவிடின் நீடூழிகாலமாயிருக்கப்பட்ட பாபங்கள் நசித்து வியாகுலங்களுக்கு ஏதுவாகாத இந்திரிய நிக்ரகத்துடன் கூடிய ஆத்மநிஷ்டை யுண்டாகாது].

[யுத்தம் - முதலியவைகளைச் செய்யாமற் போவதனால் காம்ய கர்மங்களை விடுவதனா லடையக்கூடிய மோக்ஷம் சித்தியாது. ஞானம் மோக்ஷத்திற்குச் சாதனமாகுமேயன்றிக் கர்மங்களைச் செய்யாதிருத்தல் சாதனமாகாது. இதற்குக்காரணம் புருஷனாயிருத்தலேயாம். புருஷன்=எப்பொழுதும் ஸ்தூலமாயாவது ஸூக்ஷ்மமாயாவது இருக்கப்பட்ட புரத்தோடு (சரீரத்தோடு) கூடியே இருப்பவன். கர்மங்களைச் செய்யாமற்போவதனாலேயே முக்தி கிடைக்கும் பக்ஷத்தில் ஸ்தாவரங்களுக்கு (மரம், மலை முதலியவைகளுக்கு) முக்திகிடைக்கவேண்டும். காம்யமில்லாத கர்மங்களை யாச

ரிப்பதனல் அந்தஃகரண சுத்தியுண்டாகி ஞானத்தினல் மோக்ஷமுண்டாகும். மனஸ்ஸமாதானத்தின் பொருட்டும் பகவானுக்குச் சந்தோஷமுண்டாகும் பொருட்டும் ஸந்நியாஸ ஆச்ரமம் ஏற்பட்டிருக்கின்றது. கிருகஸ்தர்கள் இதரகர்மங்களிற் பிரவர்த்திப்பதனல் மனஸ் ஸமாதானத்தை யடையாதவர்களா யிருப்பார்கள். தகுந்த யோக்கியதையுள்ள அதிகாரிகள் கிருகஸ்தாச்ரமத்தி லிருந்துகொண்டே மனஸ்ஸமாதானத்தை யடைவதிற் சாமர்த்திய முள்ளவர்களா யிருப்பார்கள்].

𑌨 𑌹𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 𑌜𑌾𑌤𑍁 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 ।
𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑍇 𑌹𑍍𑌯𑌵𑌶𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑌰𑍈𑌗𑍁𑌣𑍈𑌃 ॥

௫. எவனேனும் ஒருபொழுதும் க்ஷணகாலமாயினும் கர்மங்களைச் செய்யாமல் இரானல்லனே? அனைவரும் ஸ்வாதீனமற்றவர்களாய்ப் பிரகிருதியின் குணங்களினற் கர்மஞ் செய்விக்கப்படுகின்றார்க ளல்லரே ?

[ பிரகிருதியின் குணங்களாவன—ஸத்வம், ராஜஸம், தாமஸம்.

ஞானிகளுக்கு ஸத்வம்முதலிய குணங்களினல் அசைக்கப்படுதல் இல்லையாதலின், இந்தச்சுலோகம் அஜ்ஞானிகளைக்குறித்துச் சொல்லப்பட்டது. 'அனைவரும்' என்பதற்குமுன் 'அஜ்ஞானிகள்' என்னும் பதம் தொக்கி நிற்பதாய்க் கொள்ளவும்].

[கர்மயோகத்தினற் பழயபாபங்களை நசிக்கச் செய்துகொண்டு ஸத்வம் முதலாகிய குணங்களை ஸ்வாதீனப் படுத்திக்கொண்டு நிர்மலமான அந்தஃகரணத்தைப் பெற்றவனலே சம்பாதிக்கப்பட வேண்டியது ஞானயோகமாம்].

[கர்மங்களை விடுவது எவ்விதத்திலும் முடியாத காரியம்].

𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌯 𑌆𑌸𑍍𑌤𑍇 𑌮𑌨𑌸𑌾 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌚𑌾𑌰𑌃 𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

௬. எவன் கர்மேந்திரியங்களை யடக்கி வைத்துக்கொண்டு இந்திரிய விஷயங்களை மனதினல் நினைத்துக்

கொண்டிருக்கின்றானோ அவன் மோகமடைந்த மனதையு டைய மித்தியாசாரக்காரன் எனப்படுவான்.

[ஆத்மஞான மில்லாதவன் கர்மங்களைச் செய்யாதிருத்தல் யுக்தமன்று. மித்யாசாரம்=பாபமான ஆசாரம்].

[பாபம் நசியாதிருப்பதனால் அந்தஃகரண ஜயமில்லாதவனான போதிலும் ஆத்மஞானத்திற் பிரவர்த்தித்து விஷயங்களின் மீது ஆசையுள்ள மனமுடையவன் ஒருவிதமாய் உத்தேசித்து வேறொரு விதமாய் நடப்பவனாகையால் "மித்யாசாரக்காரன்" எனப்படு கின்றான்].

[கர்மங்களை விடுவது முடியாதகாரியமான போதிலும் சக்தி யானுசாரமாய் விடவேண்டியது என்று சிலர் அர்த்தஞ் செய்கின் றார்கள்].

யஸ்த்வி ந்த்ரியாணி மநஸா நியம்யாரப₄தே(அ)ர்ஜுந ।
கர்மேந்த்₃ரியை: கர்மயோக₃மஸக்த: ஸ விஶிஷ்யதே ॥

எ. ஓ அர்ச்சுனா! எவனொருவன் இந்திரியங்களை மனதினால் நியமித்துக்கொண்டு பயனை விரும்பாமற் கர்மே ந்திரியங்களினாற் கர்மயோகத்தை ஆரம்பிக்கின்றானோ அவன் விசேஷிக்கின்றான்.

[இவ்வாறு கர்மங்களை யாசரிக்கும் அஜ்ஞானி முந்திய சுலோ கத்திற் சொல்லிய மித்யாசாரக்காரனைவிடச் சிரேஷ்டன்].

[ஆத்மாவலோகனத்தில் மனமுள்ளவனாய்த் தனக்கு வழக்க மான விஷயங்களைப் போன்ற சாஸ்திரீய கர்மங்களில் இந்திரியங் களை நியமித்துப் பயனையபேக்ஷியாமற் கர்மங்களைச் செய்பவன், பிரமாதம் விளையுமென்று ஊகிப்பதற்கு இடமில்லாததனால், ஞான நிஷ்டனான புருஷனைவிட விசேஷமானவனாகின்றான்].

[சு-ஆவது சுலோகத்தில் "மனதினால் நினைத்துக்கொண்டு" என்றும் இந்த எ-ஆவது சுலோகத்தில் "மனதினால் நியமித்துக் கொண்டு" என்றும் சொல்வதனால் மனது பிரயோஜனமுள்ளது என்று தெரிவிக்கப்பட்டது. 'கர்மயோகம்' எனின் ஸங்கியாஸம்

முதலாகிய வர்ணாச்ரம தர்மங்களனைத்தையும் குறிக்கின்றதேயன்றிக் கிருகஸ்தகர்மமொன்றனையே மாத்திரமன்று. ஆகையினாலே தவறாமல் உனது சொந்தவர்ணாச்ரமத்திற்குரிய கர்மத்தைச் செய்யக் கடவை].

நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: ।
ஶரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்த்யேதகர்மண: ॥

அ. நீ நியதமான கர்மத்தைச் செய்வாயாக. அகர்மத்தைவிடக் கர்மம் சிரேஷ்டமன்றோ? கர்மமில்லாத உனக்குச் சரீரம் நிற்பதுகூடச் சித்தியாது.

['நியதமான'=நித்யமான; பயனைக்கருதாமல் எந்த அதிகாரிக்கு எந்தக் கர்மம் விதிக்கப்படுகின்றதோ அஃது அவனுக்கு நியத கர்மம். 'அகர்மம்'=கர்மங்களைச் செய்யாதிருத்தல்].

['நியதமான'=வியாபிக்கப்பட்ட. பிரகிருதி சம்பந்தமுள்ளவனாற் கர்மம் வியாபிக்கப்பட்டதன்றோ? பிரகிருதிஸம்பர்க்கம் அநாதியாயுள்ள வாஸனையினாலுண்டாயிற்று. 'அகர்மம்'=ஞானம். ஸாதனம் பூர்த்தியாகும் வரைக்கும் சரீரத்தை நிலைக்கும்படி செய்துகொள்வது ஆவசியகம். நியாயமாய்ச் சம்பாதிக்கப்பட்ட திரவியத்தினாற் பஞ்சமகா யஜ்ஞாதிகளைச்செய்து மீந்த அந்நத்தைக்கொண்டு சரீரத்தை நிலைக்கச் செய்துகொள்ளவேண்டியது. ஆதலால் ஞானநிஷ்டையி லிருப்பவன்கூடச் சரீரமிருக்குமளவும், ஸாதனம் பூர்த்தியாகுமளவும், மகாயஜ்ஞங்கள் முதலான நித்திய நைமித்திக கர்மங்களை முக்கியமாய்ச் செய்தல்வேண்டும். கர்மயோகத்திலுங்கூட 'ஆத்மா கர்த்தனல்லன்' என்னுமெண்ணமிருக்கவேண்டியதாகையால் ஆத்மயாதாத்மியஞானம் (ஆத்மாவின் உண்மையானஸ்திதியைப் பற்றிய அறிவு) உள்ளடங்கியேயிருக்கின்றது. பிரகிருதி ஸம்ஸர்க்கமுள்ளவனுக்குக் கர்மயோகம் சுலபமானதும் பிரமாதமற்றதுமாகும். ஆகையால் ஞானநிஷ்டைக்கு யோக்கியனானவனுக்குங்கூட ஞானயோகத்தைவிடக் கர்மயோகம் சிரேஷ்டமாம். ஆதலால் நீ கர்மத்தைச் செய்யக்கடவை].

['நியதமான'—தனது வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் தகுந்த].

யஜ்ஞார்த்தாத் கர்மணோऽந்யத்ர லோகோऽயம் கர்மபந்தந: ।
தத³ர்த²ம் கர்ம கௌந்தேய முக்தஸங்க³: ஸமாசர ॥

௯. யஜ்ஞார்த்தமான கர்மத்தைவிட மற்ற விஷயத்திலேயே இவ்வுலகம் கர்மபந்தனமுள்ளதாகின்றது. ஓ குந்திபுத்திரா! பயனைவிரும்பாதவனாய் யஜ்ஞார்த்தமான கர்மத்தை யாசரிப்பாயாக.

'யஜ்ஞம்'—ஈசுவரர்; ஈசுவரரது நிமித்தமாய்ச் செய்யப்படும் கர்மம் 'யஜ்ஞார்த்தம்'].

['யஜ்ஞார்த்தம்'—யஜ்ஞம் முதலான சாஸ்திரீய கர்மங்களுக்காகத் திரவியம் சம்பாதித்தல் முதலியன. ஆத்மாத்மீயப் பிரயோஜனமாகிய கர்மங்களினால் இவ்வுலகம் பந்தமுள்ளதாகும். எனது பிரயோஜனத்திற்காக ஏற்பட்டது என்னும் எண்ணத்தினாலுண்டாகும் பற்று இல்லாதவனாய்த் திரவியம் சம்பாதனைசெய்து யஜ்ஞாதிகளைச் செய்தால் அதனால் ஆராதிக்கப்பட்டுப் பகவானானவர் அநாதிகாலப் பிரவிருத்தமாயுள்ள கர்மவாசனையை அறுத்து கலக்கமில்லாத ஆத்மாவலோகனத்தை உண்டுபண்ணுவார்].

['யஜ்ஞம்'—விஷ்ணு. யஜ்ஞார்த்தமானதும் பற்றில்லாததுமாகிய கர்மம் பந்தகமன்று—உலகத்திற்குக் கட்டுப்படுத்தாது].

ஸஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।
அநேந ப்ரஸவிஷ்யத்⁴வமேஷ வோऽஸ்த்விஷ்டகாமது⁴க் ॥

க௦. பிரஜாபதியானவர் கர்மங்களோடு கூடிய பிரஜைகளைச் சிருஷ்டித்துப் பூர்வத்தில் (இப்படிச்) சொன்னார்: 'இதனால் விருத்தியடையுங்கள், இது உங்களுக்கு விரும்பினவைகளை யெல்லாம் அளிப்பது ஆகும் (அளிக்கும்).'

['பிரஜாபதி'=பிரஜைகளைச் சிருஷ்டிப்பவர். 'விரும்பினவைகள்'=கோரினபயன்கள்].

['பிரஜாபதி'=ஸர்வேசுவரர். 'விரும்பினவைகள்'=இஷ்டமாயுள்ள மோக்ஷமும் அதற்கநுகுணமான ஆசைகளும்].

தேவாந் பாவயதாநேந தே தேவா பாவயந்து வ: ।
பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரமவாப்ஸ்யத ॥

கக. இதனால் தேவதைகளை உண்டாக்குங்கள். அந்தத்தேவதைகள் உங்களை உண்டாக்குவார்கள். ஒருவரையொருவர் போஷிப்பவர்களாய்ப் பெருத்த மேன்மையை அடைவீர்கள்.

['உண்டாக்குங்கள்'=விருத்தியடையச் செய்யுங்கள். 'உண்டாக்குவார்கள்'=மழை முதலியவைகளினால் விருத்தி யடையும்படி செய்வார்கள்; ஞானமுண்டாகி அதன் வழியே மோக்ஷமடைவீர்கள்].

['உண்டாக்குங்கள்'=ஆராதியுங்கள். 'உண்டாக்குவார்கள்'=போஷிப்பார்கள். 'பெருத்தமேன்மை'=மோக்ஷம்].

இஷ்டாந் போகாந் ஹி வோ தேவா
தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா: ।
தைர்தத்தாநப்ரதாயைப்யோ
யோ புங்க்தே ஸ்தேந ஏவ ஸ: ॥

கஉ. யஜ்ஞங்களினால் விருத்தியடையச் செய்யப்பட்ட தேவதைக ளல்லரோ உங்களுக்கு இஷ்டமான போகங்களைக் கொடுக்க வல்லவர்? அவர்களாற் கொடுக்கப்பட்டவைகளை அவர்களுக்கு அளியாமல் எவன் அநுபவிக்கின்றானோ அவன் கள்வனேயாவன்.

['விருத்தி யடையச் செய்யப்பட்டவர்கள்'=சந்தோஷிக்கப்பட்டவர்கள்; 'போகங்கள்'=ஸ்திரீ, புத்ரர், பசுமுதலியன. தேவதைகளின் சொத்தை அபகரிப்பதனாற் கள்வனவான்].

[‘விருத்தியடையச் செய்யப்பட்டவர்கள்’=ஆராதிக்கப்பட்டவர்கள். மேன்மேலும் தம்மை ஆராதிப்பதற்கு வேண்டிய போகங்களைத் தேவதைகள், பகவானை ஆத்மாவாக உடையவர்களாய் கொடுப்பார்கள். ‘கள்ள’த்தனம் யாதெனின்,—தம்முடைய காரியத்தினிமித்தம் மற்றவர்களாற் சம்பாதிக்கப்பட்ட வஸ்துக்கள் அவர்களுடையனவாகுமே யன்றி, நம்மவையாகா; அவை ‘நம்மவை’ என்று நினைத்து அவற்றைக்கொண்டு போஷித்துக்கொள்ளல் கள்ளத்தனமாம்].

𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌶𑌿𑌨𑌃 𑌸𑌨𑍍𑌤𑍋 𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑍈𑌃 ।
𑌭𑍁𑌞𑍍𑌜𑌤𑍇 𑌤𑍇 𑌤𑍍𑌵𑌘𑌂 𑌪𑌾𑌪𑌾 𑌯𑍇 𑌪𑌚𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 ॥

கங. யஜ்ஞங்கள் செய்து மிகுந்ததைத்தின்னும் ஸத்புருஷர்கள் எல்லாப் பாபங்களினின்றும் விடப்படுவார். எவர் தமக்காகச் சமைத்துக்கொள்கிறார்களோ அந்தப் பாபிகள் பாபத்தையே தின்கின்றார்கள்.

[யஜ்ஞ சேஷம், அதாவது, யஜ்ஞஞ் செய்தபிறகு மிகுந்த பதார்த்தத்திற்கு “அம்ருதம்” என்றுபெயர். பிரதிதினமும் செய்ய வேண்டிய பஞ்சமகா யஜ்ஞங்கள் இங்குக் குறிக்கப்பட்டன. அவை யாவன—க. தேவயஜ்ஞம்: அக்கினியில் ஹோமங்கள்செய்தல்; உ. பிரம்மயஜ்ஞம்: வேதாத்தியயனஞ் செய்தல்; ங. பித்ருயஜ்ஞம்: பித்ருதேவதைகளுக்குத் திருப்திசெய்தல்; ச. மனுஷ்யயஜ்ஞம்: வந்த அதிதிகளுக்குப் போஜனமளித்தல்; ரு. பூதயஜ்ஞம்: ஜந்துகளுக்குப் பலிபோடுதல்.

‘பாபங்கள்:’ க. அடுப்பு, உ. உலக்கை, ங. பேஷணி (எந்திரம்), ச. தண்ணீர்க்குடம், ரு. மார்ஜனி (விளக்குமாறு) ஆகிய இவைகளினாற் சிறியச்சிறிய புழுக்கள் முதலியவைகளுக்கு ஹிம்ஸை உண்டாகின்றது. பஞ்சஸூநம் என்னப்பட்ட இந்த ஐவகைக் காரணங்களினால் விளையும் பாபங்கள் பஞ்சமகா யஜ்ஞங்களைச்செய்பவனை அணுகா].

[இந்திராதிஸ்வரூபமா யிருக்கின்ற பரம புருஷனை ஆராதிப்பதற்காகத் திரவியங்களை (வஸ்துக்களை)ச்சம்பாதித்து அவற்றைக்

கொண்டு அந்தப்பகவானை ஆராதித்து, பிறகு மிகுந்ததைக்கொண்டு வயிறு வளர்ப்போர் அநாதிகாலமாய்ச் சம்பாதிக்கப்பட்டும், ஆத்மாவின் ஸத்தியஸ்வரூபத்தை உணரும் ஞானத்திற்கு விரோதமாயும் இருக்கின்ற எல்லாப் பாபங்களினின்றும் விடப்படுவார்.

தன்னை ஆராதிக்கும் பொருட்டு இந்திராதி ஸ்வரூபமாயுள்ள பரம புருஷனாற் கொடுக்கப்பட்ட வஸ்துக்களை 'நமக்கு' என்று சமைத்துச் சாப்பிடும் பாபிகள் பாபத்தையே தின்கின்றார்கள். அந்தப் பதார்த்தங்கள் பாபமாய்த்திரிகின்றமையால் அவை 'பாபம்' எனப்பட்டன. அவர்கள் ஆத்மாவலோகநத்தை நாடாமல் நரகத்தையடைவார்கள்].

அந்நாத்பவந்தி பூதாநி பர்ஜந்யாதந்நஸம்பவ: ।
யஜ்ஞாத்பவதி பர்ஜந்யோ யஜ்ஞ: கர்மஸமுத்பவ: ॥

கச. அன்னத்தினாற் பூதங்களுண்டாகின்றன. மேகத்தினால் (பர்ஜன்யனால்) அன்னம் உண்டாகின்றது. யஜ்ஞத்தினால் மேகம் உண்டாகின்றது. யஜ்ஞம் காரிய (கர்ம)த்தினால் உண்டாகின்றது.

கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷரஸமுத்பவம் ।
தஸ்மாத்ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டிதம் ॥

கரு. கர்மம் பிரம்மத்தினின்று உண்டானதென்று அறிவாயாக. பிரம்மம் அக்ஷரனிடத்திருந்து பிறந்தது. ஆதலின், எல்லாம் சேர்ந்திருக்கப்பட்ட பிரம்மம் எப்பொழுதும் யஜ்ஞத்தில் நிலைகொண்டிருக்கின்றது.

ஏவம் ப்ரவர்திதம் சக்ரம் நாநுவர்தயதீஹ ய: ।
அகாயுரிந்த்ரியாராமோ மோகம் பார்த ஸ ஜீவதி ॥

கசு. இவ்வாறு பிரவர்த்திக்கச் செய்யப்பட்ட சக்கரத்தை இங்கும் எவன், அநுவர்த்தியானோ, ஓ பார்த்தா (அர்ச்சுனா)! அவன் பாபஜீவனமுள்ளவனும் இந்திரியங்க

ளிஞலேயே கிரீடித்துக்கொண்டிருப்பவனுமாய், வியர்த்த மாகப் பிழைக்கின்ருன்.

['யஜ்ஞம்'=யஜ்ஞம்செய்வதனல் உண்டாகும் அபூர்வம் (அதிருஷ்டம்; அதாவது, இவ்விடத்தில் 'புண்யம்' என்று பொருள்). 'கர்மம்'=ருத்விக்குகளுடன் * கூடி எஜமானன் செய்யும் வியாபாரம்.

"கர்மம் பிரம்மத்தினின்று உண்டானது"=கர்மம் வேதத்திஞற் பிரகாசிக்கச் செய்யப்பட்டது. அந்த வேதம் அக்ஷரனிடத்திருந்து (அக்ஷரன்=க்ஷரம், அல்லது, நாசமில்லாதவன்), அதாவது, பரமாத்மாவினிடத்திருந்து உண்டாயிற்று. அது யஜ்ஞங்களைப் பற்றியே சொல்லுகின்றது. கர்மாதிகாரியா யிருந்து இந்த ஜகத் சக்கரத்தை அனுசரித்து நடக்காதவன் நிரர்த்தக (பிரயோஜனமில்லாத) ஜீவனமுள்ளவன். ஆதலின், ஞானியல்லாதவன் கர்மஞ் செய்யவேண்டியதேயாம்].

['யஜ்ஞம்'=கர்மம். அது, தனம்சம்பாதித்தல் முதலிய எஜமானனுடைய வியாபாரத்திஞல் உண்டாகின்றமையால் 'யஜ்ஞம் கர்மத்திஞலுண்டாகின்றது' என்று சொல்லப்பட்டது.

'கர்மம் பிரம்மத்தினின்று உண்டாகின்றது'. பிரம்மம்=பிரகிருதியின் பரிணமரூபமாகிய சரீரம். அந்த வியாபாரம் சரீரத்திஞலுண்டாகின்றது என்று அர்த்தம். 'அக்ஷரன்'=ஜீவாத்மா. அன்னபானுதிகளிஞல் திருப்தியடைந்த ஜீவஞல் அதிஷ்டிக்க (ஆசிரயிக்க)ப்பட்டச் சரீரமானது வியாபாரங்களை (கர்மங்களை)ச்செய்வதஞல் பிரம்மம் 'அக்ஷரத்தினிடத்திருந்து பிறந்தது' என்று சொல்லப்பட்டது.

'எல்லாம் சேர்ந்திருக்கப்பட்ட' = ஸர்வகம் = ஸர்வாதிகாரிகளையும் அடைந்திருக்கப்பட்ட, எங்கும்நிறைந்த. 'யஜ்ஞத்தில்

* யஜ்ஞம் செய்யும்பொழுது தேவதைகளுக்குப் 'பிரதிநிதிகளா யிருந்து நடத்தவேண்டிய காரியங்களை நடத்துவோர் 'ருத்விக்குகள்' எனப்படுவோர்; யஜ்ஞம் செய்பவனுக்கு, 'எஜமானன்' என்பெயர்.

நிலைகொண்டிருக்கிறது' = யஜ்ஞேப்ரதிஷ்டிதம்; சரீரம் யஜ்ஞத்திற்கு மூலமானது.

அன்னத்தினுற் பூதங்களும், அதாவது, ஜீவன்களுடன் கூடிய சரீரங்களும், மேகத்தினுல் அன்னமும், யஜ்ஞத்தினுல் மேகமும், யஜ்ஞம்எஜமானனுடைய வியாபாரத்தினுலும், அந்த வியாபாரம் ஜீவனுடன் கூடியசரீரத்தினுலும், அப்படிப்பட்ட சரீரங்கள் மறுபடியும் அன்னத்தினுலும்—என்று இப்படி ஒன்றுக்கொன்று காரணமாய்ச் சக்கரத்தைப்போற் சுழன்றுவருவதை ஒருவன் கர்மயோகாதிகாரியாயிருந்தாலும், ஞானயோகாதிகாரியாயிருந்தாலும், அவன் பிரவர்த்திக்கச் செய்யானேல், யஜ்ஞசேஷத்தைக் கொண்டு வயிறு வளர்ப்பதில்லையாதலால் பாபங்களைச் செய்யும்பொருட்டு ஏற்பட்ட ஆயுளுள்ளவனுகவாவது, பாபரூபமாய்த் திரிந்த ஆயுளுள்ளவனுகவாவது, இவ்விரண்டு விதமாயுமிருக்கின்ற ஆயுளுள்ளவனுகவாவது ஆவான். அவன் ஆத்மாராமன் ஆகான்; இந்திரியாராமன் ஆவான். அவன் இந்திரியங்களையே தோட்டமாக, அல்லது, விளையாடும் இடமாகக்கொண்டிருப்பவன் ஆவன். யஜ்ஞசேஷத்தினுல் தேகத்தைப் போஷித்துக் கொள்ளாததனுல் ரஜோகுணமும் தமோகுணமும் மேலிட்டு அவன் ஆத்மாவலோகனத்தைநாடான். இதனுல், அவன் செய்துகொண்டிருக்கும் ஞான யோகம் முதலிய பிரவிருத்தியும் பிரயோஜன மற்றதாகும்].

[கர்மங்களைச் செய்யவேண்டு மென்பதற்கு இன்னுமொரு காரணஞ் சொல்லப்படுகின்றது.—'பர்ஜன்யன்' = சூரியனும் மேகசக்கிராபிமானியாகிய தேவதையும். யஜ்ஞத்தினுல் சூரியனது பலம் அபிவிருத்தி யடையும். மேகசக்கிரம் யஜ்ஞத்தினுல் உண்டாகும். யஜ்ஞமெனின், தேவதைகளுக்கு ஹோமம் முதலியன செய்தலாம். கர்மம் = கிரியை, வேலை. ஜீவர்களுடைய வியாபாரங்களெல்லாம் பரமாத்மாவினுலேயே உண்டாகின்றன.—சுருதி: "ஏஷஹ்யேவ ஸாதுகர்ம காரயதி" (இவனல்லனே நற்கர்மங்களைச் செய்விக்கின்றான்). பிரதிபிம்பமாகிய ஜீவனுக்குப்பிம்பமாகிய பரமாத்மாவினுலேயேயன்றோ வியாபாரம்? பரப்பிரம்மம் அக்ஷரங்களினுல் நிர்ணயப்படுத்தப்படும். அந்த அக்ஷரங்கள் (வேதம்) நித்யமானவை;

எப்பொழுது முள்ளவை. இவ்வாறு பரம்பரை (வரிசை)க்கிரமமாக யஜ்ஞத்திற்குப் பிரம்மம்நிர்ணயிக்க (ஸ்புடப்படுத்த)க் கூடியதாகை யால் யஜ்ஞத்தில் நிற்கின்றது என்றுசொல்லப்பட்டது. அந்த அக்ஷ ரங்கள் பூதங்களினுல் ஸ்புடப்படுத்தக் கூடியவைகளாயிருப்பதனுல் இது சக்கிரம்.

இந்த ஜகத்சக்கிரத்தை அநுசரியாதவன் அவனைக் கெடுப்பவ னுகையால் 'அகாயு' வெனப்படுவான்; பாபத்திற்காகவே ஏற்பட்ட ஆயுளுள்ளவன் என்று அர்த்தம்].

[மூன்றும் அத். ௬-கசு-சுலோகங்களின் பலிதார்த்தம் யா தெனின், கர்மத்திற்கு அதிகாரமுள்ளவன் கர்மஞ்செய்யவேண்டி யது என்பதேயாம். ௬-அ-சுலோகங்களில், ஞான யோகத்திற்கு அதி காரமில்லாதவன் ஆத்ம தத்துவத்தை யறியாமையால் கர்மத்திற்கே உரியவனுவன்; அவன் ஞானயோகஞ் செய்வதற்கான யோக்கியதை சம்பாதித்துக்கொள்ளும் பொருட்டுக் கர்ம யோகமே செய்துவர வேண்டியது என்று சொல்லப்பட்டது. கூ-கசு-சுலோகங்களில், ஆத்ம தத்துவத்தை யறியாததனுற் கர்மத்திற் குரியவன் என் கர்ம யோகமே செய்யவேண்டு மென்று காட்டப்பட்டது; கர்மஞ்செய்யா திருப்பதனுல் விளையும் தீமைகளும் எடுத்துரைக்கப்பட்டன].

யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாதாத்மத்ருப்தஶ்ச மாநவ꞉।
ஆத்மந்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே ॥

கஎ. எந்த மனிதன் ஆத்மாவினிடத்தே ஆஸக்தி (ஆசை) யுள்ளவனுயும், தன்னிடத்தே திருப்தி யடைந்தவ னுயும், ஆத்மாவினிடத்தே சந்தோஷிப்பவனுயும் இருப் பனே அவன் (கர்மம்) செய்ய வேண்டியதில்லை.

[ஆத்மாவைத் தெரிந்துகொண்டு, அஜ்ஞானமில்லாதவராய், மக்களாசை முதலியவைகளில்லாதவராய், சரீரம் நிலைத்திருப்ப தற்கு மாத்திரம் பிச்சை யெடுத்துப் புசிப்பவர் ஆத்மஞானம் தவிர மற்றெதுவும் செய்யவேண்டியதில்லை. 'ஆத்மாவினிடத்தே சந்தோ ஷிப்பவன்'=எதன்பேரிலும் ஆசையில்லாதவன்].

[ஸாதனங்கள் தேவையில்லாமலே ஆத்மதரிசன முள்ளவனுகிய முக்தனுக்குத்தான் மகாயஜ்ஞங்கள் முதலிய வர்ணுசிரமகர்மங்கள் அவசியமில்லாமற்போகின்றனவென்று இன்னும் மூன்றுசுலோகங்களிறுற் சொல்லப்படுகின்றது. எவனுக்குத் *'தாரக, போஷக, போக்யங்கள்' ஆத்மாவே ஆகுமோ, அவன் ஸ்வயமாகவே (தனக்குத்தானே) ஆத்மஸ்வரூபத்தை எப்பொழுதும் பார்ப்பதனுல், ஆத்மதரிசனத்திற்காக அவன் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை].

['ஆத்மா'=பரமாத்மா. 'ஆஸக்தி' (ரதி): பரமாத்மாவின் தரிசனம் முதலானவைகளினுல் உண்டாகும் சுகம்; மற்றவைகள் வேண்டாமென்னும் ஞானமே 'திருப்தி'; அந்தத் திருப்தியினுலுதிக்கும் சுகமே 'சந்தோஷம்'.

பரமாத்மதரிசனம் முதலிய சுகத்தை யடைந்து, மற்றவைகளின்மீ தெல்லாம் திருப்தி யுள்ளவனுகிறுன்; பரமாத்மாவினிடத்தே இருந்து சந்தோஷித்தவனுய், வேறெதுவும் சந்தோஷகாரணம் இல்லாதவனுய் இருக்கும் அஸம்பிரஜ்ஞாத ஸமாதியி லிருப்பவனுக்குக் கர்மம் இல்லை. மற்ற ஞானிகளுக்குக் கர்மம் உண்டு. 'மனுஷ்யன்' (மானவன்) = ஞானி = அபரோக்ஷஞான முள்ளவனுக்கே அஸம்பிரஜ்ஞாத ஸ்மாதி சித்திக்கு மென்றவாறு].

𑌨𑍈𑌵 𑌤𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑍇𑌨𑌾𑌰𑍍𑌥𑍋 𑌨𑌾𑌕𑍃𑌤𑍇𑌨𑍇𑌹 𑌕𑌶𑍍𑌚𑌨 ।
𑌨 𑌚𑌾𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑌰𑍍𑌥𑌵𑍍𑌯𑌪𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 ॥

௧௮. செய்யப்பட்டதனுல் அவனுக்குப் பிரயோஜனம் ஒன்றும் இல்லை. ஈண்டு (இங்கே) செய்யப்படாததனுலும் ஒன்றும் இல்லை. எல்லாப் பூதங்களிலும் அவனுக்குப் பிரயோஜனசாதனமானது ஒன்றும் இல்லை.

---

* தாரகம்=சரீரத்தை நிலைக்கச் செய்யும் பானம் (நீர்).

போஷகம்=சரீரத்திற்குப் புஷ்டி யுண்டாக்கும் அன்னம்.

போக்யம்=சுகானுபவத்திற்காக ஏற்பட்ட தோட்டங்கள், புஷ்பங்கள், சந்தனம், ஸங்கீதம், வாத்யம், நாட்டியம் முதலியவை.

[கர்மஞ்செய்வதனால் ஆத்மஞானிக்குப் பிரயோஜனமில்லை; அவன் கர்மஞ்செய்யாததனால் தப்பும் இல்லை. பிரஹ்மா (பிரஜாபதி, சிருஷ்டிகர்த்தா) முதல், ஸ்தாவரம் வரைக்குமுள்ள பூதங்களில் ஒன்றினாலாவது இவனுக்கு ஆகவேண்டிய காரியம் ஒன்றுமில்லை. காரியமிருந்தாலன்றோ அதற்காகக் கர்மஞ் செய்யவேண்டும்?

நாலு பக்கங்களினின்றும் வந்து சேர்ந்திருக்கப்பட்ட ஜலங்களுக் கொப்பான (உ-அத். சகூ) உண்மையான ஞானம் உனக்கு இன்னும் கிட்டவில்லை. ஆகையால் (அடுத்த சுலோகத்துடன் சேர்த்துப் படிக்கவும்)].

[முக்தனுக்கு எப்பொழுதும் ஆத்மதரிசனம் சித்தமாயிருக்கின்றது. ஆதலால், ஆத்மதரிசனத்திற்காகவேண்டிய ஸாதனங்களைச் செய்யினும் செய்யாவிடினும் அவனுக்குப் பிரயோஜன மொன்று மில்லை. ஆத்மாவைவிட வேறான அசேதனங்களில் (சைதன்யம், சக்தி இல்லாத வஸ்துக்கள்) இயல்பாகவே வெறுப்புள்ள இவனுக்கு ஆகாசாதி பூதங்களில் ஒன்றும் இவன் ஆச்ரயிக்கத் தகுந்த பிரயோஜனமுள்ளதாய் இல்லை. அப்படி ஆச்ரயிக்கத் தகுந்ததாயிருந்தாலன்றோ அதனிடத்து வெறுப்பு உண்டாகும் பொருட்டுச் சாதனத்தைத் தேடவேண்டும்]?

[அஸம்பிரஜ்ஞாத ஸமாதியிலிருப்பவன் அதனை விட்டுக் கர்மங்களைச் செய்வதனாற் பயனில்லை; ஸந்தியாவந்தனம் முதலிய கர்மங்களைச் செய்யாவிடினும் தப்பு இல்லை. எல்லாப் பூதங்களிலும் இவனுடைய பிரயோஜனத்திற்கு ஆசிரயமானது (காரணமானது) ஒன்றும் இல்லை].

தஸ்மாத³ஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர ।
அஸக்தோ ஹ்யாசரன்கர்ம பரமாப்நோதி பூருஷ: ॥

கக. ஆகையாற் பற்றில்லாதவனாய், செய்யவேண்டிய கர்மத்தை எப்பொழுதும் செய்துகொண்டிருப்பாயாக. மனிதன் பற்றில்லாதவனாய்க் கர்மத்தைச் செய்துகொண்டிருந்து பரத்தையடைகின்றான்.

[நீ அப்படிப்பட்ட ஞானத்திலில்லாததனால், செய்யவேண்டிய நித்தியகர்மத்தை யாசரிக்கக் கடவை. ஈசுவரார்த்தமாகக் கர்மத்தைச் செய்து புருஷன் மோக்ஷத்தை யடைகின்றான்].

[சாதனங்களில்லாமலே ஆத்மதரிசனம் எவனுக்குக் கிடைக்குமோ அவனுக்கு ஆத்மதரிசன சாதனங்கள் அவசியமில்லை. சாதனங்களைச் செய்பவனுக்கும் ஆத்மஞான முதிப்பதனாலும், ஞான யோகியும் தகுந்த அளவு கர்மத்தை யாசரிக்கவேண்டி யிருப்பதனாலும், ஆத்ம தரிசனம் கிடைப்பதற்குக் கர்மயோகமே சிரேஷ்டமான வழியாம். ஆகையால், பற்று இல்லாதவனாய், ஆத்மப் பிராப்தியுண்டாகும் வரைக்கும் கர்மஞ் செய்யவேண்டியதே யென்று செய்துகொண்டிரு. சொல்லப்போகிற, அகர்த்ருத்துவ ஞானத்தோடு கூடிய கர்மத்தைச் செய்பவன் பரனை, அதாவது, ஆத்மாவை அடைவான்].

[அஸம்பிரஜ்ஞாத சமாதியி லிருப்பவனுக்குமாத்திரந்தான் கர்மமில்லையே யொழிய, நீ கர்மஞ் செய்யக்கடவை].

பின்வருங் காரணத்திற்காகவும் நீ கர்மஞ் செய்தல் வேண்டும் :

கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய: ।
லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பஶ்யந் கர்துமர்ஹஸி ॥

உ௰. ஜனகர் முதலானவர்கள் கர்மத்தினாலேயே சித்தியடைந்தார்களல்லரோ? லோகஸங்கிரகத்தை யுத்தேசித்தும் கர்மங்களைச் செய்வதற்கே நீ உரியவனாவை.

[ஜனகர், அசுவபதி முதலானவர்கள் ஞானிகளே ஆயின் அவர்கள் லோகஸங்கிரகார்த்தமாய்க் கர்மத்தை விடாமற் செய்துவந்தார்கள் : அவர்கள் ஞானிக ளல்லராயின், ஸத்வ சுத்தியின் நிமித்தம் (அந்தஃகரண சுத்திக்காக) கர்மங்களை ஆசரித்துக் கிரமமாக ஸித்தியடைந்தார்கள்—என்று கொள்ளல்வேண்டும்].

[ஜனகர் முதலானவர்களுக்கு உண்மையான ஞானமிருந்தும் அவர்கள் க்ஷத்திரியர்களாய்ப் பிறந்தகாரணத்தினால் ஸந்நியாஸாசிரமத்தை வகிக்கலாகாது. அவர்கள் க்ஷத்திரியர்களாய்ப் பிறக்கும்

படி செய்த தங்களுடைய பிராரப்த கர்மத்திற்கிணங்க, கர்மத்தை விடாமல் தங்களுடைய ஞானயோகத்தையுஞ்சாதித்தார்கள். பாமர ஜனங்கள் அவர்களைப்பார்த்துத் தாங்களும் அவர்களைப்போல நடப்பார்களாதலால், அவர்களுக்கு நல்வழிகாட்டும் பொருட்டு ஜனகாதிகள் இப்படி நடந்தார்கள் ஆயினும் அவர்களுடைய ஞானத்தைப் பற்றி, அவர்களுக்கு மோக்ஷம் சித்திக்கவேண்டியதேயாம்].

['லோக ஸங்கிரகம்:' உலகத்தவர் தப்புவழியிற் செல்லாமல் தடுத்தல்].

[ஞானயோகத்திற்கு அதிகாரியாயிருந்தாலும் கர்மயோகத்தை ஆசரிப்பதே ஆத்மதரிசன விஷயத்திற் சிரேஷ்டமாதலால், ஞானிகளுள் முதன்மையானவர்களாகிய ஜனகாதிகள் (ஜனகர் முதலியவர்கள்) கூடக் கர்மயோகத்தினாலேயே ஸித்தியடைந்தார்கள்: அதாவது, ஆத்மாவை யடைந்தார்கள்].

[கர்மங்களை யனுசரிக்கும் ஆசாரம் உண்டு: கர்மத்தைச் செய்துகொண்டே ஞானத்தை யடைந்து ஸித்தி பெற்றார்கள். ஜனகர் முதலானவர்கள் ஞானிகளென்பது "மகாபாரத"த்தில் விளங்குகின்றது. பிரயாகை முதலிய தீர்த்தங்கள் (ஜலங்கள்) முக்திக்குச் சாதனமெனின், பாபத்தைப் போக்குவதற்குச் சாதனமென்றறிக; அல்லது, அந்தத் தீர்த்தங்களைத் துதித்துச் சொல்லியதாகவாவது கொள்ளலாம். ஆகவே அபரோக்ஷ ஞானத்தினாலேயே மோக்ஷம் கிடைக்கும், கர்மம் அதற்குச் சாதனமாகும்].

யத்யதாசரதி ஶ்ரேஷ்டஸ்தத்ததேவேதரோ ஜந: ।
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததநுவர்ததே ॥

உக. சிரேஷ்டன் எவ்வெவ்வற்றை ஆசரிக்கின்றானோ அவற்றையே மற்ற ஜனங்கள் ஆசரிக்கின்றார்கள். அவன் எதனைப்பிரமாணமாகச் செய்கின்றானோ அதனையே உலகத்தவர் அநுசரிக்கின்றார்கள்.

['எதனைப் பிரமாணமாக': எப்படிப்பட்டதாக, அல்லது, எந்த அங்கங்களுடன் கூடியதாகச் செய்வனோ, அப்படிப்பட்டதாக,

அல்லது, அந்த அங்கங்களுடன் கூடினதாகவே ஸம்பூர்ண ஞான மில்லாதவன் ஆசரிக்கின்றான். ஆகையால் உலகத்தைக் காப்பாற்றும் பொருட்டுச் சிரேஷ்டனாய்ப் பிரசித்தனாய் இருப்பவன் வர்ணாசிரம தர்மங்களை ஆசரிக்கவேண்டியது. இல்லாவிடின், உலகத்தைக் கெடுப்பதனாலுண்டாகும் பாபம் இவனை ஞானயோகத்தி லிருந்தும் கூட மாற்றிவிடும்].

[உலகத்தை நன்னெறியில் நடாத்திக் காப்பாற்ற வேண்டுமென்னும் விஷயத்தில் உனக்கு ஏதாவது அநுமானமிருந்தால், நீ என்னை ஏன் பார்க்கக்கூடாது, அதாவது, நான் நடக்கிறபடி நீயும் நடந்து உன்னுடைய நடத்தையின் உதாஹரணத்தினால் ஜனங்கள் தப்பு வழியிற் செல்லாமல் தடுப்பதற்கு நீ ஏன் பிரயத்னப்படக் கூடாது]?

ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந।
நாநவாப்தமவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி ॥

உஉ. ஓ பார்த்தா! நான் மூவுலகத்திலும் செய்ய வேண்டியது ஒன்றும் இல்லை. (நான்) அடையாததும் அடையவேண்டியதும் இல்லை. நானும் கர்மத்திலிருந்து கொண்டே இருக்கின்றேன் (நானுங்கூட லோகஸங்கிரகார்த்தமாய்க் கர்மத்தை யாசரிக்கின்றேன்).

['பிரமாணம்': லௌகிகப் பிரமாணமெனவும் வைதிகப் பிரமாணமெனவு மிருவகை].

[பரமாத்மாவாகிய கிருஷ்ணன் யாதொரு மோக்ஷத்திற்காகவும் கஷ்டப்படவேண்டிய தில்லை யென்பது திண்ணம். அவர் மானவ சரீரம் எடுத்திருந்தபோதிலும் அதனை அவர் தமது சக்தியினாலேயே எப்பொழுதேனும் நீக்கிவிடக்கூடும். எல்லாவற்றையும் அடைந்திருக்கும் அவருக்கு இந்த அற்பபூமியில் ஆகவேண்டியது யாதுமில்லை யென்பதும் வெளிப்படையே ஆயினும் அவர் க்ஷத்திரியகுலத்திற் பிறந்தமையால், யுத்தஞ்செய்து தமது கடமையை நிறைவேற்ற எத்தனித்தார். மற்றவர்கள் தம்மைப்பார்த்து அவ

ரவர்கள் குலதர்மத்தைவிடாது நடத்தும்பொருட்டு அவர் இப்படிச் செய்தார்].

யதி³ ஹ்யஹம் ந வர்தேயம் ஜாது கர்மண்யதந்த்³ரித꞉ ।
மம வர்த்மாநுவர்தந்தே மநுஷ்யா꞉ பார்த² ஸர்வஶ꞉ ॥

௨௩. நான் ஒருபொழுது கர்மத்திற் சோம்பலில்லாதவனாய்ப் பிரவர்த்தியாவிடின், ஓ பார்த்தா! மனிதர்கள் எல்லாவிதத்திலும் என்மார்க்கத்தையே அநுசரிப்பார்கள்.

['என்மார்க்கம்': அதாவது, சிரேஷ்டனா யிருப்பவனுடைய வழி]. அதனாற் கெடுதி என்னை?

உத்ஸீதே³யுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேத³ஹம் ।
ஸங்கரஸ்ய ச கர்தா ஸ்யாமுபஹந்யாமிமா꞉ ப்ரஜா꞉ ॥

௨௪. யான் கர்மஞ் செய்யா திருப்பேனாயின் இந்த ஜனங்கள்கெடுவார்கள்; ஸங்கரத்தை (கலத்தலை) விளைவிப்பவனுமாவேன்: இந்தப் பிரஜைகளைக் கெடுப்பேன்.

[இந்தப்பிரபஞ்சம் நடப்பதற்குக் காரணம் கர்மமாகும். நான் கர்மஞ் செய்யாவிட்டால் மற்றவர்களுஞ் செய்யார்கள். கர்மமின்மையினால் இவ்வுலகங்கள் பாழடையும். அன்றியும், வர்ணஸங்கரத்திற்கு (ஜாதிகள்ஒன்றோடொன்று கலப்பதற்கு)ம், அதனால் இந்தப் பிராணிகளெல்லாம் நாசமடைவதற்கும் நான் காரணமாவேன். இப்படியாக, பிராணிகளின் க்ஷேமத்திற்காகப் பாடுபடுகையில், அவர்களுக்கு நாசத்தை விளைவிக்கவேண்டி வரும். அஃது அவர்களுக்கு ஈசனாகிய எனக்குத் தகாது].

[இது நிற்க, நீயாவது, அல்லது, வேறு எவனாவது, என்னைப் போல், தனது விருப்பங்களனைத்தும் நிறைவேறியதாகவும் ஆத்மாவை அறிந்து ஞானியாகவும் இருப்பனேல், அவனுங்கூட, தனக்காக யாதொன்றுஞ் செய்யவேண்டாவிடினும், மற்றவர்களுடைய க்ஷேமத்திற்காகக் கர்மஞ் செய்தல் வேண்டும்].

[ஜாதிகள் ஒன்றோடொன்று கலக்காமற் பரிசுத்தமாயிருப்பது மிகவும் முக்கியமான தர்மம். இந்த ஜாதி ஏற்பாடானது குறைவற

விக்ன மில்லாமல் நீடூழி நடந்தேற வேண்டிய ஆவசியகத்தை ஆங்காங்குக் கிருஷ்ணன், அர்ச்சுனன் ஆகிய இவ்விருவர்களுடைய வாக்கியங்களிலுந் தெரிவித்திருக்கும் இந்தக் கிரந்தகர்த்தரது சாமர்த்தியம் வியக்கத்தக்கதே. இது இந்தக்கிரந்தம் எழுதப்பட்ட காலத்தில் க்ஷத்திரியர்கள் ஜாதி நியமங்களைக்கடந்தொழுக ஏதோ பிரயத்னப்பட்டன ரென்பதற்கும்,—தாங்கள் பிராமணர்களின் ஸ்வதந்திரங்களை வகிக்கவும் திரவிய புஷ்டியுள்ள வைசியர்களைத் தங்களுடைய அந்தஸ்துக்கு உயர்த்தவும் முயன்றன ரென்பதற்கும் (இது) நிதர்சனமென்று சிலர் கூறுவர்].

ஸக்தா꞉ கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத ।
குர்யாத்வித்வாம்ஸ்ததாஸக்தஶ்சிகீர்ஷுர்லோகஸங்க்ரஹம் ॥

௨௫. ஓ பரதவம்சத்தோனே! கர்மங்களின் பயனை விரும்பிய அஜ்ஞானிகள் எப்படிக் கர்மங்களைச் செய்கின்றார்களோ அப்படியே, ஞானியானவன் பயனை விரும்பாதவனாய் லோகஸங்கிரகஞ் செய்ய இஷ்டப்பட்டவனாய்க் (அஜ்ஞானியைப் போலவே) கர்மத்தை ஆசரித்தல் வேண்டும்.

[“இந்தக் கர்மத்தின் பயன் எனக்குக் கிடைக்கட்டும்” என்று அஜ்ஞானிகள் (அறிவிலிகள்) தாங்கள் செய்யும் கர்மத்தின் பயனை எதிர்பார்க்கிறார்கள். ‘ஞானி’=ஆத்மாவை யறிந்தவன்].

[எனக்கு, அல்லது, ஆத்மாவை யறிந்தவனாய் ஜனங்களை நல்வழிக்கு இழுக்க விரும்புகிற வேறொருவனுக்குத் தான் ஓர் உதாஹரணமாக உலகத்தவர்க்கு நடந்து காட்டுவதற்கொழிய ஒன்றுஞ் செய்ய வேண்டியதில்லை. ஆத்மாவை யறிகிறவனுக்குப் பின்வரும் புத்தி சொல்லப்படுகின்றது]:

ந புத்திபேதம் ஜநயேதஜ்ஞாநாம் கர்மஸங்கிநாம் ।
ஜோஷயேத்ஸர்வகர்மாணி வித்வாந்யுக்த꞉ ஸமாசரந் ॥

௨௬. ஞானியானவன் கர்மங்களில் ஆசையுள்ள அறிவிலிகளுக்குப் புத்திபேதத்தையுண்டாக்கலாகாது. (அவன்)

நன்றாயும் சுறுசுறுப்பாயும் (கர்மங்களைச்) செய்துகொண்டு (அவர்களை) எல்லாக் கர்மங்களையும் ஆசரிக்கும்படி செய்ய வேண்டும்.

[கர்மத்திற் பற்றுள்ள அஜ்ஞானி "நான் இந்தக் கர்மத்தைச் செய்து அதன் பயனை யநுபவிக்கவேண்டும்" என்று நம்புகின்றான். இவனுடைய இந்த உறுதியான நம்பிக்கையை ஞானியானவன் பேர்க்கடிக்கக்கூடாது.—பின்னர் அவன் செய்யவேண்டியதென்னை? அஜ்ஞானிகள் செய்யவேண்டிய கர்மத்தைத் தான் நன்றாயும் ஊக்கத்துடனும் செய்து அவர்களையும் அக்கர்மத்தை யாசரிக்குமாறு செய்தல் வேண்டும்].

['அஜ்ஞானிகள்—அறிவிலிகள், புத்தியில்லாதவர்கள்; ஆத்மஞானம் பூர்த்தியாய் இல்லாதவர்களாய், ஞானயோகத்தை யநுஷ்டிக்கச் சக்தியற்றவர்களாய், மோக்ஷத்தை விரும்பிக் கர்மங்களைச் செய்பவர்கள். 'புத்திபேதம்'—ஆத்மாவைத் தரிசிப்பதற்குக் கர்மயோகத்தைவிட வேறு சாதனமுளதெனும் புத்தியை யூட்டுதல். ஆத்மஞானம் பூர்த்தியாய் உண்டாகித் தான் ஞானயோகாதிகாரியானபோதிலும், ஞானயோகத்தின் உதவியின்றியே கர்மயோகம் ஆத்மாவலோகனத்திற்குச் சாதனமாகுமெனும் புத்தியுள்ளவனாய்க் கர்மத்தையே செய்துகொண்டு, கர்மங்களைச் செய்பவர்களுக்கு எல்லாக் கர்மங்களிலும் பிரீதியை யுண்டாக்கவேண்டும்].

அஜ்ஞானி கர்மத்திற் பற்றுக்கொண் டிருப்பதெப்படி?

ப்ரக்ருதே: க்ரியமாணாநி குணை: கர்மாணி ஸர்வஶ: ।
அஹங்காரவிமூடாத்மா கர்தாஹமிதி மந்யதே ॥

உஎ. எல்லாவிதங்களிலும் பிரகிருதியினது குணங்களால் கர்மங்கள் செய்யப்படுகின்றன. அகங்காரத்தினால் மோகத்தை யடைந்த அந்தஃகரணமுள்ளவன் 'நான் கர்த்தன் (செய்பவன்)' என்று நினைக்கின்றான்.

['பிரகிருதி'—ஸத்வரஜஸ்தமோகுணங்களின் ஸாமான்யாவஸ்தையே உருவமாக உடைய பிரதானம் என்னும் தத்துவம். ஸத்

வம்=நன்மை; ராஜஸம்=சுறுசுறுப்பு; தாமஸம்=இருள். இம்மூக்குணங்களும் ஏற்றத்தாழ்வின்றிச் சேர்ந்திருப்பது அவற்றின் சாமான்யாவஸ்தையாம். 'குணங்கள்'=காரியகாரண ரூபங்களாகிய விகாரங்கள். 'கர்மங்கள்'=லௌகிக கர்மங்களும் சாஸ்திரீயமான கர்மங்களும். பிரகிருதியின் குணங்கள், அல்லது விகாரங்கள் சரீரமாகவும் புலன்களாகவும் தோன்றுவதனுல் இம்மை மறுமைகளுக்கான நமது கர்மங்கள் செய்யப்படுகின்றன. அகங்காரத்தினுல் * மோகமடைந்திருக்கும் (மயக்குற்றிருக்கும்) மனத்தை (அந்தஃகரணத்தை) யுடையவன்,—அதாவது, தேகம்; புலன்கள், ஆகிய இவைகள் தன்னிலிருப்பனவாகவும் அவற்றிற்கும் தனக்கும்வித்தியாசமே இல்லை, அவையே தான் என்றும் நினைப்பவன்—அவன் அஜ்ஞானத்தினுற் கர்மங்களைத் தன்னிலேயே பார்க்கின்ருன். ஒவ்வொரு கர்மத்திற்கும் 'நான் கர்த்தன்' என்று நினைக்கின்ருன்].

['பிரகிருதியி ன் குணங்கள்'=ஸத்வரஜஸ்தமோ குணங்கள். 'அகங்காரம்'="நான்" என்னும் சப்தத்தினுற் சொல்லப்படாத பிரகிருதியில் "நான்" என்னும் அபிமானம் (தேகாத்மாபிமானம்). அதனுல் ஆத்ம ஸ்வரூபத்தை யறியாதவனுய்க் குண கர்மங்களின் விஷயத்தில் 'நானேகர்த்தன்' என்று கொள்கின்ருன்].

[பிரகிருதியின் விசேஷத்தினுற் குணபூதங்களும் (அப்பிரதானங்களும்) பிரகிருதி சம்பந்தமானவைகளுமாகிய இந்திரியங்களே—குணங்களாகும். பிரதிபிம்பத்திற்குக் கர்மமில்லதன்றே]?

ஆனுல், ஞானியோவெனின்:

தத்த்வவித்து மஹாபாஹோ குணகர்ம விபாகயோ: ।
குணா குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ॥

உஅ. ஓ பெரும்புயங்களையுடையோனே! குணங்களையும் (சக்திகளையும் அவற்றின்) கர்மங்களையும் நிர்ணயிப்பதில் உண்மையை யறிந்தவன் 'குணங்கள் (சக்திகள்)

* அகங்காரம்=தேகேந்திரியங்களின் தொகுதியே ஆத்மா வென்னும் எண்ணம்.

குணங்களிற் (சக்திகளில்) பிரவர்த்திக்கின்றன' என்று நினைத்து ஸங்கம் (பற்று) இல்லாதவனாயிருக்கின்றான்.

['குணங்கள் குணங்களில் பிரவர்த்திக்கின்றன'—இந்திரியங்கள் விஷயங்களிற் பிரவர்த்திக்கின்றன. இந்திரியங்களாகிய சக்திகள் விஷயங்களாகிய சக்திகளிற் செல்லுகின்றன. ஆத்மாவானது விஷயங்களில் ஒருபொழுதும் செல்லாது என்று அவன் நினைக்கின்றான். இதனால் அவன் கர்மப்பற்றில்லாதவனாகின்றான்].

['குணங்கள்'—ஸத்வம், ராஜஸம், தாமஸம்; 'கர்மங்கள்'—அவ்வவற்றின் (ஷை குணங்களின்) வியாபாரங்கள், அல்லது, வேலைகள். 'குணங்கள் குணங்களில்'—ஸத்வம் முதலிய குணங்கள் அவற்றின் காரியங்களில். 'ஸங்கமில்லாதவனாயிருக்கின்றான்'—குணங்களுடைய கர்மங்களில் 'நான் கர்த்தன்' என்று நினையான்].

[கர்மபேத குணபேதங்களின் தத்துவத்தை யறிந்தவன் இந்திரியங்கள் விஷயங்களிற் பிரவர்த்திக்கின்றன என்று நினைப்பான்].

[மேலே எடுத்துரைக்கப்பட்ட அத்வைத, விசிஷ்டாத்வைத, த்வைதபாஷ்ய சாரசங்கிரகங்களினாலும் இந்தச் சுலோகத்தின் தாற்பரியம் நன்கு புலப்பட்டதோ வெனச் சந்தேகித்துப் பின்வரும் விவரங்களை எழுதலானோம்:—

க. பிரகிருதியில் ஆடும் சக்திகள் மூன்று என்று ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அவை முக்குணங்களாம்—ஸத்வம் (நன்மையுற்றது; வியாபாரம், அல்லது, சுறுசுறுப்பு அற்றது), ராஜஸம் (தீமையுற்றது; சுறுசுறுப்புற்றது), தாமஸம் (தீமையுற்றது, சுறுசுறுப்பு அற்றது).

உ. இக்குணங்கள் தனித்தனியே வர்த்திப்பதில்லை; எப்பொழுதும் கலந்தே இருக்கின்றன. இவை ஒன்றுக்கொன்று சமமாய்க் கலந்திருப்பதில்லை. சாதாரணமாய் மூன்றில் ஏதோ ஒரு குணம் மாத்திரம் தனியாய் நிற்பது போலவும் மற்றையிரண்டு குணங்களும் இல்லை யெனத்தோற்றும் விதமாயும் அவ்வளவு ஏற்றக்குறைவாய்க் கலந்திருக்கும்.

ந. மூக்குணங்களும் இவ்வாறு கலந்து நின்று செய்யும் காரியங்கள் கசு—ஆவது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

சு. இக்குணங்கள் பிரகிருதியின் மீது பிரவர்த்திப்பதனாற் காரியம் என்பது ஏற்படுகின்றது. இவ்வாறு இவை ஒன்றுக்கொன்று கலந்து சுழலுவதையறிந்து ஞானிகள் ஒவ்வொரு கர்மம், அல்லது, காரியத்தையும் அவைகளுக்கே அன்வய (உரிமை) ப்படுத்துகின்றார்கள்.

ரு. எப்படியெனில், மனதில் ஆசை ஜனித்தால் இரண்டாவது குணம் மேலிட்டிருக்கின்றதெனவும், மதசம்பந்தமான கடமைகளைச் செய்ய வெறுப்புத் தோன்றில் மூன்றாவது குணமெனவும், அக்கடமைகளைச்செய்ய விருப்பு உண்டாயின் முதலாவது குணமெனவும் ஞானிகள் அறிகின்றார்கள். ஆனால், மூடனானவன் குணங்களின் இந்த வியாபாரத்தை உணராமல், நன்மையதாயினும் தீமையதாயினும் எல்லாக்கர்மத்திற்கும் தானே கர்த்தனெனவும் காரணபூதனெனவும் நம்புகின்றான்.

சு. இவ்வாறாகக் குணங்களின் வலிமையினால் மோகத்திற்குள்ளாகி மூடனானவன் தன்னுயுளிற்செய்யும் ஒவ்வொரு காரியத்திற்கும் தன்னைச் சம்பந்தப்படுத்திக்கொண்டு அதன் பிரயோசனத்தையும் எதிர்பார்க்கின்றான்.

எ. இந்தஸ்திதியில் அவன் தப்பிதம் செய்யாதிருப்பதற்குத் தடை சாஸ்திரவிதியின் கட்டுப்பாட்டைத்தவிர வேறொன்றுமில்லை. ஆதலால், பிராமணர்களும் உண்மையையறிந்த வித்வான்களும் தாங்கள் தப்புவழியில் நடந்து கெட்ட உதாரணமாய் ஏற்படாம விருப்பதனால் மூடர்கள் சாஸ்திரவிதிகளைக் கடவாதிருக்குமாறு ஜாக்கிரதையுங் கவனமுங் கொண்டிருத்தல் வேண்டும்].

ப்ரக்ருதேர் குணஸம்மூடா: ஸஜ்ஜந்தே குணகர்மஸு ।
தாநக்ருத்ஸ்நவிதோ மந்தாந் க்ருத்ஸ்நவிந்ந விசாலயேத் ॥

உகூ. பிரகிருதியினுடைய குணங்களினால் மோகமடைந்தவர்கள் குணங்களின் கர்மங்களில் அகப்பட்டுக்

கொள்கின்றார்கள். பூர்த்தியாய்த் தெரிந்துகொள்ளாத அந்த மூடர்களைப் பூர்த்தியாய்த் தெரிந்துகொண்டவர்கள் அசைக்கக் கூடாது.

[மூடர்கள் "நாங்கள்பயனை யுத்தேசித்துக் கர்மங்களைச் செய்கின்றோம்" என்று நம்புகின்றார்கள். கர்மத்திற் பற்றுள்ள இவர்கள் தாங்கள் செய்யும் கர்மங்களின் பயன்களைமாத்திரம் கவனிக்கின்றார்கள். பூர்த்தியாய்த்தெரிந்து கொண்டவன், அதாவது, ஆத்மஞானமுள்ளவன், அப்படிப்பட்டவர்களை அசைக்கக்கூடாது, அவர்களுடைய அபிப்பிராயத்தை மாற்றக்கூடாது, பேதமான புத்தியையுண்டாக்க (௩-அத். உசு.) லாகாது].

[ஸம்பூர்ண ஞானமில்லாதவர்கள் ஆத்மாவலோகனத்திற்காகப் பிரவர்த்தித்து, பிரகிருதியின் ஸம்ஸர்க்கம் (ஸம்பந்தம்) உள்ளவர்களானதனால், பிரகிருதியின்து குணங்களினால் ஆத்மஸ்வரூபவிஷயத்தில் மோகமடைந்தவர்களாய், காரியங்களிலேயே (கர்மங்களிலேயே) ஆசையுள்ளவர்களாயிருப்பார்கள்; பிரகிருதியைவிட விலக்ஷணமான (வேறு லக்ஷணங்களமைந்த) ஆத்மஸ்வரூபத்தில் அகப்பட்டுக்கொள்ளார். இதனால் அவர்கள் ஞானயோகஞ் செய்வதற்கு வேண்டிய சாமர்த்தியமுள்ளவர்களாகார். ஆகையால் அவர்களுக்குக் கர்மயோகத்திற்கே அதிகாரம் என்று ஏற்பட்டது. இப்படிப்பட்டவர்களை ஸம்பூர்ணஞானமுள்ளவன், தான் ஞானயோகத்தையே ஆச்ரிப்பதனால், கெடுக்கக்கூடாது. கர்மயோகத்தைவிட்ட இவனைப்பார்த்து அந்தமூடர்களும் கர்மயோகத்தில் நிலையில்லாத மனமுள்ளவர்களாவர். ஆதலால், சிரேஷ்டனாயிருப்பவன், தான் கர்மயோகத்தையே ஆசரித்துக்கொண்டு, ஆத்மயாதாத்மிய (ஆத்ம ஸத்தியம் என்னும் உண்மையான) ஞானத்தினால், "ஆத்மா கர்த்தன் அல்லன்" என்று நினைப்பவனாய், ஆத்மாவலோகனத்திற்குக் கர்மயோகமே வேறு சகாயம் வேண்டாத சாதனமென்றுகாட்டி அந்த மூடர்களுக்குக் கர்மயோகத்திற் பிரீதியுண்டாக்கவேண்டும். அஃதாவது, ஞானியும் லோகஸங்கிரகத்தி னிமித்தம் கர்மயோகத்தையாசிரித்தல் வேண்டுமென்றவாறு.

குணங்களுக்குக் கர்த்ருத்வம் சொல்வதாவது, இந்தக் கர்த்ருத்வம் ஆத்மாவுக்கு ஸ்வரூபத்தைப் பற்றிவந்ததன்று; ஆனால், குணஸம்பந்தத்தினால் வந்தது—என்று நினைத்தலாம்].

[பிரகிருதியினது குணங்களாகிய இந்திரியங்களில் மூடனாகின்றான். இந்திரியங்களின்மீது அபிமானத்தினாலன்றோ விஷயங்களிற் பிரவர்த்திக்கின்றான்? 'குணங்களின் கர்மங்களில்': அல்லது, 'விஷயங்களிலும் கர்மங்களிலும்' என்றும் சொல்லலாம்].

இப்படியாயின், மோக்ஷத்தை இச்சிப்பவனாயும் கர்மத்துக்கு மாத்திரமே அதிகாரியாயுமிருக்கிற மூடன் கர்மஞ்செய்ய வேண்டியதெவ்வாறு? இதற்கு மறுமொழி சொல்லுகின்றார்:

ஆயி ஸவ்வாணி கம்வாணி ஸஞ்ஸ்யாஸ்யாத்மசேதஸா ।
நிராஶீர்நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர: ॥

கூ0. எல்லாக் கர்மங்களையும் என்னிடத்தில் வைத்து (அத்தியாத்ம சேதஸா) ஆத்மாவினிடத்தில் மனமுள்ளவனாய், ஆசையில்லாதவனாய், மமகாரமில்லாதவனாய், பரிதாபமில்லாதவனாய்ப் போர் புரிவையாக.

["கர்த்தாவாகிய நான் ஈசுவரருக்காக அவரது சேவகனைப் போல இதனைச்செய்கின்றேன்" என்னும் பகுத்தறிவுடன் கூடிய எண்ணங்கொண்டு எல்லாக்கர்மங்களையும் வாஸுதேவனும் தெய்வமும் பரமேசுவரனும் ஸர்வஜ்ஞனும் எல்லாவற்றிற்கும் ஆத்மாவுமாகிய எனக்கு ஒப்புவிப்பாயாக, அர்ப்பிதஞ் செய்வாயாக. 'பரிதாபம்'=துக்கம், கவலை].

['அத்யாத்ம சேதஸ்ஸு'=சுருதிகளினால் உண்டாகிய ஆத்மஸ்வரூபவிஷயமான ஞானம். அதாவது, தான் பகவானுக்குச் சரீரமென்றும் பகவானாற் பிரவர்த்திக்கச் செய்யப்படுகிறவனென்றும் நினைத்தல். எல்லாருக்கும் ஈசுவரனு(நியமிப்பவனு)ம் சேஷியு(ஆள்பவனு)மாகிய பரம்புருஷனே தம்மவனாகிய ஆத்மாவினால் தனது உபகரணங் (சாதனசர்மக்கிரியை) களினால் தன்னுடைய ஆராதனைக்காகத் தானாகவே தனது கர்மங்களைச்செய்வித்துக் கொள்

கின்றார் என்று எண்ணி மமகாரம் முதலியவைகளில்லாதவனாய், பூர்வத்தில் அநாதிகாலந்தொடங்கிச் சம்பாதிக்கப்பட்ட பாபத்தொகுதியுடன் நான் எப்படி இருப்பேன் என்னும் உட் சுரம் (உள் காய்ச்சல், அல்லது, ஜ்வரம்) இல்லாதவனாய், பரமபுருஷனே கர்மங்களினால் ஆராதிக்கப்பட்டுச் சம்சாரபந்தத்தினின்று விடுவிப்பாரென்று எண்ணிச் சுகமாய்க் கர்மயோகத்தையே செய்வாயாக].

[பிராந்தி, அல்லது, மோகத்தினால் ஜீவனுக்கு ஆரோபிக்கப்பட்ட கர்மங்களைப் பகவானுக்கு விட்டு; அதாவது, பகவானே எல்லாக்கர்மங்களையுஞ் செய்கின்றாரென்று நினைத்து; இந்தக் கர்மங்களெல்லாம் பகவானுக்குப் பூஜையென்று நினைப்பாய். 'அத்யாத்ம சேதஸ்ஸ'=பரமாத்மாவினிடத்திற் பிடிமானமுள்ள மனம்].

['அத்யாத்மம்' என்னும் பதத்தைப்பற்றி எ-ஆம் அத். க-ஆவது சுலோகத்தின் வியாக்கியானத்தைப் பார்க்கவும்].

யெமெஊ தவிடிமிதஂ ஊநுதிஷுஂதிஊநவாஃ।
ஶ்ரவெதொ நஸுயனெொ ஊவ்ஜெதெவிகஊ-ஹிஃ॥

௩௧. எந்த மனிதர்கள் என்னுடைய இந்த மதத்தைச் சிரத்தையுள்ளவர்களாயும் அசூயையில்லாதவர்களாயும் எப்பொழுதும் ஆசரித்துக்கொண்டிருப்பார்களோ அவர்களும் கர்மங்களினின்று விடப்படுவார்கள்.

[அசூயையில்லாதவர்களாய், அதாவது, பரமகுருவும் வாசுதேவனுமாகிய என்விஷயத்திற் பொறாமைபுத்தியில்லாதவர்களாய், என்னுடையபோதனையாகிய இதை எப்பொழுதும் அனுசரிப்பவர்களும் கர்மப்பற்றினின்று நீக்கப்படுவார்கள். அதாவது, தர்மாதர்மங்கள், பாபபுண்ணியங்களுக்கு உள்ளாகார்கள்].

[இதுவே சாஸ்திரத்தின் தாற்பரியமென்று நினைத்து என்னுடைய மதத்தை ஆசரிப்பவரும், ஆசரிக்கமுடியாவிடினும் சிரத்தையுள்ளவர்களும், சிரத்தையில்லாவிடினும் இது சாஸ்திரதாற்பரியமன்று என்னும் அசூயை இல்லாதவர்களும்—இவர்கள் அனைவரும்,

பந்தத்திற்குக் காரணங்களாய் அநாதிகாலம் முதல் இருக்கும் கர்மங்களினின்று விடுவிக்கப்படுவார்கள். 'அவர்களும்': இப்பொழுது ஆசரிக்காவிடினும் சிரத்தையுள்ளவர்களும் அசூயையில்லாதவர்களும் அவர்களுடைய சிரத்தையினாலும் அசூயையின்மையினாலும் பாபத்தைப் போக்கிக் கொண்டவர்களாய்ச் சீக்கிரத்திலேயே இதனை யநுஷ்டித்து முக்தர்களாவார்கள் என்பதை 'அவர்களும்' என்னும் பதத்திலுள்ள 'உம்' இடைச்சொல் உணர்த்துகின்றது].

[இப்படி நிவ்ருத்தகர்மாசரணம் செய்பவர்களும் ஞானத்தின் வழியாய் முக்தியடைவார்கள். இன்னும், அபரோக்ஷ ஞானிகளைக் குறித்துச்சொல்லவேண்டியதென்னை]?

['என்னுடைய இந்த மதத்தை; அதாவது, யோகவித்தையை. ஸ்ரீ கிருஷ்ணன் அர்ச்சுனனுக்கு இதை உபதேசிப்பதனாலும், தான் 'யோகீசுவரர்' (யோகிகளுக்கு அதிபதி) எனப்படுவதனாலும், தன்னை யோகிகள் பரமாத்மா வென்பதனாலும், அவர் 'தன்னுடைய' மதம் எனப்புகன்றார். 'அசூயையில்லாதவர்களாய்:' இவருடைய கொள்கையை இகழ்ந்தவர்கள் சைவர்களாயிருக்கலாம். சிவனே பரமாத்மா வெனவும் விருஷ்ணி, அல்லது, கிருஷ்ணன் அல்லனெவும் அவர்கள் கிருஷ்ண பக்தர்களுடன் கலகித்தார்கள்ல்லவோ? மீமாம்ஸகர்களும் வேதாந்திகளும் வேதத்தைப் பிரமாணமாக ஒப்புக்கொள்ளாத மற்றைச் சாகையோரனைவரையும் இகழ்ந்தனரல்லரோ? நிரீசுவர ஸாங்கியர்களான கபிலரும் அவருடைய மதஸ்தர்களும் ஞானமே மோக்ஷசாதன மெனச்சாதிப்பதற்குப் பிரதியாய் இந்தச் சுலோகம் கர்மத்தினாலும் மோக்ஷம் சித்திக்கு மெனக் கூறுகின்றது].

யே த்வேதத³ப்⁴யஸூயந்தோ நாநுதிஷ்ட²ந்தி மே மதம்।
ஸர்வஜ்ஞாநவிமூடா⁴ம்ஸ்தாந் வித்³தி⁴ நஷ்டாநசேதஸ:॥

ங௨. எவர்கள் என்னுடைய இந்த மதத்தை அசூயை பாராட்டி ஆசரியாதிருப்பார்களோ அவர்கள் எல்லா ஞானங்களிலும் மூடர்களெனவும் கெட்டுப்போனவர்களெனவும் சித்தமில்லாதவர்களெனவும் தெரிந்துகொள்.

['அருயைப்படுதலாவது நிந்தித்தலாம். 'எல்லா ஞானங்களிலும்'—அநேகவிதங்களிலும்—அவர்கள் மூடர்கள். 'சித்தமில்லாதவர்கள்'—அவிவேகிகள்].

[ஆத்மாக்களெல்லாரும் எனக்குச் சரீரமாவதனால் என்னை ஆதாரமாக உடையவர்கள், எனது சேஷர்கள் (ஆளுகைக்குட்பட்டவர்கள்) ஆனவர்கள், என்னாலேயே பிரவர்த்திப்பவர்களென்னும் எண்ணத்துடன் எல்லாக் கர்மங்களையும் எவர்கள் செய்யார்களோ, எவர்கள் சிரத்தை பாராட்டார்களோ, எவர்கள் அசூயைப்படுவார்களோ, அவர்கள் எல்லா ஞானங்களிலும் மூடர்களென்றும், ஆகையாற் கெட்டுப்போனவர்களென்றும், மனதின் காரியமாகிய வஸ்துதத்துவஞானமில்லாமற் போவதனாற் சித்தமில்லாதவர்களென்றும், அதாவது, விபரீதஞானமுள்ளவர்களென்றும் தெரிந்துகொள்].

ஆனால், உமது மதத்தை யநுசரியாமல் அவர்கள் பிறருடைய காரியங்களைச் செய்வதும் தங்களுடைய சொந்தக் கடமைகளைக் கவனியாதிருப்பது மென்னை? இவ்வாறு உமக்கு விரோதப்பட்டும் அவர்கள் உமது கட்டளையை மீறி நடந்த பாபத்திற்குப் பயப்படாதிருப்ப தென்னை?

ஸத்₃ருʼஶம்ʼ சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருʼதேர்ஜ்ஞாநவாநபி ।
ப்ரக்ருʼதிம்ʼ யாந்தி பூ₄தாநி நிக்₃ரஹ: கிம்ʼ கரிஷ்யதி ॥

௩௩. ஞானமுள்ளவனாயினும் அவன் தனது பிரகிருதிக்கு (ஸ்வபாவத்திற்கு)த் தகுந்தபடியே வேலைசெய்வான் (நடப்பான்). பிராணிகள் பிரகிருதி (இயற்கை)யை அநுசரிக்கின்றன. நிக்கிரகம் என்செய்யும்?

['பிரகிருதி'—இந்த ஜன்மத்தின் ஆதியில் வெளியான பூர்வ ஜன்மசம்பந்தமாகிய தர்மாதர்மங்களின் ஸம்ஸ்காரம் (வாசனை). ஞானியும் தனது ஸ்வபாவத்தின்படி நடக்கின்றான். மூடன் தனது இயற்கையின்படி நடக்கின்றான் என்று சொல்லவேண்டுமோ? இவ்வாறு எல்லாப் பிராணிகளும் தங்கள் தங்கள் இயற்கையின்படி நடக்கின்றன. விலக்கு என்ன பயன்படும்? ஸ்வபாவம், அல்லது, இயற்கையென்பது என்னாலும் மற்றெவராலும் எதிர்க்கமுடியாது].

[‘ஞானி’ - ஆத்ம ஸ்வரூபம் பிரகிருதியைவிட வேறானது, அதுவே எப்பொழுதும் அநுஸந்தானம் செய்ய (தியானிக்க)த் தகுந்தது; என்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன என்னும் ஞானமுள்ளவன். ‘பிரகிருதி’=பழய வாசனை. அதனை அநுசரிக்கும் ஜந்துக்களைச் சாஸ்திரத்தினால் ஏற்படுத்தப்பட்ட நிக்கிரகம், அல்லது, விலக்கு என்ன செய்யும்?]

ஒவ்வொரு பிராணியும் தனது இயல்பின்படி நடப்பதாயின்—தனது இயற்கையென்றொன்றில்லாத பிராணியே இல்லையாயின்,—ஸ்வயமாய்ப் புருஷப்பிரயத்னத்திற்கு அவகாசமில்லாமற்போவதனால் சாஸ்திரம் பிரயோஜனமற்றதாகும். இதற்கு மறுமொழி பின்வருகின்றது:

இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ ।
தயோர்ந வசமாகச்சேத் தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ ॥

௩௪. எல்லா இந்திரியங்களின் விஷயங்களிலும் ராகமும் (விருப்பமும்) த்வேஷமும் (வெறுப்பும்) ஏற்பட்டிருக்கின்றன; அவைகளுக்கு உட்படக்கூடாது. அவை இவனுக்கு விரோதிகளல்லவோ?

[ஒவ்வொரு இந்திரியத்தின் விஷயத்திலும் இனியசப்தம் முதலிய ஹிதமானவிஷயத்திற் பிரீதியும் ஒவ்வாத விஷயத்தின்மீது வெறுப்பும் அவசியமாய் உண்டாகின்றன. இப்பொழுது புருஷப்பிரயத்னத்திற்கும் சாஸ்திரபோதனைக்கும் அவகாசம் எங்கே இருக்கிறதென்று சொல்லுகிறேன். சாஸ்திரத்தின்படி நடக்கிறவன் முதன்முதலிலேயே ராகத்துவேஷங்களுக்கு அதீனனாகக்கூடாது. ஏனெனின், புருஷனது இயல்பு (பிரகிருதி, ஸ்வபாவம்) என்பது ராகத்துவேஷங்களின் வழியாகவே அவனைத் தனதுவழிக்கு இழுக்கின்றது. அப்பொழுது அவன் தனது தர்மங்களைவிட்டு இதரதர்மங்களை ஆசிரிக்கின்றான். இப்படியல்லாமல் அவன் ராகத்துவேஷங்களாகிய எண்ணங்களை அவற்றின் சத்துரு * வைக்கொண்டு

* விவேகஞானம், அல்லது, சரியான அறிவுதான் அவைகளுக்குச் சத்துரு. ஏனெனில், மித்தியாஞானம், அல்லது, பிரமைக்கு நேர்விரோதமானது. மித்தியஞானமே ராகத்துவேஷங்களுக்குக் காரணம்.

அடக்குவானாயின் அவன் சாஸ்திரத்தின்மீது கருத்துள்ளவனாவான்; பிரகிருதிக்கு உள்ளாகான். ஆகையால், யாரும் இந்த ராகத்துவேஷங்களுக்கு உட்படாதிருமின்; ஏனெனின், அவை புருஷனுக்குச் சத்துருக்கள்; சரியான வழியில் அவன் நடப்பதற்குச் சாலையிற் கன்வரைப்போன்ற தடைகளாம்].

[சுரோத்ரம் முதலாகிய ஞானேந்திரியங்களுக்கு விஷயங்களாகிய சப்தம் முதலியவைகளின் மீதும், வாக்கு முதலிய கர்மேந்திரியங்களுக்கு விஷயங்களாகிய வார்த்தை முதலியவைகளின் மீதும் அவற்றை அநுபவிக்க விரும்புகிற ராகம் பூர்வ வாஸனையினால் உண்டாகித் தப்பாமல் இருக்கும். அந்த அநுபவம் தடுக்கப்பட்டால் நிச்சயமாய்த் துவேஷம் உண்டாகும். இந்த ராகத்துவேஷங்கள் ஞானயோகத்திற்குப் பிரயத்னஞ்செய்து இந்திரியங்களையெல்லாம் நியமனப்படுத்துகின்ற புருஷனைத் தமக்கு உள்ளாக்கிக்கொண்டு (தங்கள் வசப்படுத்திக்கொண்டு) தங்களுடைய காரியங்களிற் சேர்க்கும். அதனால் இவன் ஆக்மஸ்வரூபாநுபவத்தின்மீது பிரீதி தப்பினவனாய்க் கெடுவான். ஆகையால், ஞானயோகத்தை ஆரம்பித்து ராகத்துவேஷங்களுக்கு அதீனனாய்க் கெடக்கூடாது. ராகத்துவேஷங்கள் இவனுக்கு ஜயிக்க முடியாத சத்துருக்களல்லவோ? அவை ஞானப்பியாசத்தைப் போக்கிவிடும்].

[பின் ௩௩-ஆவது சுலோகத்திற் சொல்லியபடியே ஞானயோகத்திலும் தன்னுடைய சக்திக்குத் தகுந்தபடி நிக்கிரகஞ் செய்யவேண்டியதேயாம். நிக்கிரகத்தினால் தற்காலத்திற் பிரயோஜனமில்லாவிடினும், மிகுந்த பிரயத்னஞ் செய்வதனாற் பிரயோஜன முண்டாகும்].

இப்பவும், விருப்பு வெறுப்புக்களுடன் கூடியவன் சாஸ்திரார்த்தத்தைத் தப்பாய்க் கிரகிக்கக் கூடும்; அவன் பிறருடைய தர்மத்தை, அதுவும் தர்மமேயாதலின், அநுஷ்டிக்கலாமென்று நினைப்பான். ஆனால் அது சரியன்று.

ஶ்ரேயாந்ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்ஸ்வநுஷ்டிதாத் ।
ஸ்வதர்மே நிதநம் ஶ்ரேய: பரதர்மோ பயாவஹ: ॥

ங்டு. நன்ருய் ஆசரிக்கப்பட்ட இதர தர்மத்தைவிட, குணமில்லாததாயினும் தனது தர்மம் சிரேஷ்டமானது. தனது தர்மத்திலிருப்பவனுக்கு மரணமாயினும் மேலானதேயாம். இதர தர்மம் பயமுண்டாக்கும்.

[ஒருவன் பிறருடைய தர்மத்தை ஆசரித்துக் கொண்டு பிழைத்திருப்பதைவிடத் தனது சொந்ததர்மத்தை யாசரித்துக்கொண்டு இறப்பது நலம். ஏனெனின், பிறருடைய தர்மம் நரகம் முதலாகிய பயத்தை விளைவிக்கும்].

[பிரகிருதி சம்பந்தமுள்ளவன் ஆசரிப்பதற்கு முடியாததாகையால் ஞானயோகம் பரதர்மமாம் (பிறருடைய தர்மமாம்). நன்றாற் செய்யமுடியுமாகையாற் கர்மயோகம் ஸ்வதர்மமாம் (தனது சொந்த தர்மமாகும்). 'மேலானது'=பிரமாதம் விளைவிக்காதது. கர்மயோகத்தி லிருப்பவன் (அதாவது, கர்மயோகஞ் செய்பவன்) ஒருஜன்மத்திலேயே பயனை யடையாமல் இறந்துபோன போதிலும் அது மேலானதேயாம். இடையூறுகளினுற் பாதிக்கப்படாததனுல் மறுஜன்மத்திலாவது கலக்கமில்லாத கர்மயோகம் சம்பவிக்கும். ஞானயோகம் பிரமாதத்தை உண்டாக்கக் கூடுமாகையால் அது பயம் விளைவிப்பதேயாம்].

[யுத்தம் ராகத் துவேஷங்களுடன் கூடியதானபோதிலும் அதனை நடத்தவேண்டியதேயாம்].

இந்தச் சுலோகத்திலுள்ள "நன்ருய் ஆசரிக்கப்பட்ட இதர தர்மத்தைவிட, குணமில்லாததாயினும் தனது தர்மம் சிரேஷ்டமானது" என்னும் வாக்கியம் கஅ-ஆவது அத். சஅ-ஆவது சுலோகத்தில் மறுபடியும் சொல்லப்பட்டிருக்கிறது. அங்கு 'குணமில்லாததாயினும்' என்னும் விஸ்தாரார்த்தமுள்ள பதம் சந்தர்ப்பத்தினுல் விளக்கப்படுகின்றது. எப்படியெனின், அந்தப் பதினெட்டாவது அத்தியாயம் சஅ-ஆவது சுலோகத்தில்—"தனது பிறப்புக்குரிய தர்மம், அதாவது, ஸஹஜ தர்மம், தோஷத்துடன் கூடியதாயினும் அதனை விடக்கூடாது; ஏனெனின், நெருப்பு புகையினுல் மூடப்பட்டிருப்பதுபோல, புருஷப்பிரயத்னங்களெல்லாம் தோஷத்தினுல்

ஆவரிக்கப்பட்டிருக்கின்றன" என்று கிருஷ்ணபகவான் சொல்லுகிறார். முதல் அத்தியாயம் ௩௰-ஆவது சுலோகத்தில் அர்ச்சுனன் தனது க்ஷத்திரிய தர்மம், தன்னுடைய சொந்த பந்துக்களையுங் கொல்ல விதிப்பதனால், கெட்டதென்றும் தீமையுற்றதென்றும்; தன்னை அடிக்கவந்தும் சண்டைக்கு ஏற்படாத பிராஹ்மண தர்மத்தைத் தான் அநுசரிக்க ஆவல்கொண்டிருக்கிறனென்றும் முறையிட்டான். ஒருவனுடைய ஜாதிக்குரிய தர்மம், அஃது எவ்வளவு கெடுதலுள்ளதாயினும், அந்நிய ஜாதியின் தர்மத்தைவிட மேலானதென்று கிருஷ்ணபகவான் இப்பொழுது உத்தர மளிக்கின்றார். அந்தந்த ஜாதியார் தங்கள் தங்களுக்குரிய தொழிலைக் கைவிடாது கட்டாயமாய்ச் செய்யவேண்டுமென்றும் மற்றவருடைய தொழிலைச் செய்யலாகாதென்றும் வற்புறுத்துகின்றார். இதனைச் சிலர், க்ஷத்திரியர்கள் அக்காலத்திற் பிராமணர்களது அதிகாரத்தை வகிக்க விரும்பாவிடினும் அவர்களது தொழிலைச் செய்ய முயன்றனரென்பதற்கு ஒரு திருஷ்டாந்தமாகக் கொள்வர்].

இரண்டாவது அத். ௬௨-ஆவது முதலிய சுலோகங்களிலும் மூன்றும் அத். ௩௪-ஆவது சுலோகத்திலும் தீமையி (துன்பத்தி)ன் மூலம் சுட்டிக்காட்டப்பட்டபோதிலும், அங்கு சாதாரணமாயும் குறிப்பாயும் சொல்லப்பட்ட விஷயத்தைத் தெளிவாயும் சுருக்கமாயும் சொல்ல லைக்கும் பொருட்டு—சரியான காரணம் இன்னதென்று தெரிந்தால் அதனைக் களைவதற்குப் பிரயத்நப்படக் கூடுமாதலால்—அர்ச்சுனன் வினவுகின்றான்:

அர்ச்சுனன் சொல்லியது.

𑌅𑌥 𑌕𑍇𑌨 𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌯𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌚𑌰𑌤𑌿 𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 ।

𑌅𑌨𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌨𑌪𑌿 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯 𑌬𑌲𑌾𑌦𑌿𑌵 𑌨𑌿𑌯𑍋𑌜𑌿𑌤𑌃 ॥

௩௬. ஓ விருஷ்ணி வம்சத்தோனே (கிருஷ்ணா)! ஆனால், இந்தப் புருஷன் விரும்பாதிருந்தாலும், எதனாற் பிரேரணைசெய்ய (தூண்ட) ப்பட்டவனாய்ப் பலாத்காரத்தினாற் செய்பவனைப்போலப் பாபத்தைச் செய்கின்றான்?

['பிரேரணை', 'பலாத்காரம்': அரசன் சேவகனை நிர்பந்தப் படுத்திச் செய்விப்பதுபோல].

['இந்தப்புருஷன்': ஞாநயோகத்திற்குப் பிரவர்த்திப்பவன். 'பாபம்': விஷயாநுபவம்].

['ஆனல்': வேறுவிஷயம் சொல்லப்படுகின்றது என்பதைத் தெரிவிக்கின்றது. க்ர்மத்திற்குக் காரணங்கள் க்ரோதம் முத லானவைகளும் காமமும் இன்னும் அநேகங்களும் உண்டு. அவற் றில் எது பலமுற்றது ] ?

பகவான் சொல்லுகின்றார்: கேள், நீ வினவுகின்ற அந்தச் சத்துரு யார் என்று, துன்பத்துக்கெல்லாம் மூலகாரணம், சொல் லுகின்றேன்.

[இங்கு 'பகவான்' என்பட்டவர் வாசுதேவரே யாவர்—ஐசு வரியம் முதலிய ஆறுகுணங்களும் ஒன்றுசேர்ந்து சம்பூரணமாய்ப் பொருந்தியவரும் ஜகத்தின் உற்பத்தி முதலியவைகளை நன்கு யறிந்தவருமாகிய அந்த வாசுதேவர். இப்புத்தகத்தின் உக - ஆ வது பக்கத்தின் அடியில் விஷ்ணுபுராணத்திலிருந்து எடுத்தெழு தப்பட்ட இரண்டு குறிப்புக்களையும் பார்க்க].

ஸ்ரீபகவான் சொல்லியது.

𑌕𑌾𑌮 𑌏𑌷 𑌕𑍍𑌰𑍋𑌧 𑌏𑌷 𑌰𑌜𑍋𑌗𑍁𑌣𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 ।

𑌮𑌹𑌾𑌶𑌨𑍋 𑌮𑌹𑌾𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌨𑌮𑌿𑌹 𑌵𑍈𑌰𑌿𑌣𑌮𑍍 ॥

ஙஎ. இது (நீ கேட்டகாரணம்) ரஜஸ் என்னும் குண த்தினின்று பிறக்கும் காமம். இதுவே க்ரோதம். * இது பெருந்தீனியுள்ளது. இது பெரும் பாபம். இதனை இவ்வுல கின்கண் சத்துருவென்றறி.

[காமம் (விருப்பம்) என்பது எல்லாரையுஞ் சுவாதீனஞ் செய் துகொள்ளும் சத்துருவாம். அநர்த்தங்களெல்லாம் இதனாலேயே

* ஒரு வஸ்துவைத் தான் விரும்பும்பொழுது வேறு எவனே னும் அதற்குத்தடைசெய்தால் உடனே கோபமுண்டாகும் ஆத லால் இதுவே க்ரோதமெனப்படும்.

உண்டாகின்றன. இந்தக் காமம் வேறொன்றினால் தடுக்கப்பட்டாற் குரோதமாகத் திரிகின்றது. இது ரஜோகுணத்திற் பிறக்கின்றது; அல்லது, ரஜோகுணம் இதனாலேயே உண்டாகின்றது. எப்படியெனின், ஆசைபிறந்தால் அது ரஜோகுணத்தைத் தூண்டிக் காரியத்தைச் செய்விக்கின்றது.ஊழியத்தொழில் முதலியவற்றில் அமர்ந்திருக்கும் தௌர்ப்பாக்கியர்கள் 'ஆசையினால் இந்தக்காரியஞ் செய்யலானேன்' என்று சொல்வதை (ரஜோகுணத்தின்பயன்) க்கேட்கின்றோம். பிராணிகள் காமத்தினால் தூண்டப்பட்டவர்களாய்ப் பாபங்களைச்செய்வதனால் 'இது பெரும்பாபம்' என்று சொல்லப்பட்டது. ஆகையால், இவ்வுலகிற் சம்சாரத்தில் இந்தக் காமத்தைச் சத்துரு வென்றறி].

[ஸத்வ ரஜஸ் தமோ குணமயமான பிரகிருதியுடன் கூடினவனாய் ஞானயோகத்தை ஆரம்பித்தவனுக்குப் பூர்வத்து வாசனையினாலுண்டாகிய சப்தம் முதலிய விஷயங்களின் சம்பந்தமான காமம் இவனை விஷயாநுபவத்திற்கு இழுக்கின்றது. இந்தக் காமமே தடுக்கப்பட்டதாகி அப்படித் தடுத்தவர்களின் மீது குரோதரூபமாய்த் திரிந்து இதரர்களை வருத்துவது முதலாகிய மகா பாபகாரியங்களைச் செய்விக்கும். ரஜோகுணத்தினா லுண்டாகிய இந்தக் காமத்தை ஞானயோகத்திற்கு ஸஹஜ சத்துருவாய்த் தெரிந்துகொள்].

[கர்மங்களைப் பிரவர்த்திக்கச் செய்பவைகளிற் பிரபலமானது இந்தக் காமமேயாம்; குரோதம் இதனாற்பிறக்கின்றமையால் இதுவே குரோதமாகும். குருமார்களை நிந்திப்பது முதலாகியவைகளினாலுண்டாகும் குரோதங்கூட, தனக்குக் குருமார் முதலானவர்களின் மீதிருக்கும் பக்தியினால் அவர்களை நிந்தியாதிருத்தல் வேண்டுமென்னும் விருப்பத்தினா லுண்டானதேயாம். காமத்திற்குப் போக்யம் (அநுபவிக்கப்படத் தகுந்தது) அதிகமாயிருப்பதினால் அது 'பெருந்தீனியுள்ளது' எனப்படும். பிரம்மஹத்தி முதலிய பெரும் பாபங்களுக்குக் காரணமாதலின் 'இது பெரும் பாபம்' எனப்படும். புருஷார்த்தங்களுக்கெல்லாம் விரோதியாதலின் 'சத்துரு' வெனப்பட்டது].

அது வைரியாயிருப்பது எப்படி என்பதற்கு உதாரணங் கொடுக்கின்றார்:

𑌧𑍂𑌮𑍇𑌨𑌾𑌵𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌹𑍍𑌨𑌿𑌰𑍍𑌯𑌥𑌾𑌦𑌰𑍍𑌶𑍋 𑌮𑌲𑍇𑌨 𑌚 ।
𑌯𑌥𑍋𑌲𑍍𑌬𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑍋 𑌗𑌰𑍍𑌭𑌸𑍍𑌤𑌥𑌾 𑌤𑍇𑌨𑍇𑌦𑌮𑌾𑌵𑍃𑌤𑌮𑍍 ॥

௩௮. புகையினல்நெருப்பு எப்படி ஆவரிக்கப்படுகின்றதோ, கண்ணாடி அழுக்கினல் எப்படி ஆவரிக்கப்படுகின்றதோ, கர்ப்பம் கருப்பையினல்* எப்படி ஆவரிக்கப்படுகின்றதோ அப்படியே அதனல் இஃது ஆவரிக்கப்பட்டிருக்கின்றது.

[மேற் கூறியவை காமம் சத்துருவாவதற்குத் திருஷ்டாந்தங்களாம். 'இஃது' : ஞானம்].

['இஃது': பிராணிகளின் தொகுதி].

[பிரகாசமான ரூபமுள்ளதாயினும் அக்கினியானது புகையினல் மூடப்பட்டு இதரர்களினல் எப்படிப் பார்க்கப்படாததாகுமோ, அப்படியே பரமாத்மாவும் நம்முடைய காமத்தினல் மூடப்பட்டுப் பார்க்கப்படாதவராகின்றார். அழுக்கு முதலியவை படிந்த கண்ணாடியில் முகம் எப்படித் தெரியாதோ, அப்படிக் காமத்தினல் மூடப்பட்ட அந்தக்கரணம் ஜீவேசுவராதிகளைத் தெரிந்துகொள்ளச் சக்தியற்றதாகும். உல்பத்தினல் மூடப்பட்ட கர்ப்பம் தனது வேலையை எப்படிச்செய்ய முடியாதோ அப்படிக் காமத்தினல் மூடப்பட்ட ஜீவன் ஈசுவரன் முதலியவர்களைத் தெரிந்துகொள்ளச் சக்தியற்றவனுவன்].

'இது' என்பது யாது, ஆசையினல் மூடப்பட்டிருப்பது யாது? மறுமொழி கூறுகின்றார்:

---

*"உத்தரம்வா உல்பாஜ்ஜராயு:" என்னும் சுருதியினற் கர்ப்பத்திலிருக்கும் சிசுவுக்கு மேலிருப்பது 'உல்பம்.' அதற்குமேலிருப்பது 'ஜராயு' (கருப்பை). ஆயினும், 'உல்பம்' 'ஜராயு' என்னும் பதங்கள் வித்தியாசமின்றி யுபயோகிக்கப்படுகின்றன.

உண்டாகின்றன. இந்தக் காமம் வேறொன்றினால் தடுக்கப்பட்டாற் குரோதமாகத் திரிகின்றது. இது ரஜோகுணத்திற் பிறக்கின்றது; அல்லது, ராஜோகுணம் இதனாலேயே உண்டாகின்றது. எப்படியெனின், ஆசைபிறந்தால் அது ரஜோகுணத்தைத் தூண்டிக் காரியத்தைச் செய்விக்கின்றது. ஊழியத்தொழில் முதலியவற்றில் அமர்ந்திருக்கும் தௌர்ப்பாக்கியர்கள் 'ஆசையினால் இந்தக்காரியஞ் செய்யலானேன்' என்று சொல்வதை (ரஜோகுணத்தின்பயன்) க்கேட்கின்றோம். பிராணிகள் காமத்தினால் தூண்டப்பட்டவர்களாய்ப் பாபங்களைச்செய்வதனால் 'இது பெரும்பாபம்' என்று சொல்லப்பட்டது. ஆகையால், இவ்வுலகிற் சம்சாரத்தில் இந்தக் காமத்தைச் சத்துருவென்றறி].

[ஸத்வ ரஜஸ் தமோ குணமயமான பிரகிருதியுடன் கூடினவனாய் ஞானயோகத்தை ஆரம்பித்தவனுக்குப் பூர்வத்து வாசனையினாலுண்டாகிய சப்தம் முதலிய விஷயங்களின் சம்பந்தமான காமம் இவனை விஷயாநுபவத்திற்கு இழுக்கின்றது. இந்தக் காமமே தடுக்கப்பட்டதாகி அப்படித் தடுத்தவர்களின் மீது குரோதரூபமாய்த் திரிந்து இதரர்களை வருத்துவது முதலாகிய மகா பாப காரியங்களைச் செய்விக்கும். ரஜோகுணத்தினாலுண்டாகிய இந்தக் காமத்தை ஞானயோகத்திற்கு ஸஹஜசத்துருவாய்த் தெரிந்துகொள்].

[கர்மங்களைப் பிரவர்த்திக்கச் செய்பவைகளிற் பிரபலமானது இந்தக் காமமேயாம்; குரோதம் இதனாற்பிறக்கின்றமையால் இதுவே குரோதமாகும். குருமார்களை நிந்திப்பது முதலாகியவைகளினாலுண்டாகுங் குரோதங்கூட, தனக்குக் குருமார் முதலானவர்களின் மீதிருக்கும் பக்தியினால் அவர்களை நிந்தியாதிருத்தல் வேண்டுமென்னும் விருப்பத்தினாலுண்டானதேயாம். காமத்திற்குப் போக்யம் (அநுபவிக்கப்படத் தகுந்தது) அதிகமாயிருப்பதினால் அது 'பெருந்தீனியுள்ளது' எனப்படும். பிரம்மஹத்தி முதலிய பெரும் பாபங்களுக்குக் காரணமாதலின் 'இது பெரும் பாபம்' எனப்படும். புருஷார்த்தங்களுக்கெல்லாம் விரோதியாதலின் 'சத்துரு' வெனப்பட்டது].

அது வைரியாயிருப்பது எப்படி என்பதற்கு உதாரணங் கொடுக்கின்றார்:

யஂெந நாவியதெ வஹ்நி யூயாாஂ ஊஂலொ ஶஸெந வ।
யயொஂஷெ நாவ்ரூதொ ஂஹஂ ஸ்யாஂதெநெஷ ஶாவ்ரூதஂ॥

௩அ. புகையினால்நெருப்பு எப்படி ஆவரிக்கப்படுகின்றதோ, கண்ணாடி அழுக்கினால் எப்படி ஆவரிக்கப்படுகின்றதோ, கர்ப்பம் கருப்பையினால்* எப்படி ஆவரிக்கப்படுகின்றதோ அப்படியே அதனால் இஃது ஆவரிக்கப்பட்டிருக்கின்றது.

[மேற் கூறியவை காமம் சத்துருவாவதற்குத் திருஷ்டாந்தங்களாம். 'இஃது' : ஞானம்].

['இஃது': பிராணிகளின் தொகுதி].

[பிரகாசமான ரூபமுள்ளதாயினும் அக்கினியானது புகையினால் மூடப்பட்டு இதரர்களினால் எப்படிப் பார்க்கப்படாததாகுமோ, அப்படியே பரமாத்மாவும் நம்முடைய காமத்தினால் மூடப்பட்டுப் பார்க்கப்படாதவராகின்றார். அழுக்கு முதலியவை படிந்த கண்ணாடியில் முகம் எப்படித் தெரியாதோ, அப்படிக் காமத்தினால் மூடப்பட்ட அந்தக்கரணம் ஜீவேசுவராதிகளைத் தெரிந்துகொள்ளச் சக்தியற்றதாகும். உல்பத்தினால் மூடப்பட்ட கர்ப்பம் தனது வேலையை எப்படிச்செய்ய முடியாதோ அப்படிக் காமத்தினால் மூடப்பட்ட ஜீவன் ஈசுவரன் முதலியவர்களைத் தெரிந்துகொள்ளச் சக்தியற்றவனாவன்].

'இது' என்பது யாது, ஆசையினால் மூடப்பட்டிருப்பது யாது? மறுமொழி கூறுகின்றார்:

---

*"உத்தரம்வா உல்பாஜ்ஜராயு:" என்னும் சுருதியினால் கர்ப்பத்திலிருக்கும் சிசுவுக்கு மேலிருப்பது 'உல்பம்.' அதற்குமேலிருப்பது 'ஜராயு' (கருப்பை). ஆயினும், 'உல்பம்' 'ஜராயு' என்னும் பதங்கள் வித்தியாசமின்றி யுபயோகிக்கப்படுகின்றன.

𑌆𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍇𑌤𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌵𑍈𑌰𑌿𑌣𑌾 ।
𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑍇𑌣 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌦𑍁𑌷𑍍𑌪𑍂𑌰𑍇𑌣𑌾𑌨𑌲𑍇𑌨 𑌚 ॥

௩௯. ஓ குந்திபுத்திரா! எப்பொழுதும் சத்துருவானதும் விருப்பமே ஸ்வரூபமா யுள்ளதும் நிரப்ப முடியாததும் திருப்தி இல்லாததுமாகிய இதனால் ஞானியினுடைய ஞானம் மூடப்பட்டிருகின்றது.

[ஞானமுள்ளவனுக்கு இஃது இடைவிடாத சத்துரு; ஏனெனின், அவன் இதனால் நான் அநர்த்தத்திற் குள்ளானேன் என்று தெரிந்து கொண்டவனாய் வருத்தப்படுகின்றான். ஆகையால், இது ஞானமுள்ளவனுக்குச் சத்துருவேயன்றி மூர்க்கனுக்கு அன்று. என்னை யெனின், ஆசை பிறந்த காலத்து மூர்க்கனானவன் காமத்தைத் தனக்கு இஷ்டமான சிநேகிதனென்று நினைக்கின்றான்; அதனால் துக்கம் வரும்பொழுதுதான்—அதற்கு முன்னாலன்று—ஆசையினால் நான் இப்படித் துக்க மடைந்தேனென்று தெரிந்துகொள்கின்றான். ஆதலால் இது ஞானிக்கே சத்துருவாகும்......அது திருப்தி செய்விக்க முடியாத நெருப்பாம்; பேராசையுள்ளது (அநலம்), ஏனெனில் (பகுதிப்பொருளின் படி) 'போதும்' என்பது அதற்கு இல்லை, எதுவும் அதற்குப்போதாது, அதன் பக்ஷணசக்திக்கு அளவில்லை].

[ஞானமே ஸ்வபாவமா யுள்ளவனாயினும் இந்த ஜீவனுடைய ஞானம் இதனால் மூடப்பட்டிருக்கின்றது. 'நிரப்ப முடியாதது'—அடைய முடியாத விஷயங்களுள்ளது].

[சாஸ்திரத்தினால் ஞானம் உண்டானபோதிலும் அது காமத்தினால் மூடப்படின் பரமாத்மாவை நேராய் அறிவதற்குப் பிரகாசிக்காது, பயன்படாது. விசேஷமாய் ஞானமுள்ளவனுக்கே இப்படியிருக்கச் சொற்ப ஞானமுள்ளவனது விஷயத்தைச் சொல்லவேண்டுவதேன்? 'விருப்பமே ஸ்வரூபமா யுள்ளது'—காமம் என்னும் பெயருடையது. துக்கத்தினாற் காமம் நிரப்பப்படுகின்றதன்றோ?

ஆதலால், சுலோகத்தில் அது 'துஷ்பூரம்' * எனப்பட்டது. இந்திர பதவி முதலியன சுகத்திறைச் சித்தியா வல்லவோ? இந்திராதி பதவி கிடைத்தாலும் பிரம்ம பதவி முதலியன் விரும்பப்படுமாகையாற் 'போதும்' என்னும் புத்தியுண்டாகாது. ஆதலாற் காமம் 'அநலம்' (திருப்தியில்லாதது) என்னப்பட்டது].

இப்பொழுது, ஞானத்தைக் கவர்ந்துகொள்வதனால் உலகத்திற்கெல்லாம் சத்துருவாய் ஏற்படுகின்ற காமத்தின் இருப்பிடம் யாது என்று சொல்லப்போகிறார். சத்துருவின் இருப்பிடம் தெரிந்தால் அவனை ஜயிப்பது எளிது.

இந்த்ரியாணி மநோ புத்திரஸ்யாதிஷ்டாநமுச்யதே ।
ஏதைர்விமோஹயத்யேஷ ஜ்ஞாநமாவ்ருத்ய தேஹிநம் ॥

௪0. இந்திரியங்களும் மனதும் புத்தியும் இதற்கு இருப்பிடமெனப்படும். இவைகளினால் ஞானத்தை மூடிக்கொண்டு அஃது ஆத்மாவை மோகிக்கச் செய்கின்றது.

["இதற்கு'=காமத்திற்கு. 'இவைகளினால்'=ஆசைக் கிருப்பிடமாகிய இந்திரியங்கள் முதலியவற்றால்].

[இந்தக் காமம் இந்திரியம் முதலானவைகளைச் சாதனங்களாகக்கொண்டு ஆத்மாவை ஆச்ரயித்திருக்குமாதலின் அந்த இந்திரியாதிகள் இந்தக் காமத்திற்கு அதிஷ்டானம், அல்லது, இருப்பிடமெனப்படும். 'மோகிக்கச் செய்தல்'=ஆத்ம ஞானத்தின் மீது வெறுப்பும் விஷயாநுபவத்தில் ஆசையும் உண்டாக்குதல்].

[புத்திமுதலானவை விஷயங்களை அடைந்தாலன்றோ ஞானம் மூடப்படும்? அதிஷ்டானம், அல்லது, இருப்பிடம் நாசமானால் சத்துருவும் இல்லாமற் போவான்].

[முக்குணங்கள் நேராய் ஆத்மாவைப் பாதிக்கமாட்டா வென்றறியவேண்டும். ஏனெனின், அவற்றின் அதிகாரம் பிரகிருதியை—

* 'தீர்ப்ப முடியாதது' என்று நாம் மொழி பெயர்த்திருக்கிறோம்.

வியக்தாவ்யக்தப் பிரகிருதியை * க் கடந்து செல்லாது. மனதும் புத்தியும், இந்திரியங்களைப்போல, வியக்தப் பிரகிருதியின் அம்சங்களாம். இவைகளின் மூலமாய்ப் பிரகிருதி புருஷனுடன் சம்பந்தப்பட்டிருக்கின்றது. தேகம் ஆத்மாவுடன் சம்பந்தப்பட்டிருக்கின்றது. இவ்வாறு, வெளியுலகத்து விஷயங்கள் இந்திரியங்களினாற் கிரகிக்கப்பட்டு உடனே மனதிற்குப் போகின்றன. அவைகளை மனது புத்திக்குச் செலுத்துகின்றது. புத்தி ஆத்மாவுக்குச் செலுத்துகின்றது. ஆனால் மனது ஆத்மாவின் ஆளுகைக் குட்படாதிருந்தால் அது காமக்குரோதாதிகளினால் மயங்கித்தடுமாறி வெளியுலகத்து விஷயங்களைச் சரியாய்க் கிரகிக்காது. தப்பான அபிப்பிராயத்தை ஆத்மாவினிடத்திற் சேர்ப்பதனால் ஆத்மாவும் மயங்கிப்போகின்றது].

தஸ்மாத் த்வமிந்த்ரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப ।
பாப்மாநம் ப்ரஜஹி ஹ்யேநம் ஜ்ஞாநவிஜ்ஞாநநாசநம் ॥

௪௧. ஓ பரத வம்சத்தோரிற் சிரேஷ்டனே! ஆதலால் நீ முதன் முதலில் இந்திரியங்களை யடக்கிக்கொண்டு, ஞானத்தையும் விஜ்ஞானத்தையும் நாசஞ்செய்வதும் பாபஸ்வரூபமுள்ளதுமான இதனைப்போக்குவி.

[‘பாபம்’=காமம். ‘ஞானம்’=சாஸ்திரங்களினாலும் ஆசாரியரிடத்திருந்தும் ஆத்மாமுதலான விஷயங்களைத் தெரிந்து கொள்ளுதல். ‘விஜ்ஞானம்’=அப்படிக் கற்றவைகளைச் சொந்த அநுபவத்திற்குக் கொண்டுவருதல். இவ்விரண்டும் மேன்மை யடைவதற்குச் சாதனங்களாம்].

[எல்லா இந்திரிய வியாபாரங்களையும் அடக்குவதே ஸ்வரூபமாயுள்ள ஞானயோகத்திற் பிரவர்த்தித்தவனுக்குக் காமமென்னும் இந்தச் சத்துரு விஷயங்களின் மீது பிரீதியை யுண்டாக்கி ஆத்மாவின் விஷயத்தில் வெறுப்பை உண்டாக்குமாதலின்; பிரகிருதியின்

* வியக்தம்=வெளிப்படையானது. அவ்யக்தம்=சூக்ஷ்மமானது.

சம்பந்த மிருப்பதனால் இந்திரிய வியாபாரங்களிலேயே ஆசையுள்ள நீ முதன்முதலில், அதாவது, மோக்ஷோபாயத்தைத்தேட ஆரம்பிக்கும்பொழுது இந்திரிய வியாபார ரூபமான கர்மயோகத்திலேயே இந்திரியங்களை நிருத்தி இந்தக் காமத்தை நசிக்கச்செய். 'ஞானம்'= ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளுதல். 'விஜ்ஞானம்'=ஆத்மா தேகத்தைவிட வேறான தென்றறிதல்].

[ஞானம், விஜ்ஞானம் இவ்விரண்டையுங் குறித்து ௭-ஆவது அத்-இரண்டாவது சுலோகத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது].

"ஆதிமுதல் இந்திரியங்களை அடக்கிக்கொண்டு உனது சத்துருவாகிய காமத்தைத் தவிர்" என்று உபதேசிக்கப்பட்டது. இப்பொழுது ஒருவன் எங்கு நிலைகொண்டு ஆசையை யொழித்தல் வேண்டும் என்று கேட்கலாம். இதற்குப் பதில் சொல்லப்படுகின்றது:

இந்த்ரியாணி பராண்யாஹுரிந்த்ரியேப்ய: பரம் மந: ।
மநஸஸ்து பரா புத்திர்யோ புத்தே: பரதஸ்து ஸ: ॥

௪௨. இந்திரியங்கள் சிறந்தவைகளெனச் சொல்லுகின்றார்கள். இந்திரியங்களைவிட மனது சிரேஷ்டமானது. மனதைவிட உயர்ந்தது புத்தியாம். புத்திக்கு மேலானவன் எவனோ அவன் (பரமாத்மாவாவன்).

[புலன்கள் ஐந்துள: கேட்டல் முதலியன. வெளிப்படையாய்த் தோற்றுவதும், தேசகால நிர்ப்பந்தத்திற் குள்ளானது மாகிய ஸ்தூல தேகத்துடன் ஒப்பிட்டுப்பார்க்கும் பொழுது இந்திரியங்கள் (புலன்கள்) மேலானவையேயாம். ஏனெனில், தேகத்தைவிட அவை சூக்ஷ்மமாயும் வெளிக்குத் தோற்றாதவைகளாயும், வியாபாரத்துக்கு அதிக அவகாச முள்ளனவாயு மிருக்கின்றன. ஆத்மஞானமுள்ள ஞானிகள் இவ்வாறு சொல்லுகின்றார்கள். நினைவுகளும் ஆசைகளும் பிணக்குகளும் அநுமானங்களும் (சங்கற்பங்களும் விகற்பங்களும்) அடங்கிய மனது இந்திரியங்களுக்கு மேலானது. நிச்சயஞானமுள்ள புத்தியானது மனதைவிடச் சிரேஷ்டமானது. ஆகையால், புத்தி

யுள்பட எல்லாத்திருசிய (தெரியப்படுகின்ற) பதார்த்தங்களுக்கும் உள்ளானவனும் தேகவந்தனுகி (தேகத்தை உடையவனுகி) இந்திரியங்களை ஆசிரயித்திருக்கும் காமம் ஞானத்தை மூடிக்கொள்வதனுல் மோகிக்கச் செய்யப்படுவதாகச் சொல்லப்படுகின்றவனும் ஆகிய அவன்—புத்தியைப் பார்க்கின்றவன், ஆத்மா—அவனே தெரிந்துகொள்ளும் பரமாத்மா. அவன் புத்தியைவிடச் சிரேஷ்டமானவன்].

[இந்திரியங்கள் சிரேஷ்டமானவை யென்பதனுல் அவற்றின் பிரபலத்துவம் ஞானத்திற்கு விரோதமாயிருப்பதில் என்றறிக. இந்திரியங்கள் விஷய வியாபாரத்தில் அமர்ந்திருந்தால் ஆத்ம ஞானம் பிரவர்த்தியாது. இந்திரியங்கள் ஒடுங்கினும் மனது விஷயங்களின் மீது ஆசை கொண்டிருந்தால் ஆத்மஞான முண்டாகாது. மனது வேறு வியாபாரங்க ளில்லாத தாயினும், விரோதமான நிச்சயமுண்டாயின் ஞானம் பிரவர்த்தியாது. இவையெல்லாம் பொருந்தியும், விருப்ப மென்பது இருந்தால் அஃது இந்திரியங்கள் முதலானவைகளையெல்லாம் தன்னுடைய விஷயத்தில் நடப்பித்து ஆத்ம ஞானத்தைத்தடுக்கும். ஆகையால், புத்தியைவிட மேலே எது உளதோ அது காமம் என்று தாற்பரியம்].

[சத்துருவைக் கொல்வதற்கு ஆயுதத்தைப் போன்ற தாகிய ஞானத்தைச் சொல்வதற்கு இந்தச் சுலோகத்தில் ஞேயம் (தெரிந்து கொள்ளவேண்டியது) சொல்லப்படுகின்றது. சரீரத்தைவிட இந்திரியங்கள் சிரேஷ்டமானவை. புத்தியைவிடச் சிரேஷ்டமானவன் எவனே அவனே தெரிந்து கொள்ளப்படவேண்டியவன். அவன் ஈசுவரன். அவன் புத்தியை விட மாத்திரம் சிரேஷ்டனல்லன்; அவ்யக்தத்தை (பிரகிருதியை) விடவும் சிரேஷ்டனேயாவன்].

𑌏𑌵𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌪𑌰𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌸𑌂𑌸𑍍𑌤𑌭𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 ।
𑌜𑌹𑌿 𑌶𑌤𑍍𑌰𑍁𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑌂 𑌦𑍁𑌰𑌾𑌸𑌦𑌮𑍍 ॥

௪௩. ஓ பெரும்புயங்களுடையோனே! இவ்வாறு புத்தியை விடச் சிரேஷ்டமானதைத் தெரிந்துகொண்டு, ஆத்

மாவை ஆத்மாவினுல் (தன்னுல்) அடக்கி, வெல்வதற்கரிய காமஸ்வரூபமான சத்துருவை நசிக்கச்செய்.

[புத்தியைவிடச்சிரேஷ்டமான ஆத்மாவைத்தெரிந்துகொண்டு அந்த ஆத்மாவினுலே மனதை யடக்கித்தெரிந்து கொள்வதற்கு அசாத்தியமான அநேக விசேஷங்களுள்ள இந்தக் காமத்தைக் கொல்வையாக].

[காமத்தைப் புத்தியைவிட உத்கிருஷ்டமான ஞானயோகத்திற்கு விரோதியென்று தெரிந்துகொண்டு (ஆத்மாவினுல் = )புத்தியினுல் மனதைக் கர்மயோகத்தில் நிறுத்தி, இந்தக் காமமென்னும் சத்துருவை நசிக்கச்செய்].

[புத்தி முதலானவைகளைவிட உத்கிருஷ்டரான ஹரியைத் தெரிந்து கொள். ஆத்மாவை = மனதை; ஆத்மாவினுல் = புத்தியினுல்].

இவ்வாறாக உபநிஷதர்த்தத்தை விளக்குவதும், பிரம்ம வித்தையைப் போதிப்பதும், யோகசாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ச்சுன ஸம்வாதமுமாகிய பகவத்கீதைகளிற்

கர்மயோகத்தைப்பற்றிய

மூன்றும் அத்தியாயம்

முற்றிற்று.



ஞானகர்ம ஸந்நியாஸயோகம் 4 ம்

# நான்காம் அத்தியாயம்.

# ஞானயோகம்.

முன் இரண்டு அத்தியாயங்களிற் சொல்லப்பட்டதும், கர்ம யோகத்தைச் சாதனமாகப் பெற்ற ஞானநிஷ்டையே லக்ஷணமாய் அமைந்த ஸங்கியாஸயோகம் எனப்படுவதும், பிரவிருத்தி நிவிருத்தி யென்னும் வேதார்த்த முடிவுகளடங்கியதும் ஆகிய இந்த யோகத்தையே ஸ்ரீபகவான் கீதை முழுவதிலும் போதிக்க நினைத்தார். ஆகையால் வேதார்த்தத்தை முடிவு செய்ததாய் நினைத்துக் கொண்டு அதன் வம்சாவளியைச் சொல்லி அதனைத் துதிக்கின்றார்:

ஸ்ரீபகவான் சொல்லியது.

இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவாநஹமவ்யயம் ।
விவஸ்வாந் மநவே ப்ராஹ மநுரிக்ஷ்வாகவேऽப்ரவீத் ॥

க. நாசமற்ற இந்தயோகத்தை நான் விவஸ்வதனுக்குச் சொல்லி யிருந்தேன். விவஸ்வதன் அதனை மனுவுக்குச் சொன்னான். மனு அதனை இக்ஷ்வாகுவுக்குச் சொன்னான்.

[ஜகத்பரிபாலந கர்த்தர்களாகிய க்ஷத்திரியர்கள் யோகபலத்தினால் பிராமணர்களை ரக்ஷிக்கும் பொருட்டு அந்த க்ஷத்திரியர்களுக்குப் பலம் ஊட்டும் உத்தேசத்துடன் சிருஷ்டியின் ஆதியில் சூரிய (விவஸ்வத) னுக்கு இந்த யோகத்தை, அஃதாவது, முந்திய இரண்டு அத்தியாயங்களில் விவரிக்கப்பட்ட யோகத்தை உபதேசித்தேன். பிரம க்ஷத்திரிய ஜாதிகளிரண்டும் சரியாய்ப் பரிபாலிக்கப்படின் உலகத்தில் மற்றவைகளெல்லாம் கிரமமாய் ஏற்படும். இந்த யோகம் நாசமற்றது, ஏனெனின், அதன் பயன்கள் அழியாதவை. ஞான நிஷ்டையுக்தமான இந்த யோகத்தின் பயனாகிய மோக்ஷம்

அழிவில்லாதது. அதை விவஸ்வதன் மனுவுக்குச் சொல்ல, மனு தனது புத்திரனுகிய இக்ஷ்வாகு * வுக்குப் போதித்தான்].

ஏவம் பரம்பராப்ராப்தமிமம் ராஜர்ஷயோ விது: ।
ஸகாலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப ॥

௨. இவ்வாறு பரம்பரையாய் வந்த இது ராஜருஷிகளுக்குத் தெரிந்திருந்தது. ஓ சத்துருக்களைத் தவிக்கச் செய்வோனே! இந்த யோகமானது இவ்வுலகில் விசேஷ காலவிளம்பத்தினுல் நசித்துப் போயிற்று.

[க்ஷத்திரியர்களுக்குட் பரம்பரையாய் உபதேசித்துவந்த இந்த யோகமானது ராஜ ருஷிகளுக்கு (ருஷித்தன்மை பொருந்திய அரசர்கட்கு)த் தெரிந்திருந்தது. சூரியனைப்போல் தனது பல பராக்கிரமத்தின் வெப்பத்தினுற் சத்துருக்களை எரிப்போனுகிய அர்ச்சுனு! வெகு காலமாய் இந்த யோகத்தின் பரம்பரைக்கிரமம் தப்பிப்போயிற்று].

தமது இந்திரியங்களை யடக்கச் சக்தியற்ற பலவீனர்கள் பாலானதனுல் இந்தயோகம் நசித்ததையும், ஜனங்கள் புருஷார்த்தங்களை யடையாதிருப்பதையும் கண்டு,

ஸ ஏவாயம் மயா தேऽத்ய யோக: ப்ரோக்த: புராதந: ।
பக்தோऽஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேததுத்தமம் ॥

௩. இந்தப் புராதனமான யோகமே, நீ எனது பக்தனுயும் சிநேகிதனுயும் இருப்பதனுல், இப்பொழுது என்னுற் சொல்லப்பட்டது. இது பெரிய ரகசியம்.

['இது': இந்தயோக விஷயமான ஞானம் வெகு ரகசியமானது].

பகவான் சொல்லியது முன்பின் ஒவ்வாததென்று யாருக்கும் அனுமானம் தோன்றுதிருக்கும் பொருட்டு அர்ச்சுனன், ஏதோ ஆக்ஷேபனை செய்வதுபோல, சொல்லுகிறுன்:

* இக்ஷ்வாகு என்பவர் இத்தேசத்து முதல் அரசர்.

அர்ச்சுனன் சொல்லியது:

அபரம் ப⁴வதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத꞉ ।
கத²மேதத்³விஜாநீயாம் த்வமாதௌ³ ப்ரோக்தவாநிதி ॥

ச. உமது ஜனனம் பிந்தியது. விவஸ்வதனது ஜனனம் முந்தியது. முதன்முதல் இதனை நீர் போதித்தீரென்பதை நான் எப்படித் தெரிந்து கொள்வேன்?

[நீர் வசுதேவரது வீட்டிற்பிறந்தது பிந்தியது. ஆதித்தியன் (சூரியன்) சிருஷ்டியின் ஆதியிற்பிறந்தது முந்தியது. அப்படியிருக்க, நீர் இந்த யோகத்தை ஆதியில் விவஸ்வதனுக்குப்போதித்ததாகவும், நீரே இப்பொழுது அதனை எனக்குப்போதித்ததாகவும் சொல்வதை நான் எப்படிச் சமரஸப்படுத்திக் கொள்வேன்]?

[ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியே சர்வேசுவரரென்று அர்ச்சுனன் தெரிந்தவனாயினும், ஸர்வேசுவரருக்குக் கர்மபந்தத்திற் குள்ளானவர்களைப்போல் உண்டாகிய ஜன்மம் இந்திர ஜாலம் முதலியவைகளைப் போல் அசத்தியமா? அல்லது, சத்தியமா? சத்தியமாயின் ஜன்மமெடுத்த தெப்படி? இந்தச் சரீரம் என்ன ஸ்வரூபமானது? பிறப்பதற்குக் காரண மென்னை? பிறப்பு எப்பொழுது உண்டாகும்? பிறப்பதனாற் பயனென்னை? என்று இவ்விதமாக அர்ச்சுனன் சங்கை செய்கின்றான்].

வாசுதேவர் சர்வ வல்லமையுள்ளவர், எல்லாமறிந்தவர் அல்லரென்னும் எண்ணத்தை அறிவிலிகளின் மனத்தினின்று போக்கும் பொருட்டு—அர்ச்சுனனது உத்தேசமும் அஃதேயாம்—ஸ்ரீ பகவான் சொல்லுகின்றார்:

ஸ்ரீ பகவான் சொல்லியது:

ப³ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந ।
தாந்யஹம் வேத³ ஸர்வாணி ந த்வம் வேத்த² பரந்தப ॥

ரு. ஓ அர்ச்சுனா! எனக்கும் உனக்கும் அநேக ஜன்மங்கள் கடந்துபோயின. அவற்றையெல்லாம் நான் அறி

வேன். ஓ சத்ருக்களைத் தவிக்கச்செய்வோனே! நீ அறியாய்.

[நீ தர்மாதர்மங்கள் முதலியவற்றுற் பிரதிபந்திக்க(மறைக்க)ப்பட்ட ஞானசக்தியுள்ளவனுகையால் உனக்குத் தெரியா. நான் நித்தியனும்பரிசுத்தனும் ஞானியாயும் முக்தனும் (கட்டுப்படாதவனும்) ஸத்தியஸ்வபாவமுள்ளவனுயு மிருப்பதனுல் நான் மறைக்கப்படாத ஞானசக்தியுள்ளவன்; ஆகையால் எல்லாஜன்மங்களும் எனக்குத்தெரியும்].

[உன்னுடைய ஜன்மங்களைப்போல் என்னுடைய ஜன்மங்களும் சத்தியமானவைகளேயன்றிப் பொய்யாவனவல்ல].

தர்மாதர்மங்கள் இல்லாவிடின் நித்திய ஸ்வரூபனுன உனக்கு ஜன்மம்வது? கேள் :—

அஜோவி ஸநவ்யயாத்மா பூதாநா மீஶ்வரோவி ஸந் ।
ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவா ம்யாத்மமாயயா ॥

௬. நான் பிறப்பற்றவனுயினும் நாசமற்ற ஸ்வபாவமுள்ளவனுயினும் பூதங்களுக்கெல்லாம் ஈசுவரனு (அதிபதியா) யினும் என்னுடைய பிரகிருதியை ஆச்ரயமாக்கொண்டு என்னுடைய சொந்தமாயையினுற் பிறக்கின்றேன்.

['பிரகிருதி': விஷ்ணு சம்பந்தமான முக்குண மமைந்த மாயை. இவ்வுலகமெல்லாம் அதன்வசத்திலேயே இருக்கின்றது. மாயையினுல் மோகிக்கப் படுவதனுலேயேதான் வாசுதேவர் என்னும் ஞானம் யாருக்கு முண்டாகாதிருக்கின்றது. அப்படிப்பட்ட மாயையைச் சுவாதீனஞ் செய்துகொண்டு, பிறந்தவனைப்போலிருப்பேன். உலகத்தவரைப்போல மெய்யாய்ப் பிறப்பதில்லை].

['பிரகிருதி'=ஸ்வபாவம். 'மாயை' = ஞானம், அஃதாவது, சங்கற்பம். பரமேசுவர ஸ்வபாவங்களாகிய பாபமின்மை முதலியவற்றை விடாமலே தம்முடைய சுத்த ஸத்வ மயமான ரூபத்தையே (விக்கிரகத்தையே) தேவர்கள் மனிதர்கள் முதலானவர்களுடன்

முக்திமார்க்கம் இக்காலத்ததன்று, அது பூர்வத்திலும் இருந்தது :

வீதராக ஭யக்ரோதா மந்மயா மாமுபாஶ்ரிதா: ।
பஹவோ ஜ்ஞாநதபஸா பூதா மத்பாவமாகதா: ॥

௰. அநுராகம் (ஆசை), பயம், கோபம் ஆகிய இவை இல்லாதவர்களும், எனது ஸ்வரூபத்தைச் சேர்ந்தவர்களும், என்னை ஆச்ரயித்தவர்களும் ஆகிய அநேகர் ஞானமென்னும் தவத்தினற் பரிசுத்தர்களாகி எனது ஸ்வரூபத்தை யடைந்தார்கள்.

['எனது ஸ்வரூபத்தைச் சேர்ந்தவர்கள்' = ஈசுவரனுக்கும் தனக்கும் பேதமில தென்று தெரிந்து கொண்டவர்கள். பரமாத்ம ஞானமென்பதே தவமெனப் பட்டதனல் ஞான நிஷ்டைக்கு இதர தவங்களின் அபேக்ஷையில்லை யென்று குறிப்பிக்கப்பட்டது].

['ஞானமென்னும் தவம்' : அவதாரங்கள், வியாபாரங்கள், ஆகிய இவற்றின் தத்துவ ஞானமென்னுந் தவம். இதனற் பரிசுத்தர்களானவர்கள் என்னை ஆச்ரயித்து, ராகம் (ஆசை) முதலியவற்றைப் போக்கிக்கொண்டு, என்னிடத்து மனத்தைவைத்து, எனக்குச் சமானமான தர்மங்களை (குணங்களை)ப் பெற்றார்கள்].

['எனது ஸ்வரூபத்தைச் சேர்ந்தவர்கள்' (மன்மயர்) = எங்கும் என்னைத்தவிர வேறொன்றைப் பாராதவர்கள்].

அவ்வாறயின், சிலருக்கு மாத்திரம் மோக்ஷம் அளித்து மற்றெல்லோர்க்கும் அளியாதிருப்பதனல் உமக்குப் பிரீதியும் வெறுப்பும் (ராகமும்) த்வேஷமும் இருப்பதாய் ஏற்படுகின்றதே எனின் :— உத்தரம் சொல்லுகின்றார் :

யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம் ஸ்தத²வ ஭ஜாம்யஹம் ।
மம வர்த்மாநுவர்தந்தே மநுஷ்யா: பார்த² ஸர்வஶ: ॥

௧௧. என்னை யார் எப்படி ஆச்ரயிக்கின்றார்களோ அப்படியே நான் அவர்களை ஸ்வீகரிக்கின்றேன். ஓ பார்

த்தா (அர்ச்சுனா)! எல்லாவிதத்திலும் மனிதர்கள் என்னு டைய மார்க்கத்தையே அநுசரிக்கின்றார்கள்.

[அவரவர்கள் என்னை நாடுகிற விதத்திற்கும் உத்தேசத்திற்கும் தகுந்தபடி நான் அவர்கள் விரும்புகிறவைகளை அளிக்கின்றேன். என்னையெனின், அவர்கள் மோக்ஷத்திற்கு ஆசிப்பதில்லை. "கூழுக் கும் ஆசை மீசைக்கும் ஆசை ஆகாது" என்பதுபோல் ஒருவன் விஷய சுகத்தையும் மோக்ஷத்தையும் ஒரே காலத்தில் நாட முடி யாது. ஆகையால், ஸ்வப்பிரயோஜனத்தை நாடுகிறவர்களுக்கு அவர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்கின்றேன்; பயனை விரும்பாமற் கர்மங்களை விதிப்படி செய்கிறவர்களுக்கு ஞானமளிக் கின்றேன்; ஞானிகளாகிக் கர்மஸந்நியாஸத்தைக் கைக்கொண்டு மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு மோக்ஷங் கொடுக்கின்றேன்; துன்பத்தினால் வருந்துகிறவர்களுக்குத் துன்பத்தைப் போக்குகின் றேன். இவ்வாறாக எவரெவர் எப்படி என்னை நாடுகின்றார்களோ அப்படியே அவர்களுடைய காரியத்தை நிறைவேற்றுகின்றேன். ராகத்தினாலாவது த்வேஷத்தினாலாவது அறியாமையினாலாவது நான் ஒன்றுஞ் செய்வதில்லை. எந்த விதத்திலும் மனிதர்கள் என்னுடைய மார்க்கத்தையே, அதாவது, எல்லா உருவங்களிலும் அமைந்திருக்கின்ற ஈசுவரனது மார்க்கத்தையே* அநுசரிக்கின்றார் கள். (இங்கு 'மனிதர்கள்' என்னும் பதம் அவரவர்களுடைய உத் தேசத்திற்குத் தகுந்தபடி விதிக்கப்பட்டிருக்கிற கர்மங்களைச் செய் பவர்களை † க்குறிக்கின்றது)].

---

* சொந்தப் பிரயோஜனத்தை உத்தேசித்தேனும், அல்லது, மோக்ஷத்தை யுத்தேசித்தேனும், ஒவ்வொருவனும் ஈசுவரருடைய மார்க்கத்தை—கர்ம மார்க்கத்தையாவது ஞானமார்க்கத்தையாவது —அநுசரிக்கின்றான். ஒவ்வொரு வஸ்துவிலும் ஒவ்வொரு உருவ த்திலும் அமைந்திருப்பது பரமேசுவரரேயாவர்.

† மனிதர்கள்மாத்திரமேயல்லர்; மற்ற பிராணிகளையுங்குறித்த தென்க.

[தேவர் மனுஷ்யர் முதலிய ரூபங்களில் அவதரித்தே நான் என்னை ஆச்ரயித்தவர்களை ரக்ஷிப்பேன் என்னும் நியமம் இல்லை. என்னை ஆச்ரயிக்கவிரும்புகிறவர்கள் அவரவர்களுடைய இஷ்டப்படி எனது ரூபத்தை எப்படி ஊகித்துக் கொள்வார்களோ அவர்களுக்கு அப்படியே எனது ஸ்வரூபத்தைக் காட்டுவேன். எல்லா மனிதர்களும் என்னுடைய மார்க்கத்தை, அஃதாவது, ஸ்வபாவத்தை,—அது யோகிகளின் வாக்குக்கும் மனத்துக்குங்கூடப் புலப்படாததாயினும்—தங்கள் தங்களுடைய கண்முதலிய கரணங்களினால் தங்களுக்கு இஷ்டமானபடியெல்லாம் அநுபவித்து ஆனந்தித்திருப்பார்கள்].

[வேறு தேவதைகள் முதலான ஸ்வரூபமாய் என்னைத்தியானித்தமாத்திரத்தினலேயே முக்தியில்லை. ஆனபோதிலும் அவரவர்களுக்குத் தகுந்த பயன்களைக் கொடுக்கின்றேன். நான் ஸர்வ கர்மங்களுக்கும் கர்த்தாவும் போக்தாவுமா யிருப்பதனால் அந்நிய தேவதைகளைக் குறித்து யஜ்ஞங்கள் செய்வோராயினும் அவர்கள் என்னுடைய மார்க்கத்தையே அநுசரிக்கின்றார்கள்].

ஈசுவரராகிய உமக்கு ராகம் முதலிய குறைகளில்லாவிடின், நீர் எல்லாப்பிராணிகளினிடத்தும் ஒரேமாதிரியாய்க் கிருபை வைத்து அவர்கள் விரும்பியவைகளை யெல்லாம் அளிப்பதனால் அவர்கள் "எல்லாம் வாஸுதேவமயம்" என்னும் ஞானமுள்ளவர்களாய் மோக்ஷத்தை விரும்பி உம்மை நாடாதிருப்பதேன்?—இதற்குக்காரணம் கேள்:

காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா: ।
க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே ஸித்திர் பவதி கர்மஜா ॥

௧௨. இவ்வுலகிற் கர்மங்களின் பயன் சித்திக்க வேண்டுமென்று விரும்பி இந்திரன் முதலான தேவதைகளைக் குறித்து யாகங்களைச் செய்கின்றார்கள். மானிடவுலகத்திற் கர்மங்களினாலுண்டாகிய பயன்களின் சித்தி சீக்கிரமாய் ஆகின்றது.

[கர்மங்கள் செய்வதனுற் பயன் சித்திக்க வேண்டுமென்று விரும்புகின்றவர்கள் இந்திரன், அக்னிமுதலாகிய தேவதைகளைக் குறித்து யாகஞ்செய்கின்ருர்கள். சுருதிவசனம்: "நான்வேறு அவன் வேறு என்னும் பேத புத்தியுடன் வேறு தெய்வத்தைப் பூஜிக்கின்றவன் அறியாதவனுவன். (மனிதர்களுக்கு) மிருகங்களெப்படியோ அப்படித் தேவர்களுக்கு அவன் ஆவன்". (பிருகதாரண்ய உபநிஷத்து, 1-4-10).

நான் வேறு தேவதைகள் வேறு என்னும் பேத புத்தியுடன் தேவதைகளைக் குறித்து யாகஞ்செய்பவர்களுக்கு இவ்வுலகிற் பயன் சித்திப்பது எளிது. சொந்தப் பிரயோஜனத்திற்காகத் தேவதைகளை ஆராதிப்பவனுக்குப் பயன் சீக்கிரத்திற் சித்திக்கின்றது. வேத வாக்கியங்கள் இந்த மானிட வுலகத்திற்காகவே சொல்லப்பட்டன. "இந்த மானிட வுலகத்திற் சீக்கிரமாய்" என்பதனுல் மற்ற வுலகங்களிலும் கர்மஞ்செய்தாற் பயனுண்டாகுமென ஊகிக்கலாகும். ஆயின், வித்தியாசம் யாதெனின், வர்ணுச்ரம தர்மங்கள் இந்த மானிட வுலகினுக்கேயன்றி மற்ற வுலகங்களுக்கு இல்லையென்பதேயாம்].

['மானிட வுலகம்' என்பது ஸ்வர்க்கலோகத்தையுங்குறிக்கும். இவ்வுலகிலுள்ளோர் எல்லோரும் அவிவேகத்தினுற் சீக்கிரமாய்ப் பயனடைய விரும்பி, மக்கள், மாடு, அன்னம் முதலியவைகளுக்காகவும் ஸ்வர்க்கம் முதலியவைகளுக்காகவும் இந்திரன் முதலான தேவதைகளை மாத்திரம் கர்மங்களினுல் ஆராதிக்கின்ருர்கள். ஒருவனுயினும் ஸம்ஸாரத்தில் வெறுப்புற்று மோக்ஷத்தை விரும்பி இந்திரன் முதலான தேவதைகளுக்கு ஆத்மாவாயிருக்கிற என்னைக் கர்மங்களினுல் ஆராதிப்பதில்லை].

[அந்நிய தேவதைகளைக் குறித்து யஜ்ஞம் செய்பவர்களும் என்னுடைய மார்க்கத்தையே அநுசரிப்பவர்களாதலால் மக்கள் முதலிய பயன்கள் சீக்கிரத்திற் பிராப்தியாகின்றன. விஷ்ணுவே நானே போக்தா (புசிப்பவன், அநுபவிப்பவன்) ஆகாதபக்ஷத்தில் தர்மன் முதலானவர்களுக்கு ஸ்வதந்திரம் இல்லாததனுல் பயனைக்

கொடுக்குஞ் சாமர்த்தியமில்லையாகையாற் பயன் சித்தியாமற் போக வேண்டியது].

வர்ணாசிரமங்கள் முதலிய கர்மங்களுக்கு அதிகாரம் மற்ற வுலகங்களில் இல்லாமல் இந்த மானிட வுலகத்தில் மாத்திரம் இருப்பானேன்? அல்லது, அந்தக்கேள்வியை இப்படிக்கேட்கலாம்: ஜாதி, வர்ணம் ஆசிரமம் முதலிய பல பாகங்களாகப் பிரிக்கப்பட்டு மனிதர்கள் எல்லா விதத்திலும் உம்முடைய மார்க்கத்தையே அநுசரிக்கின்றார்களென்று சொல்லப்பட்டது. அவர்கள் உம்முடைய மார்க்கத்தையே அநுசரிப்பானேன்; மற்றவர்களுடைய மார்க்கத்தில் ஏன் நடக்கக்கூடாது? எனின்:—இதற்குப்பதில் வருகின்றது:

𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌣𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃 ।
𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌪𑌿 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥

௰௩. ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள், வியாபாரங்கள் ஆகிய இவைகளினுடைய பிரிவுகளுக்குத் தகுந்தபடி (பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும்) நான்கு வர்ணங்கள் என்னாற் சிருஷ்டிக்கப்பட்டன. (நான்கு வர்ணங்களென்னும் இந்த ஏற்பாட்டுக்கு) நான் கர்த்தனாயினும் என்னை அதற்குக் கர்த்தனல்லாதவனாகவும் நித்தியனாகவும் (எப்பொழுதும் மாறுபாடில்லாதவனாகவும்) தெரிந்து கொள்.

[குணங்களும் அவற்றின் வியாபாரங்களும் பொருந்தியிருப்பதற்குத் தகுந்தபடி நான்கு ஜாதிகள் ஈசுவரனாகிய என்னாற் சிருஷ்டிக்கப்பட்டன. அக்குணங்களாவன: ஸத்வம் (நன்மை), ராஜஸம் (சுறுசுறுப்பு), தாமஸம் (இருள்). ஸத்வகுணம் பிரதானமாயிருக்கப்பட்ட பிராமணனுக்குச் சமம் (இந்திரிய நிக்ரகம்), தமம் (அந்தக்கரண நிக்ரகம்), தபஸ்ஸு முதலானவை (அத். கஅ. சு. சஉ) கர்மங்களாகும். ஸத்வத்துடன்கூடின ரஜோகுணப்பிரதான முள்ள க்ஷத்திரியர்களுக்குச் சௌர்யம் (சூரத்துவம்), தேஜஸ்ஸு (பிரத

யம்) முதலானவை (அத். கஅ, சு. சரு). கர்மங்களாகும். தமோ குணத்துடன் கூடின ரஜோகுணம் பிரதானமாயுள்ள வைசியனுக்குக்கிருஷி (வியவஸாயம்) முதலியன (அத். கஅ, சு. சச) கர்மங்களாம். ரஜோ குணத்துடன் கூடின தமோகுணம் பிரதானமாயுள்ள சூத்திரனுக்குப் பரிசர்யையே கர்மமாகும். இவ்வாறு குண கர்ம விபாகங்களின்படி நான்கு வர்ணங்கள் சிருஷ்டிக்கப்பட்டன. இந்த வர்ணக்கிரமம் மற்றவுலகங்களிலில்லை. ஆகையாற்றான் "இந்த மானிட வுலகத்தில்" என்று ச-ஆம் அத். மஉ-ஆம் சுலோகத்திற் சொல்லப்பட்டது. நன்று! இந்த நான்கு ஜாதிகளைச் சிருஷ்டித்ததற்கு நீர் கர்த்தர்; ஆகையால் அதன் பயனுக்குக் கட்டுப்பட்டிருக்கின்றீர்; ஆகவே, நீர் அழியாத ஈசுவரரல்லீர், எப்பொழுதும் பந்தத்திற்குள்ளாகாதவருமல்லீர்; (ஸ்ரீபகவான் இதற்கு மறுமொழி சொல்லுகின்றார்:) இந்தச் சிருஷ்டிக்கு மாயாவியவகாரத்தில் என்னைக் கர்த்தனாகவும், பரமார்த்தத்தில் (உண்மையில்) கர்த்தனல்லாதவனாகவும் அஸம்ஸாரியாகவும் (ஸம்ஸாரமற்றவன், பற்றற்றவன்) தெரிந்து கொள்].

[பிரமன்முதல் ஸ்தம்பம் வரையில் (புல் ஈறாக) உள்ள உலகமெல்லாம் என்னால் சிருஷ்டிக்கப்பட்டது, ரக்ஷிக்கப்படுகின்றது, ஸம்ஹரிக்கப்படுகின்றது என்று அறிவையாக. என்னை அதற்குக் கர்த்தனாகவும் கர்த்தனல்லாதவனாகவுந் தெரிந்துகொள்].

['நான்குவர்ணங்கள்': நான்கு வர்ணங்களின் தொகுதி. பிராமணன் ஸாத்விகன். க்ஷத்திரியன் ஸாத்விகராஜஸன். வைசியன் ராஜஸதாமஸன். சூத்திரன் தாமஸன். கர்த்தனாகிய என்னைக் 'காரியத்தின் மீது எனக்கு அபிமான மின்மைபற்றி' க் கர்த்தனல்லனென்று தெரிந்துகொள்].

நான் கர்த்தனென்று நீ நினைக்கின்ற அந்தக் காரியங்களுக்கு நான் உண்மையிற் கர்த்தனல்லேன். ஏனெனில்,

ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா ।
இதி மாம் யோ(அ)பிஜாநாதி கர்மபிர் ந ஸ பத்யதே ॥

௰௪. கர்மங்கள், என்னை ஓட்டா. கர்மங்களின் பயன் மீது எனக்கு விருப்பம் இல்லை. இவ்வாறு என்னை எவன் அறிகின்றானோ அவன் கர்மங்களினாற் கட்டுப்படான்.

[அந்தக் கர்மங்கள், எனக்கு அகங்காரமின்மையால், என்னை ஓட்டுவதில்லை, ஜன்மமெடுக்கும்படி செய்வதில்லை. கர்மங்களின் பயன்களையும் நான் விரும்புவதில்லை. 'நான் கர்த்தன்' என்னும் அபிமானமும் கர்மங்களின் பயன்மீது ஆசையுமுள்ள சம்சாரிகளுக்குக் கர்மங்கள் தேகம் முதலியவற்றை உண்டாக்கும். அவ்விரண்டும் இல்லாத என்னைக் கர்மங்கள் சாரா. வேறு எவனாயினும் என்னை ஆத்மாவென்று அறிவோனாயின், அஃதாவது, "நான் கர்த்தன் அல்லேன், கர்மத்தின்மீது எனக்கு ஆசையில்லை" என்று நினைப்போனாயின் அவன் கர்மங்களினாற் கட்டுப்படான், அவனுக்கு மறுபிறப்பில்லை].

[இந்த விசித்திரமான சிருஷ்டி முதலான காரியங்கள் (கர்மங்கள்) எனக்குச் சம்பந்தமில்லை. அஃதாவது, தேவர் மனிதர் முதலாகிய சிருஷ்டி விசித்திரங்கள் அப்படிச் சிருஷ்டிக்கப் படுகின்றவர்களுடைய புண்ணியபாப கர்ம விசேஷங்களினா லுண்டாகின்றன. ஆகையால் விசித்திரமான சிருஷ்டி முதலானவைகளுக்கு நான் கர்த்தனல்லேன். தேகம், இந்திரியங்கள் ஆகிய இவைகளுடன் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவர்கள் சிருஷ்டியி லுண்டாகிய போக்யங்களை (அநுபவிக்கத் தகுந்தவைகளை) அவரவர்களுடைய கர்மாநுசாரமாய் அநுபவிப்பார்கள். ஆதலாற் சிருஷ்டிமுதலிய கர்மங்களின் பயன் மீதுங்கூட விருப்பம் அவாகளுக்கே யன்றி எனக்கு இல்லை. இவ்வாறு சிருஷ்டிக்குக் கர்த்தனாகவும் கர்த்தனல்லாதவனாகவும் சிருஷ்டிமுதலிய கர்மங்களின் பயனிற் பற்றில்லாதவனாகவும் என்னை எவன் அறிகின்றானோ அவன் கர்மயோகத்தை ஆரம்பிப்பதற்கு விரோதிகளாகிய பழைய கர்மங்களுடன் சம்பந்தப்படான்].

[எனக்குக் கர்மங்களின் பயன்மீது (மற்றவர்களின் நிமித்தமாக) இச்சைமாத்திர முண்டேயொழிய ஆழ்ந்தபற்றில்லை. * சிலர்

* பயன் உண்டாகும்வரையில் எதனால் மனதினுக்கு விசாரமுண்டாகுமோ அதற்கு ஆழ்ந்தபற்றெனப்பெயர்.

மாத்திரம் முக்தர்களாவார்களே யன்றிக் கிரமமாயானபோதிலும் ஸர்வமுக்தி (எல்லாருக்கு மோக்ஷம்) இல்லை. இதற்குக் காரணம் ஜீவர்கள் அநந்தமாய் (எண்ணித்தொலையாது) இருப்பதேயாம்.

[ஞானயோகமே உண்மையை (தத்துவத்தை) அறிவதற்கேற்ற சரியான மார்க்கமென்றும் மோக்ஷத்திற்குச் சாதனமென்றும் இந் தச்சுலோகத்தில் மறுபடியும் வற்புறுத்தப்பட்டது].

'நான் கர்த்தன் அல்லேன், கர்மங்களின் பயன்மீது எனக்கு ஆசையில்லை' என்று தெரிந்துகொண்டு,

𑌏𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌕𑍃𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌰𑌪𑌿 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌭𑌿𑌃 ।
𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌤𑌰𑌂 𑌕𑍃𑌤𑌮𑍍 ॥

௰௫. முற்காலத்தில் மோக்ஷ இச்சைகொண்டிருந்தவர்களும் இவ்வாறு தெரிந்துகொண்டே கர்மத்தைச் செய்தார்கள். ஆதலால், நீ முன்னோர்களாற் செய்யப்பட்ட புராதனமான கர்மத்தையே செய்யக்கடவை.

[முன்னோர்களாற் கர்மஞ்செய்யப்பட்டதுபோல நீயும் கர்மங்களைச் செய். சும்மா இராதே, கர்மத்தைக் கைவிடாதே. நீ ஆத்மஞான மில்லாதவனாயின் அந்தஃகரண சுத்தியின் நிமித்தமாகவும், ஆத்மஞான முள்ளவனாயின் உலகத்தவர்க்கு நல்வழி காட்டும் நிமித்தமாகவும் கர்மத்தைச்செய். பண்டைநாளில் அது (கர்மம்) ஜனகர் முதலான முன்னோர்களாற் செய்யப்பட்டது. அஃது இப்பொழுது புதிதாய் ஏற்பட்டதன்று].

[இவ்விதமாகத் தம்மைத் தெரிந்துகொண்டு பாபங்களைப் போக்கிக்கொண்ட பூர்வகாலத்து முமுக்ஷுக்களால் பின்சொல்லிய கர்மம் செய்யப்பட்டது. ஆதலால் நீயும் இத்தகைய ஞானத்தினால் பாபங்களைப் போக்கிக்கொண்டு பூர்வீகர்களான விவஸ்வதன் (சூரியன்), மநு முதலானவர்களாற் செய்யப்பட்ட பழய கர்மத்தைச் செய்].

[ஞானம் உண்டானபோதிலும் கர்மத்தைச் செய்யும் வழக்கம் ஏற்பட்டிருக்கின்றது. ஞானிக்கு மோக்ஷம் கிடைப்பது திண்ண

மாயினும் அதைவிட மேலான மோக்ஷம் கிடைப்பதற்காகக் கர்மங் களைச் செய்வது வழக்கமாம்].

இங்கு கர்மஞ் செய்ய வேண்டுமாயின் உம்முடைய வார்த்தை யையே பிரமாணமாகக் கொண்டு நான் கர்மஞ்செய்வானேன்? பூர் வகாலத்தில் நம்முன்னோர்களுங் கர்மஞ் செய்தார்களென்று நீர் சொல்வானேன்? (இதற்குப்பதில் பகவான் சொல்லுகின்றார்). கேள்: கர்மம் இன்னதென்று தெரிந்துகொள்வதில் பெரிய கஷ்டம் இருக்கின்றது. எப்படி யெனில்,

கிஂ கமூ கிமகமேதி கவயோ வுவு மோஹிதாः ।
தவே கமூ வுவக்ஷாமி யஜ்ஜாகூா மோக்ஷ்யஸேஶுஹாத॥

யசு. கர்மம் யாது, அகர்மம் யாது என்னும் இந்த விஷயத்தில் பண்டிதர்களும் மோகத்தை யடைந்தார்கள். ஆதலால், கர்மம் யாதென்று உனக்குச் சொல்லுகின்றேன். அதனைத் தெரிந்துகொள்வதனால் நீ ஸம்ஸாரத்தினின்று விடப்படுவாய்.

[கர்மம் யாது, கர்மமல்லாதது யாது என்னும் விஷயத்தில் புத்திசாலிகள்கூடத் தடுமாறிப்போகின்றார்கள். ஆகையால், கர்மம் அகர்மம் ஆகிய இவ்விரண்டினுடைய தத்துவத்தை (உண்மையான தன்மையை) உனக்கு விளக்குகின்றேன். இதனைத் தெரிந்துகொள் வதனால் சம்சார துக்கத்தினின்று நீ விடுவிக்கப்படுவாய். "கர்ம மென்றால் சரீரத்தின் அசைவு என்றும், அகர்மமென்றால் அஃதில் லாமற் சும்மாவிருத்தல் என்றும் எல்லோர்க்குந் தெரிந்த விஷயமே. அவற்றைக் குறித்துத் தெரிந்துகொள்ள வேண்டியது யாது இருக் கின்றது?" என்று நீ நினைக்கவேண்டாம்].

['அகர்மம்' கர்த்தாவாகிய ஆத்மாவின் தத்துவஞானம். செய்ய வேண்டிய கர்மம் எப்படிப்பட்டது என்னும் சந்தேகம் பண்டிதர் களுக்கும் தீரவில்லை. இவ்வாறு உள்ளாழ்ந்த ஞானத்துடன் கூடிய கர்மத்தை நான் உனக்குச் சொல்லுகின்றேன்].

𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌹𑍍𑌯𑌪𑌿 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌵𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 ॥
𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌶𑍍𑌚 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌗𑌹𑌨𑌾 𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌗𑌤𑌿𑌃 ॥

௰எ. ஏனெனின், கர்மத்தின் விஷயத்திலும் தெரிந்து கொள்ளவேண்டியது கொஞ்சம் இருக்கின்றது; விகர்மத்தின் விஷயத்திலும் தெரிந்துகொள்ள வேண்டியது இருக்கின்றது; அகர்மத்தின் விஷயத்திலும் தெரிந்துகொள்ள வேண்டியது இருக்கின்றது. கர்மத்தின் உண்மையை யறிவது கஷ்டமா யிருக்கின்றது.

[‘கர்மம்’ சாஸ்திரத்தினால் விதிக்கப்பட்டது. ‘விகர்மம்’ சாஸ்திரத்தினால் விலக்கப்பட்டது. ‘அகர்மம்’ கர்மஞ் செய்யாது சும்மா இருத்தல். இவற்றின் உண்மையை யறிவது கஷ்டமாம்].

[‘கர்மம்’ மோக்ஷசாதனமானது. ‘விகர்மம்:’ நித்திய நைமித்திக காம்யரூபத்தினாலும் அதற்குச் சாதனங்களாகிய திரவியஞ் சம்பாதித்தல் முதலிய ரூபங்களினாலும் அநேகவிதங்களான கர்மம். ‘அகர்மம்’: ஞானம். விகர்மத்தில் தெரிந்துகொள்ளவேண்டியது யாது எனின்,—நித்திய நைமித்திக காம்ய திரவ்யார்ஜனம் முதலிய கர்மங்களின் பயன்கள் வேறு வேறாயிருப்பதனால் உண்டாகிய பன்மையை விடுத்து மோக்ஷமே பயனாகும்படியாய் சாஸ்திரங்களின் அர்த்தத்தை ஒருமைப் படுத்தி அதன்கண் மனத்தை நிலைநாட்டுதலே யாம். இஃது இரண்டாம் அத்தியாயம் சஉ-வது சுலோகத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றது].

ஆயின், விசேஷமாய்த் தெரிந்துகொள்ளத் தக்கதும் நீர் எனக்குச் சொல்ல நினைப்பதுமான கர்மாகர்மங்களின் உண்மையான சுபாவம் யாது?

𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌦𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 ।
𑌸 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌷𑍁 𑌸 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 ॥

௰அ. கர்மத்தில் எவன் அகர்மத்தைப்பார்க்கின்றானோ, அகர்மத்திற் கர்மத்தை எவன் பார்க்கின்றானோ, அவன்

மனிதர்களுக்குள் புத்திசாலியானவன். அவன் யோகமுள்ளவன் (யோகி). அவன் எல்லாக் கர்மங்களையுஞ் செய்பவன்.

['கர்மம்'—உலகத்தவர் செய்யும் வியாபாரம், வேலை. 'அகர்மம்'—வேலை செய்யாமற் சும்மா இருத்தல்; அஃதாவது, நான் வேலையொன்று மில்லாமற் சுகமா யிருக்கின்றேன் என்று நினைத்தல். அகர்மம் கர்மத்திலும், கர்மம் அகர்மத்திலுங் காணப்படுகின்றது. எப்படியெனின், நிவ்ருத்தியும் பிரவ்ருத்தியும் கர்த்தனொருவன் உளனென்பதை யுணர்த்துகின்றன. மேலும், கர்ம, கர்த்ருத்துவம் என்பவைகளைப்பற்றி நாம் அறிவதெல்லாம் அவித்யா (அஜ்ஞான) தசையிலேயே யாகும்; அஃதாவது நாம் உண்மையான வஸ்துவை யடையாதிருக்கும்பொழுது. கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்திற் கர்மத்தையும் பார்க்கிறவன்,—அவன் மனிதர்களுக்குள் புத்திசாலி, நல்லயோகி, அவனே எல்லாக் கர்மங்களையுஞ் செய்தவனாவன். இவ்வாறு அவன் கொண்டாடப்படுகிறான்.

ஆக்ஷேபனை:—"கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தையும் பார்க்கின்றவன்" என்பது ஒவ்வாத (விரோதமான) தாற்பரிய மடங்கியதாய் இருக்கின்றது. ஒருபொழுதும் கர்மம் அகர்மமாகாது, அகர்மம் கர்மமாகாது. மேற்சொல்லிய விரோத வாக்கியத்தைக் கிரகிப்பதெப்படி?

சமாதானம்:—இந்த ஆக்ஷேபனை நாம் சொல்லிய அர்த்தத்திற்குப்பொருந்தாது. மூடனுக்கு உண்மையாய் அகர்மமாயிருப்பது கர்மமாயும், உண்மையாய்க் கர்மமாயிருப்பது அகர்மமாயுந் தோற்றுகின்றது. அவற்றின் நிஜஸ்வரூப மின்னதென்று போதிக்கும் பொருட்டுப் பகவான் "அகர்மத்திற் கர்மத்தையும்..." என்று சொல்லுகின்றார் ஆதலால் இதனில் விரோத மொன்றுமில்லை].

['அகர்மம்'—கர்ம மல்லாததாகிய ஞானம். கர்மம் செய்துகொண்டிருக்கும்பொழுதே ஆத்மஸ்வரூப ஞானத்தையும், ஞானம் இருக்கும்பொழுதே கர்மத்தையும் எவன் அறிகின்றானோ அவன் புத்திசாலி; அஃதாவது, சாஸ்திரார்த்தத்தை நன்றாய்த் தெரிந்தவன்; அவனே தகுந்தவன் (யுக்தன்); மோக்ஷத்திற் கேற்றவன்;

அவனே எல்லாக் கர்மங்களையுஞ் செய்தவன்; அஃதாவது, சாஸ்திரார்த்தத்தின்படி நடத்தினவன். கர்மமும் ஞானமும் ஒன்றோடொன்று இணைந்திருத்தல் வேண்டும்].

['அகர்மம்'=அ (விஷ்ணு) + கர்மம் (வேலை); விஷ்ணுவினுடைய வேலை. கர்மம் செய்யும்பொழுது "அது பகவானுடைய கர்மம், சித் பிரதிபிம்பமான எனக்கு ஸ்வதந்திரமாய்க் கர்த்திருத்துவமில்லை," என்று நினைக்கவேண்டும். 'அகர்மத்தில்,= ஜீவன் வேலையொன்றுஞ் செய்யாமல் நித்திரை செய்யுங்காலத்து. வேலை செய்யாமல் ஜீவன் சும்மா இருக்கும் நித்திரை முதலிய சமயங்களில் பகவானுக்கு சிருஷ்டி முதலாகிய கர்மம் உளதென்று நினைக்கிறவன் மனிதர்களிற் சாமானியனல்லன். அவனே யோகத்துடன் கூடினவன். அவனே எல்லாக் கர்மங்களையுஞ் செய்தவன். அவன் எல்லாக் கர்மங்களையும் செய்யாதிருந்தும், எல்லாக் கர்மங்களையுஞ் செய்வதனாலுண்டாகும் மோக்ஷபயன் அவனுக்குக் கிடைக்குமெனக் கொள்க].

𑌯𑌸𑍍𑌯𑌸𑌰𑍍𑌵𑍇𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌃 𑌕𑌾𑌮𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌦𑌗𑍍𑌧𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂 𑌤𑌮𑌾𑌹𑍁𑌃𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌂𑌬𑍁𑌧𑌾𑌃 ॥

௰௯. எவனுடைய கர்மங்களெல்லாம் காமமும் சங்கற்பமுமில்லாதவை யாகுமோ, ஞானமென்னும் நெருப்பினாற் பொசுக்கப்பட்ட கர்மங்களுள்ள அவனை ஞானிகள் பண்டிதனென்பார்கள்.

[காமத்துக்குக் காரணம் சங்கற்பங்கள். இவை யிரண்டுமில்லாதவன் பிரவிருத்தி மார்க்கத்திருப்பவனாயின் உலகத்துக்கு நல்வழிகாட்டும்பொருட்டும்; நிவிருத்தி மார்க்கத்திருப்பவனாயின் தான் ஜீவித்திருப்பதற்கு வேண்டியமட்டு மாத்திரமும், கர்மங்கள் செய்வான். 'ஞானம்': பிந்திய க௮-வது சுலோகத்திற் சொல்லப்பட்டது. 'காமம்': பயனை விரும்புதல். 'சங்கற்பம்': 'நான் செய்கிறேன்' என்னும் கர்த்திருத்துவாபிமானம்].

['கர்மம்': திரவியஞ் சம்பாதித்தல் முதலாகிய லௌகிக வியாபாரங்களுடன்கூடிய நித்திய நைமித்திக காம்ய கர்மங்கள். 'காமம்': பயன்களுக்குப் பற்று. 'சங்கற்பம்': பிரகிருதியுடனும் அதன் குணத்துடனும் ஆத்மாவை ஒன்றுபடச் செய்து நினைத்தல். 'ஞானம்': கர்மத்திலடங்கிய ஆத்மஞானம். இதனுல் கர்மத்துக்கு ஞானஸ்வரூபம் உண்டாகின்றது].

[இனிவரும் ஐந்து சுலோகங்களும் இந்த சுலோகத்தை யநுசரித்த விஷயத்தையே சொல்லுகின்றன. 'காமம்': இஃது எனக்கு வேண்டுமென்னும் பற்று. 'சங்கற்பம்': இதை நான் செய்கின்றேன் என்னும் கர்மப்பற்று].

கர்மம் இன்னது, அகர்மம் இன்னது என்று அறிந்தவன், அப்படி யறியுந் தன்மையாகிய ஞானத்தினுலே, கர்மத்துக்குள்ளாகா திருக்கிறுன். இவ்வுண்மையை யறிவதற்கு முன்னரே அவன் கர்மஞ் செய்யத் தலைப்பட்டிருந்தும், அவன் உலகத்தைத் துறக்கின்றுன். கர்மம் செய்வதில்லை. ஆனுல் சரீரத்தைக் காப்பாற்றிக்கொள்வதற்காக வேண்டியமட்டு மாத்திரம் கர்மம் செய்வான் என்பது கருத்து, கர்மம் செய்ய ஆரம்பித்து அதன்பிறகு ஆத்மஞானம் அடைந்தவனே யெனின், கர்மத்தினுல் தனக்குப் பிரயோசனமில்லையென்று கண்டு அவன் கர்மத்தையும் கர்மாங்கங்களையும் விட்டுவிடுகிறுன். எதாவது காரணத்தினுல் அவன் கர்மஞ்செய்ய முடியாவிடின், அவன் பயனை ஆசியாமல், உலகத்தவருக்கு நல்வழி காட்டும்பொருட்டுச் சொந்த பிரயோஜனத்தை நாடாமல் கர்மஞ் செய்யலாம்; ஆகிலும், அவன் உண்மையாய் ஒன்றுஞ் செய்வதில்லை. அவன் செய்யுங் கர்மம் அகர்மத்திற் கொப்பாகும், ஏனெனின், அது ஞானுக்னியில் எரிந்துபோகின்றது. இதனை யுணர்த்தும்பொருட்டு, ஸ்ரீபகவான் சொல்லுகின்றுர்:—

த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராஶ்ரய: ।
கர்மண்யபிப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித்கரோதி ஸ: ॥

உ-ம்: கர்மங்களிலும் (அவற்றின்) பயன்களிலும் ஆசைநீங்கி, கர்மத்தில் பிரவிருத்தித்தவனுயினும் எப்

பொழுதும் திருப்தியுள்ளவனாயும் ஆதாரமில்லாதவனாயும் எவன் இருப்பனோ அவன் ஒன்றையுஞ் செய்யாதவனே யாவன்.

[மேலே சொல்லிய தத்துவத்தை (உண்மையை) அறிந்தவனாய் எவன் கர்மத்திலும் அதன் பயன்களிலும் பற்றற்றிருப்பனோ, விஷயாதி அனுபவங்களை விரும்பாமலும், தனது உத்தேசத்தை, அஃதாவது, இஹபரங்களிற் சுகத்தை யடையவேண்டுமென்று ஏதையும் நாடாமலும் எப்பொழுதும் திருப்தியுள்ளவனாய் இருப்பனோ; எவன் தனக்குச் சொந்த பிரயோஜன விருப்பமின்மைபற்றிக் கர்மத்தையும் அதன் அங்கங்களையும் துறக்கக்கூடியவனாயும், ஆயினும் அவ்வாறு துறப்பதற்கு முடியாததனால், உலகத்துக்கு உதாரணமாகவோ, அல்லது, நைஷ்டிகர்களுக்கு வெறுப்பு விளைவியாதிருக்கும் பொருட்டோ, கர்மத்தைச் செய்கின்றானோ,—அவன் உண்மையில் ஒன்றுஞ்செய்யாதவனேயாவன்; ஏனெனின், ஆத்மா கர்மமற்றது என்னும் ஞானம் அவனுக்கு உளது.

எதனை ஆதாரமாகக்கொண்டு பயனை விரும்புவானோ அஃது ஆதாரம் (இது தேகேந்திரியங்களை யொட்டியது) என்னப்படும். அஃதில்லாதவன் 'ஆதாரமில்லாதவன்.' ஸந்நியாஸியாயிருப்பவன் தான் பிழைத்திருப்பதற்கு மாத்திரம் வேண்டிய கர்மங்களைச் செய்வான். ஸந்நியாஸியல்லாதவன் கர்மத்தினாற் பிரயோஜனமில்லையென்றுணர்ந்தவனாய்க் கர்மங்களை, அவற்றின் சாதனங்களுடன்கூட, விட்டுவிடினும்போதிலும், லோக ஸங்கிரகார்த்தமாய்க் கர்மங்களைச் செய்வான். அவனுடைய கர்மங்கூட, ஞானமென்னும் அக்நியினால் தகிக்கப்படுகிறபடியால், அகர்மமேயாகும்].

['எப்பொழுதும் திருப்தியுள்ளவன்': எப்பொழுதும் அழியாதிருக்கின்ற ஆத்மாவினிடத்துத் திருப்தி யடைந்தவன். 'ஆதாரமில்லாதவன்': ஸ்திரமல்லாத பிரகிருதியினிடத்து ஆசிரய புத்தியில்லாதவன். இப்படிப் பட்டவன் கர்மங்களைச் செய்தபோதிலும் கர்மத்தைச் சாக்கிட்டு ஞானப்பியாசம் (பயிற்சி) செய்கின்றவனாதலால் கர்மத்தைச் செய்யாதவனேயாவன்].

['ஆசை': ஸ்நேகம். எப்பொழுதும் திருப்தரா யுள்ளவரும், எல்லாவற்றிற்கும் ஆதாரமாய்த் தாம் ஆதாரமற்றிருப்பவரும் ஆகிய ஈசுவரருக்குச் சமானமான ரூபமுள்ளவனேன் என்று நினைக்கின்றவன் ஒரு கர்மத்தையுஞ் செய்யாதவனுகின்றான் என்பது தாற்பரியம்].

இதுவரையிற் சொல்லப்பட்டவனைப்போலல்லாது எவன் கர்மஞ்செய்யத் தொடங்கு முன்னரே எல்லாவற்றினுள்ளு மிருக்கின்ற யற்றற்ற பரப் பிரம்மமே, அந்தர்யாமியாகிய பிரத்யகாத்மாவே, தான் என்று அறிந்து அநுபவிக்கின்றானோ; எவன் ஸ்தூலஸூக்ஷ்ம விஷய சுகங்களின்மீது ஆசையற்றிருக்கின்றானோ; எவன் அந்தச்சுகங்களை அடைய முயலுவது வீண் என்று தெரிந்துகொள்கின்றானோ; அவன், தனது தேகத்தைக் காப்பாற்றுவதற்குத் தவிர, கர்மத்தை அதன் அங்கங்களுடன்கூட, துறக்கின்றான். எவன் இவ்விதமாகத் தன்னைத்தானே அடக்கிக்கொண்டு ஞானநெறியில் மிகுந்த சிரத்தை வைத்து நடக்கின்றானோ, அவன் முக்தனாகின்றான். இதைப்போதிக்குமாறு ஸ்ரீபகவான் சொல்லுகின்றார்:—

நிராஶீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹ:।
ஶாரீரம்கேவலம்கர்ம குர்வந்நாப்நோதிகில்பிஷம் ॥

உக. ஆசைகளைத் துறந்தவனாய், நியமிக்கப்பட்ட (அடக்கியாளப்பட்ட) சித்தத்தையும் இந்திரியங்களையுமுடையவனாய், எவ்வகைப்பற்றுதலு மற்றவனாய், சரீர சம்பந்தமான கர்மத்தை மாத்திரமே செய்கின்றவன் பாபத்தையடையான். (ஸம்ஸாரத்திலகப்படான் என்றவாறு).

['சரீர சம்பந்தமான கர்மம்': சரீரம் நிலைப்பதற்கு மாத்திரம் வேண்டிய பிக்ஷாடனம் (பிச்சையெடுத்தல்) முதலிய கர்மங்கள்].

['ஆசைகளைத் துறந்தவன்': பயனை உத்தேசியாதவன். 'பற்றுதல்': பிரகிருதியினிடத்தும் அதன் சம்பந்தமான விஷயங்களினிடத்தும் மமகாரம் வைத்தல். 'சரீர சம்பந்தமான கர்மம்': ஞான நிஷ்டையில்லாத வெறும் கர்மயோகம். இதனால் ஆத்மதரிசனம் சித்திக்கும் என்பது பொருள்].

[இந்தச்சுலோகம் காமம் முதலியவற்றை விடுவதற்கு உபாயத்தைச் சொல்லுகின்றது. 'சித்தத்தையும் இந்திரியங்களையும்': புத்தியையும் மனதையும். 'பற்றுதல்': அபிமானம். இப்படிப்பட்டவன் கர்மங்களினால் உண்டாகும் பாபத்தை யடையான்].

யத்ருச்சாலாபஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர: ।
ஸம: ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே ॥

௨௨. தனக்குத்தானே உண்டாகிய லாபத்தைக் கொண்டு சந்தோஷிப்பவனாய், குளுமை வெப்பம் என்னுமிரட்டைகளுக்குட் படாதவனாய், மாச்சரிய மற்றவனாய், பிராப்தியிலும் அப்பிராப்தியிலும் சமானமானவனா யிருப்பவன் கர்மங்களைச் செய்தபோதிலும் கட்டுப்படான்.

['மாச்சரிய மற்றவன்': விரோதபுத்தியில்லாதவன். இப்படிப்பட்டவன் பிச்சையெடுப்பது முதலிய கர்மங்களைச் செய்தபோதிலும், 'நான் செய்கின்றேனே' என்னும் அபிமான மில்லாததனால், அவன் கர்மங்களைச் செய்யாதவனேயாவன்].

['பிராப்தத்திலும் அப்பிராப்தத்திலும்': தான் செய்துகொண்டிருக்கும் யுத்தம் முதலிய கர்மங்களில் வெற்றி யடைந்தாலும் தோல்வியடைந்தாலும். இப்படிப்பட்டவன் ஞானமில்லாமல் கர்மத்தை மாத்திரம் செய்தபோதிலும் ஸம்ஸாரத்தை யடையான்].

[இந்தச்சுலோகம் புத்தியையும் மனதையும் யடக்கி நடப்பவர்கள் எப்படியிருப்பார்களென்று சொல்லுகின்றது].

கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்திதசேதஸ: ।
யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே ॥

௨௩. பற்றில்லாதவனாய், விடப்பட்டவனாய், ஞானத்தில் நிலைகொண்ட மனமுள்ளவனாய், யஜ்ஞம் நடக்கும் பொருட்டுக் கர்மத்தைச் செய்கின்றவனுக்குக் கர்மங்களெல்லாம் அடங்கிப்போகின்றன (நசிக்கின்றன).

[இந்தச்சுலோகம், பிரம்மஞானமுண்டாகியும் ஏதோ காரணத்தினால் சந்நியாஸமில்லாமலிருப்பவனைக்குறித்துச் சொல்லுகின்றது. இவனைப்பற்றியே உ௰-ஆவது சுலோகம்முதல் சொல்லப்படுகின்றது. 'விடப்பட்டவன்': புண்ணிய பாப சம்பந்தமில்லாதவன். 'கர்மங்களெல்லாம்': பயனுடன் கூடிய கர்மம்].

['பற்றில்லாதவன்': ஆத்மஞானமுள்ளவனாதலால் மற்றவைகளின் மீது பற்றில்லாதவன். 'விடப்பட்டவன்': மமகாரமில்லாதவன். 'கர்மங்களெல்லாம் நசிக்கின்றன': பந்தத்திற்குக் காரணமான பழைய கர்மம் பூர்த்தியாய் நசிக்கும்].

['பற்றில்லாதவன்': பயனை ஆசியாதவன். 'விடப்பட்டவன்: சரீரம் முதலியவைகளின்மீது அபிமானமில்லாதவன்.' ஞானத்தில் நிலைகொண்ட மனமுள்ளவன்': பரமேசுவர ஞானமுள்ளவன்].

செய்யப்பட்ட கர்மங்களெல்லாம் பயனை விளைவியாமல் அப்படி நசிப்பானேன்? அதற்குக் காரணம் சொல்லுகின்றார்.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌰𑍍𑌪𑌣𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌹𑌵𑌿𑌰𑍍
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑍌𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾𑌹𑍁𑌤𑌮𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌤𑍇𑌨𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾 ॥

உச. ஹோமத்திற்குச் சாதனமாயிருப்பது பிரம்மமே; ஹவிஸ்ஸு பிரம்மமே; பிரம்மஸ்வரூபமான அக்னியில் பிரம்மத்தினாற் செய்யப்பட்ட ஹோமம் பிரம்மமே, பிரம்மஸ்வரூபமான கர்மத்தினிடத்து ஸமாதி (உறுதிநிலை) யுள்ளவனால் அடையத்தகுந்தது பிரம்மமே.

[லோகஸங்கிரகார்த்தமாய்க் கர்மம் செய்பவனும் பிரம்மஞானமுள்ளவனாய்க் கர்மமும் அதன்சாதனங்களும் பிரம்மமே யென்றறிந்து கர்மங்களைச் செய்வானாயின் அஃது அகர்மமேயாகும். எல்லாக் கர்மங்களையுந் துறந்தவனுக்குக் கர்மம் இல்லாமற் போனாலும் கர்மசம்பந்தமான அர்ப்பணம் முதலானவைகளெல்லாம் பிரம்மமே].

[பிரம்ம மயமான ஹோமஸாதனங்களுடன் கூடிய பிரம்மமய மான ஹவிஸ்ஸானது பிரம்மமயமான அக்னியில் பிரம்மமாகிய கர்த்தாவினால் ஹோமம் செய்யப்பட்டது. இவ்வாறாகக் கர்மங்க ளெல்லாம் பிரம்ம ஸ்வரூபத்துடன் கூடியவைகளாயிருப்பதனால் பிரம்மமயமென்று எவன் நினைப்பனோ அவன் பிரம்மமயமாகிய தன் னுடைய ஆத்மஸ்வரூபத்தையே அடைவன். மோக்ஷத்தை விரும் புகிறவன் கர்மஞ்செய்யுங்கால் அது பரப்பிரம்மாத்மகமென்னும் நினைவுடன் செய்வதனால் அது ஞானவடிவமாகின்றது. ஆகையால் ஆத்மஞானத்தின் அவ்சியம் இல்லாமல், ஆத்மாவைத் தரிசிப்பதற் குச் சாதனமாகின்றது. விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில், பகவா னைத்தவிர மற்ற சேதனு சேதனங்களெல்லாம் (உயிருற்றனவும் உயிரற்றனவும்) அவருக்குச் சரீரமாகும். அவற்றிற்குப் பகவான் சரீரி (ஆத்மா) ஆவார். இந்தச் சரீரசரீரி என்னும் கொள்கையைக் கொண்டே மற்ற பதார்த்தங்களெல்லாம் பிரம்மமேயென்றுசொல் லப்பட்டன].

[ஹோம ஸாதனங்கள் பிரம்மமெனப்பட்டன. ஏனெனின், அவை பிரம்மத்துக்குரிய ஸத்துடையவைகளாயிருக்கின்றன. பக வான்ஒருவரே ஸ்வதந்திரமுள்ளவர், மற்றவைகளெல்லாம் அவருக் கடங்கினவை; இந்த ஞான முள்ளவனே உ௨-வது ச்லோகத்தில் "ஞானத்தில் நிலைகொண்ட மனமுள்ளவன்" என்று சொல்லப்பட் டவன்].

[பிரமத்தை அறிந்தவன், யஜ்ஞம்முதலாகிய ஹோமங்கள் செய் யும் விதமும் அதற்குச் சாதனங்களும் பிரம்மத்தைத்தவிர வேறல்ல வென்று காண்கின்றான்; முத்துச் சிப்பியினிடத்து வெள்ளி யில்லா ததுபோல, அவற்றிற்குப் பிரம்மத்தைவிட்டு வேறு ஸ்வரூபம் இல் லையென்று காண்கின்றான். வெள்ளியாகத் தோற்றுவது முத்துச் சிப்பியேயன்றி வேறன்று. ஹோமம்செய்யும் விதமென்றும் ஹோம ஸாதனமென்றும் ஜனங்கள் எதை நினைக்கிறார்களோ அது பிரம்ம ஸ்வரூபத்தை யறிந்தவனுக்குப் பிரம்மமேயாம்.]

உண்மையான ஞானம் என்பதே யஜ்ஞமென்று சொல்லப்பட் டது. இனி யிதனைத்துதிக்கும் பொருட்டு வேறுவித யஜ்ஞங்கள் சொல்லப்படுகின்றன.

தைவமேவாபரே யஜ்ஞம் யோகிந: பர்யுபாஸதே ।
ப்ரஹ்மாக்நாவபரே யஜ்ஞம் யஜ்ஞேநைவோபஜுஹ்வதி ॥

உரு. கர்ம நிஷ்டர்களான சில யோகிகள் தேவசம்பந்தமான யஜ்ஞத்தையே ஆசரிக்கிறார்கள். வேறு சிலர் பிரம்மமென்னும் அக்னியினிடத்து ஆத்மாவைக்கொண்டு ஆத்மாவையே யஜ்ஞம் செய்கின்றார்கள்.

[தேவதைகளைக் குறித்துக் கர்மஞ் செய்பவர்களே கர்மநிஷ்டர்கள். இந்த உபாதி *(சரீரம்) யுடன்கூடிய ஆத்மாவை நிருபாதிக (உபாதியற்ற) பரப்பிரம்ம ஸ்வரூபமாய் நினைப்பவர்கள் பிரம்மஞானமுள்ள சந்நியாசிகளாவர். ஆத்மயஜ்ஞமானது ஆத்மாவினால் மேற்சொல்லியவாறு செய்யப்படுகின்றது. அது பிரம்மத்திற்கே அர்ப்பிக்கப்படுகின்றது. அந்தப் பிரம்மம் ஹோமம் செய்யப்படும் இடமாகிய அக்னியென்று இங்கே சொல்லப்பட்டது. கீழ்வரும் பிரமாணங்களில் உரைக்கப்பட்ட பிரம்மமே இவ்விடத்திற் குறிக்கப்பட்டதெனக் கொள்க:—

"ஸத்யம் ஞானம் அநந்தம்பிரம்ம—" தைத்-உப-உ-க.

"விஜ்ஞானம் ஆநந்தம் பிரம்ம—" பிருஹ-ங-கூ-உஅ.

யத்ஸாக்ஷாத் அபரோக்ஷாத் பிரம்ம, ய ஆத்மா ஸர்வாந்தர"—பிருஹ. உப. ங-உ-ச.

அந்தப் பிரம்மம் பசி தாகம் முதலிய ஸம்ஸார தர்மங்கள் யாவுமற்றதாயும், பிருஹதாரண்ய உபநிஷத்து ச-ச-உஉ-ல் சொல்லியதுபோல "நேதி, நேதி" (இஃதன்று, இப்படியன்று) என்பதாய் எவ்வுருவத்திலும் எப்பாங்கிலும் மனதினால் நினைக்கவும் கிரகிக்கவும் முடியாததாயு மிருக்கின்றது.

உபாதியுடன் கூடிய ஆத்மாவானது உபாதியற்ற ஆத்மாவினின்றும் வேறன்றென்று அறிவதே ஆத்மாவைப் பிரம்மத்தினிடத்து யஜ்ஞம் செய்வதாகும்.]

*புத்தி முதலானவைகள்.

[சு. உரு, உசு-களை மனுதர்மசாஸ்திரம் நான்காம் அத்தியாயம் உஉ - உச - சுலோகங்கள் விளக்குகின்றன. இவை உங-வது சுலோகத்திற் சொல்லப்பட்ட "யஜ்ஞத்திநிமித்தம் கர்மஞ் செய்தல்" என்பதற்கு விவரமெனத்தகும்; யோகியானவன் எத்தனை விதங்களில் பரமாத்மாவுக்கு யஜ்ஞம் செய்யலா மென்பது காட்டப்பட்டது. முதலாவது, சாதாரண மதாநுசாரமாய் ஏற்பட்டுள்ள இந்திரன், வருணன், அக்னி முதலானோர்க்குச் செய்யப்படும் யஜ்ஞம் குறிக்கப்பட்டது. ஆயினும், இந்த யஜ்ஞமும் பயனை உத்தேசித்துச் செய்யப்பட்டதன்று; கஉ-ஆவது சுலோகத்திற் சொல்லியது போல, பரமாத்மாவானவர் எல்லா வஸ்துக்களிலு மிருப்பது போல மேற்சொல்லிய தேவதைகளிலு மிருக்கின்றார் என்னும் நம்பிக்கையுடன் செய்யப்படுவதாகும். இந்த உரு-வது சுலோகத்தின் பிற்பகுதியில், விதாயகமான கர்மங்களைத் துறந்து மானஸயஜ்ஞம் செய்பவர்களைக் குறிப்பிக்கப்பட்டது. இந்த மானஸயஜ்ஞத்தில், பிரம்மமே ஹோமாக்னி, மேற்சொல்லிய கர்மங்களே யஜ்ஞத்திற்குரிய பதார்த்தங்கள், அவையே ஹோமம் செய்யப்படுவனவாம்].

[தேவயஜ்ஞ மாவது தேவதைகளை யர்ச்சித்தல் பூசித்தல் முதலான யஜ்ஞம். இதனை யாசரிப்பவர்கள் ஒருவிதமான கர்மயோகிகளாம். சுலோகத்தின் பிற்பகுதியிலுள்ள "யஜ்ஞம்" என்னும் பதம் ஹவிஸ்ஸு முதலான யஜ்ஞஸாதனங்களைக் குறிக்கும். பின்சுலோகத்திற் சொல்லியவாறு ஞானஸ்வரூபமான கர்மத்தை ஆசரிக்கிறவர்கள் ஒருவித கர்மயோகிகளாவர்].

['தேவசம்பந்தமான யஜ்ஞத்தையே ஆசரிக்கின்றார்கள்': பகவானை யஜ்ஞமாகும்படியாக உபாசனை செய்கின்றார்கள். பகவானை உபாசித்தலே யஜ்ஞமாம், யதி (சந்நியாசி) களுக்கு இதைவிட வேறு யஜ்ஞம் இல்லை. 'பிரம்மமென்னும் அக்னியினிடத்து.....யஜ்ஞம் செய்கின்றார்கள்': பிரசித்தமா யிருக்கப்பட்ட யஜ்ஞத்தினாலேயே பகவானைக்குறித்து ஹோமம் செய்கின்றார்கள். இப்படிப்பட்டவர்கள் வானப்பிரஸ்தாச்ரமத்தி லிருப்பவர்கள் என்றவாறு].

ஶ்ரோத்ராதீநீந்த்ரியாண்யந்யே ஸம்யமாக்நிஷு ஜுஹ்வதி ।
ஶப்தாதீந்விஷயாநந்ய இந்த்ரியாக்நிஷு ஜுஹ்வதி ॥

உசு. மற்றவர்கள் இந்திரிய நியமனங்கள் என்னப்பட்ட அக்னிகளில் சுரோத்ரம் (கேட்டல்) முதலிய இந்திரியங்களை ஹோமம்செய்கிறார்கள். மற்றவர்கள் இந்திரியங்களென்னும் அக்னிகளில் சப்தம் முதலிய விஷயங்களை ஹோமம் செய்கின்றார்கள்.

[இந்திரியங்கள் அநேகமாகையால் அவற்றை நியமித்தலும் பன்மையாகவே சொல்லப்பட்டது. சிலர் இந்திரியங்களை நியமித்தலே ஹோமமென்று நினைப்பார். வேறுசிலர் விரோதமில்லாத விஷயங்களை அநுபவித்தலே ஹோமமென்று நினைப்பர்].

[கர்ம நிஷ்டர்களிற் சிலர் சுரோத்ரம் முதலிய இந்திரியங்களை நியமிப்பதற்காகவே (அடக்கித் தம்மிஷ்டப்படி நிறுத்துவதற்காகவே) பிரயத்னஞ்செய்வர். வேறு சில கர்ம நிஷ்டர்கள் சப்தம் முதலிய விஷயங்களை அநுபவித்துக் கொண்டிருந்தும் அவற்றினிடத்து அதிக ஆசையில்லாமற் செய்வதற்குப் பிரயத்னப்படுவர்].

[இந்தச் சுலோகத்தின் முற்பகுதியானது இந்திரியங்களையடக்கும் நல்லநிஷ்டையுள்ள பிரம்மசாரியைக் குறித்தது; பிற்பகுதியானது யுக்தமான விஷயங்களை யநுபவிக்கும் கிருஹஸ்தனைக் குறித்தது].

ஸர்வாணீந்த்ரியகர்மாணி ப்ராணகர்மாணிசாபரே ।
ஆத்மஸம்யமயோகாக்னௌ ஜுஹ்வதி ஜ்ஞாநதீபிதே ॥

உஎ. வேறுசிலர் எல்லாவிதமான இந்திரிய வியாபாரங்களையும் பிராணன்களின் வியாபாரங்களையும் ஞானத்தினாற் பிரகாசிக்கச் செய்யப்பட்ட ஆத்மஸம்யமம் என்னும் யோக அக்னியில் ஹோமம் செய்கின்றார்கள்.

['பிராணன்களின் வியாபாரங்கள்': பிராணவாயுவின் காரியங்களாகிய மடக்குதல் நீட்டுதல் முதலியன. 'ஆத்மஸம்யமம்': ஸமாதியென்னும் யோகம். அதுவே அக்னியாம். இதற்கு ஞானமானது தீபத்திற்கு எண்ணெயைப் போன்றதாகும்].

[‘ஆத்மஸம்யமம்’: மனதை நிலை நிறுத்தல். இந்திரிய வியாபாரங்களிலும் பிராண வியாபாரங்களிலும் மனதினுக்கு ஆசையுண்டாகாமற் செய்யப் பிரயத்னம் பண்ணுகிறார்கள்].

த்ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா யோகயஜ்ஞாஸ்ததாபரே ।
ஸ்வாத்யாயஜ்ஞாநயஜ்ஞாஶ்ச யதய꞉ ஸம்ஶிதவ்ரதா꞉ ॥

உஅ. பிரயத்னமும் தீக்ஷ்ணமான விரதமுமுடைய வேறு சிலர் திரவிய யஜ்ஞமும் செய்கின்றார்கள். வேறுசிலர் தவம் என்னும் யஜ்ஞமும் செய்கின்றார்கள். இவ்வாறே இன்னும் சிலர் யோகம் என்னும் யஜ்ஞமும் செய்கின்றார்கள். இன்னும்சிலர் ஸ்வாத்தியாயம் (வேதமோதுதல்) என்னும் யஜ்ஞத்தையும் ஞான யஜ்ஞத்தையுஞ் செய்கின்றார்கள்.

[‘திரவிய யஜ்ஞம்’: புண்ணிய தீர்த்தங்களில் பணத்தை விநியோகப்படுத்தி (செலவுசெய்து) அதை யஜ்ஞமென்று நினைப்பது. ‘யோக யஜ்ஞம்’: பிராணாயாமம் (பிராணவாயுக்களை யடக்குதல்), பிரத்யாஹாரம் (மனத்தை வெளிவிஷயங்களினின்று இழுத்து உட்செலுத்தல்) முதலியவற்றைச் செய்தல். ‘ஸ்வாத்யாய யஜ்ஞம்’; விதிப்படி ருக்வேதம் முதலிய வேதங்களைப் படித்தல். ‘ஞானயஜ்ஞம்’: சாஸ்திரார்த்தங்களைப் படித்தறிதல்].

[யுக்தமாய்த் திரவியங்களைச் சம்பாதித்துத் தேவதைகளைக் குறித்த தானங்களிலும் யாகங்களிலும் ஹோமங்களிலும் பிரயத்னம் செய்வது திரவியயஜ்ஞமாம். கிருச்சரம், சாந்திராயணம் முதலிய உபவாஸம் முதலானவைகளில் நிஷ்டை கொண்டிருத்தல் தபோயஜ்ஞமாம். புண்ய தீர்த்தங்களையும் புண்ய ஸ்தானங்களையும் அடைவதற்கும் பிரயத்னஞ்செய்வது யோகயஜ்ஞமாம். வேதமோதுவது ஸ்வாத்யாய யஜ்ஞம், அதன் அர்த்தவிசாரம் செய்வது ஞானயஜ்ஞம்].

[திரவியத்தை ஹோமம் செய்தல் திரவியயஜ்ஞம். தவம் என்னும் இந்த ஹவிஸ்ஸைப் பிரம்மமென்னும் அந்த அக்னியில் அந்தப்

பிரம்மத்தினுடைய பூஜைக்காக ஹோமம் செய்கின்றேன் என்று நினைத்தல் தபோயஜ்ஞம். அர்ப்பணமே ஹோமமாகும்.]

அபானே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேபானம் ததாபரே ।
ப்ராணாபானகதீ ருத்த்வா ப்ராணாயாமபராயணா: ॥

உகூ. இன்னுஞ்சிலர் அபானவாயுவில் பிராணவாயுவை ஹோமம் செய்கின்றார்கள். அப்படி, வேறுசிலர் பிராணவாயுவில் அபானவாயுவை ஹோமம் செய்கின்றார்கள். இன்னுஞ்சிலர் பிராணன் அபானன் ஆகிய இவைகளின் சலனத்தை (அசைவை) நிறுத்திப் பிராணாயாமமே முக்கியமாய்ச் செய்கின்றார்கள்.

[சிலர் 'பூரகம்' (உட்கொள்ளல்) என்னும் பிராணாயாமத்தையும், சிலர் 'ரேசகம்' (வெளியிடல்) என்னும் பிராணாயாமத்தையும் செய்கின்றார்கள். சிலர் 'கும்பகம்' (அசைவற்றிருத்தல்) என்னும் பிராணாயாமத்திலேயே முழுகியிருக்கின்றார்கள். கும்பகமாவது, மூக்குத்துவாரங்கள், வாய், ஆகிய இவ்வழிகளினால் வாயுவை வெளியில் விடாமலும், அந்த வாயு உள்நோக்கிப் பிராணனோடு கலக்காமலும் தடுத்தலாம்].

[பிராணாயாமம் செய்யும்பொழுது மூக்குத்துவாரங்களிலொன்றை மூடிக்கொண்டு மற்றொன்றின் வழியாய்க்காற்றை உள்ளுக்கு இழுப்பார்கள். இது 'பூரகம்' எனப்படும். பிறகு கொஞ்சநேரம் இரண்டு துவாரங்களையும் மூடிக்கொண்டு காற்றை உள்ளே நிறுத்துவார்கள். இது 'கும்பகம்' என்ப்படும். பிறகு, உட்கொண்ட துவாரமல்லாத மற்றைய துவாரத்தின் வழியாய், நிறுத்தியிருந்தகாற்றை மெதுவாய் வெளியில் விடுவார்கள். இது 'ரேசகம்' எனப்படும். இந்தச்சுலோகத்தில் 'அபானத்தில் பிராணனை' என்பதனால் பூரகமும், 'பிராணனில் அபானனை' என்பதனால் ரேசகமும், 'பிராணாபானங்களின் சலனத்தை நிறுத்தி' என்பதனால் கும்பகமும் சொல்லப்பட்டன].

[வாயினாலாவது மூக்கினாலாவது வாயுவை (காற்றை) வெளியில் விடுதல் 'பிராணகதி' (பிராணனது சலனம்—அசைவு).

எனப்படும். இவ்வாறல்லாமல் உள்ளுக்கு இழுத்தல் 'அபானத்தி' எனப்படும்].

[வைதிகர்கள் (வேதத்தை யநுசரிப்பவர்கள்), பிராணயாமம் செய்யும் பொழுது வலது மூக்கைக் கட்டைவிரலினால் மூடிக்கொண்டு இடது மூக்கினால் சுவாஸத்தை இழுத்துப் பிறகு இரண்டு மூக்குத்துவாரங்களையும் மூடிக்கொண்டு கடைசியாய் வலது மூக்கைத் திறந்து சுவாஸத்தை வெளியில் விடுவார்கள். தாந்திரிகர்கள் (தந்திரங்களை யநுசரிப்பவர்கள்) இடது மூக்கை மூடிக்கொண்டு வலது மூக்கினால் சுவாஸத்தை இழுத்துப் பிறகு இடது மூக்கினாலேயே வெளியில் விடுவார்கள். எப்படிச்செய்தாலும் பிராணாயாமம் செய்யுங்காலத்தில் மனதினாற் கடவுளினது திருநாமங்களையும் விசேஷணங்களையும் ஸ்மரிக்கவேண்டும்; பிரணவத்தை ஜபிப்பார்கள்].

அபரே நியதாஹாரா: ப்ராணாந்ப்ராணேஷு ஜுஹ்வதி ।
ஸர்வேऽப்யேதே யஜ்ஞவிதோ யஜ்ஞக்ஷபிதகல்மஷா: ॥

௩௰. சிலர் மிதமான ஆஹார முள்ளவர்களாய்ப் பிராணன்களைப் பிராணன்களில் ஹோமம் செய்கின்றார்கள். இவர்களெல்லாரும் (மேற்சொல்லப்பட்ட யோக புருஷர்களனைவரும்) யஜ்ஞகர்மத்தைத் தெரிந்தவர்கள்; யஜ்ஞ கர்மங்களினாற் பாபங்களைப் போக்கிக்கொண்டவர்கள்.

[பிராணன்களைப் பிராணன்களில் ஹோமஞ்செய்வதாவது—ஒவ்வொரு வாயுவையும் ஜயித்து இவ்வாறு ஜயிக்கப்பட்ட வாயுவில் மற்ற வாயுக்களைப் பிரவேசிக்கச் செய்வதாம்].

[பிராணன்களைப் பிராணன்களில் ஹோமம் செய்தல்—ஸர்வப் பிராணன்களையும் ஒடுங்குவிக்கும்படி செய்தல். இது கும்பகமாகும்].

['பிராணன்கள்' என்பன்மையாய்ச் சொல்லு மிடத்துப் பொதுவாய்ப் 'பிராணம்' (உயிர்) என்று அர்த்தம் கொள்ளும். தவம் விரதம் முதலியவைகளினால், உயிருடன் இருக்கும் பொழுதே இறந்தவர்களைப்போல் உயிரற்றிருந்து, இவ்வாறாக, உயிர்த்திருக்கும் பொழுது பிராணனையே ஹோமஞ் செய்கின்றார்கள்].

𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌮𑍃𑌤𑌭𑍁𑌜𑍋 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍।
𑌨𑌾𑌯𑌂 𑌲𑍋𑌕𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌯𑌯𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌕𑍁𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌃 𑌕𑍁𑌰𑍁𑌸𑌤𑍍𑌤𑌮॥

௩௧. யஜ்ஞம் செய்து மிகுந்த பதார்த்தமாகிய அமிருதத்தைப்புசித்து சாசுவதமான பிரம்மத்தை யடைகின்றார்கள். ஓ குருவம்சத்திற் சிரேஷ்டனே! மேற் சொல்லிய யஜ்ஞங்களில் ஒன்றையுஞ் செய்யாதவனுக்கு இந்த உலகமில்லை (உலகத்திற் சௌக்கிய மில்லை). பரலோகப் பிராப்தி (எப்படி) எதனாலுண்டாகும்?

[யஜ்ஞங்கள் செய்து மீறுகிற சேஷத்திற்கு அமிருத மென்று பெயர். யஜ்ஞங்கள் செய்வதுபோக மிகுந்த காலத்தில் அந்த யஜ்ஞ சேஷத்தைத் தின்றுகொண்டு மோக்ஷ இச்சை உள்ளவர்களாயிருக்கிறார்கள். யஜ்ஞத்தைச்செய்து கொண்டிருந்த போதிலும் காலக்கிரமத்தில் மோக்ஷ முடைவார்கள்.

எல்லாப் பிராணிகளுக்கும் சாமான்ய மாயிருக்கப்பட்ட இவ்வுலகமே மேற் சொல்லிய யஜ்ஞங்களி லொன்றையுஞ் செய்யாதவனுக்கு இல்லை யெனின், அருமையான சாதனங்களினாற் சாதிக்க வேண்டிய பரலோகம் அவனுக்கு எப்படிச் சித்திக்கும்]?

[மூன்றாவது அத்தியாயம் ௧௨-ஆவது சுலோகத்திற் சொல்லிய படி, யஜ்ஞம் செய்யாமல் (ஈசுவரார்ப்பணம் செய்யாமல்) சாப்பிடுகிறவன் கள்வன்; யஜ்ஞம் செய்து மிகுந்ததைச் சாப்பிடுகிறவன் அமிருதத்தைப் புசித்தவனாவன், ஏனெனின் அஃது அவனுக்குச் சாசுவதமான ஆயுளை யளிக்கின்றது. ஆயினும் இங்கு, யஜ்ஞம் செய்து மிகுந்திருக்கும் பதார்த்தத்தையே குறிப்பதாயன்றி, மேற் சொல்லிய அநேகவித யஜ்ஞங்களைச் செய்து முடித்த பிறகு அவன் அநுபவிக்கும் வாழ்க்கை, அதாவது, அவனுடைய விருத்தியின் (ஜீவனத்தொழிலின்) அல்லது, மனதின் நிலைமையைக் குறிப்பதாய்க் கொள்ளலாம்.

தேவதைகளுக்காவது பரமாத்மாவுக்காவது யஜ்ஞம் செய்யாதவன் இந்த வுலகத்தை யநுபவிப்பது மில்லை, சாசுவதமான நிலை

மையைச் சேருவதுமில்லை. ஏனெனின், யஜ்ஞங்களினால் திருப்தி செய்யாவிட்டால் தேவதைகள் இவன் விரும்பியவற்றை அளிக்க மாட்டார்கள், பரமாத்மாவும் தம்மிடத்து இவனைச் சேர்த்துக் கொள்ளவும் மாட்டார்.

இந்தச்சுலோகத்திலும் இன்னும் மற்ற இடங்களிலும் 'குரு' என்னும் சொல் அர்ச்சுனனைக்குறித்து உபயோகப்படும்பொழுது பொதுவாய்க் குரு என்பவரின் சந்ததியாராகிய பாண்டவரையும் திருதராஷ்டிரர் முதலானவர்களையும் அந்தப் பதம் குறிப்பிட்டதாய்க் கொள்ளல் வேண்டும். சாதாரணமாய்க் குருவம்சம் என்பது திருதராஷ்டிருடைய சந்ததிக்கே அமையும்].

ஏவம் பஹுவிதா யஜ்ஞா விததா ப்ரஹ்மணோ முகே।
கர்மஜாந் வித்தி தாந் ஸர்வாந் ஏவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே॥

௩௨. இவ்வாறு பல விதமான யஜ்ஞங்கள் பிரம்மத்தின் முகத்தில் வியாப்தமாயிருக்கின்றன. அவற்றை யெல்லாம் கர்மங்களினாலுண்டானவை யென்றறி. இப்படித் தெரிந்து கொண்டு மோக்ஷத்தை யடைவாய்.

['பிரம்மத்தின் முகத்தில்,—வேதத்தில். வேதத்தின்வழியாய்த் தெரிகின்றமையால் 'பிரம்மத்தின் முகத்தில்வியாப்தமாயிருக்கின்றன' வென்று சொல்லப்பட்டது. 'கர்மங்களினாலுண்டானவை'—காயிக (தேக சம்பந்தமான,) வாசிக (வாக்கு சம்பந்தமான,) மானஸ (மனதின் சம்பந்தமான) வியாபாரங்களினாலுண்டானவை. அஃதாவது, ஆத்மாவானது நிர்வியாபாரியானதனால் (வியாபாரமற்றதானதனால்) இவை ஆத்மாவினாலுண்டானவையல்லன என்பதாம். "இவை என் வியாபாரங்கள் அல்லன. நான் நிர்வியாபாரியல்லனோ?" என்று தெரிந்து கொள்கிறவன் ஸம்ஸாரத்தினின்று விடப்படுவான். வேதத்தில் மேற் சொல்லிய யஜ்ஞங்கள் விவரிக்கப்பட்டிருப்பதற்கு உதாரணம்:—"வாசி ப்ராணம் ஜுஹோமி" (பிராணனை வாக்கில் ஹோமம் செய்கின்றோம்)].

['யஜ்ஞங்கள்' = கர்ம யோகங்கள். 'பிரம்மத்தின் முகத்தில்' = வேதாந்தத்தில். கர்மயோகங்களாகிய யஜ்ஞங்கள் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை யறிந்தடைவதற்குச் சாதனங்களாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. 'கர்மங்களினு லுண்டானவை' = தினந்தோறும் ஆசரிக்கப்படுகின்ற நித்திய நைமித்திக காம்ய கர்மங்களினு லுண்டானவை].

['பிரம்மத்தின் முகத்தில்' = பரமாத்மாவின் முகத்தில் விஸ்தரித்துஇருக்கின்றன; அஃதாவது, பரமாத்மாவின்போக்ய (அநுபவிக்கத்தகுந்த) பதார்த்தங்களாம். இவை மானஸ, வாசிக, காயிக கர்மங்களினுலுண்டானவை யென்று தெரிந்தவனும் அந்தக்கர்மங்களைச் செய்து மோக்ஷத்தை யடையக்கூடும். மோக்ஷத்தை யுத்தேசித்து, யுத்தத்தை விட்டு வேறொன்றைச் செய்த போதிலும் அதுவும் கர்மமேயன்றே? ஆகையால், விஹிதமானதை (தனக்காக ஏற்பட்டதை) விடக்கூடாது].

பிரம்மஜ்ஞானம் (ஸம்யக்தர்சனம்; உண்மையான அறிவு) என்பதே ஒருயஜ்ஞமென்று மேலே உச-வது சுலோகத்திற் சொல்லப்பட்டது. அதன்பிறகு அநேக யஜ்ஞங்கள் கூறப்பட்டன. விரும்பிய புருஷார்த்தங்களை யடைவதற்குச் சாதனங்களாகிய இந்தப்பலவகை யஜ்ஞங்களைவிட ஞானம் சிரேஷ்டமானதென்று துதிக்கப்படுகின்றது:

ஶ்ரேயாந்த்³ரவ்யமயாத்³யஜ்ஞாஜ்ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப ।
ஸர்வம் கர்மாகி²லம் பார்த² ஜ்ஞாநே பரிஸமாப்யதே ॥

௩௩. ஓ சத்துருக்களைத் தகிக்கச்செய்வோனே! ஓ பார்த்தா (அர்ச்சுனா)! திரவிய (பதார்த்த) ங்களோடு கூடிய யஜ்ஞத்தைவிட ஞானயஜ்ஞம் நன்று. அகிலமும் எல்லாமுமான கர்மம் ஞானத்தில் பூர்த்தி செய்யப்படுகின்றது (கர்மங்களெல்லாம் ஞானத்தில் லயமாகின்றன).

['திரவியமயம்' (= திரவியங்களோடு கூடியது) = திரவியமென்னும்சாதனத்தினுற் சாதிக்கப்படத் தகுந்தது; திரவிய யஜ்

ஞம் பயனை விளைவிக்கும். ஞானயஜ்ஞம் பயனை விளைவியாதாதலின் திரவிய யஜ்ஞத்தைவிடச் சிரேஷ்டமானது. 'அகிலம்'—பிரதிபந்தப் படுத்தப்படாதது. கர்மம் ஞானத்தில் அந்தர்பாவமாகின்றது (உ-ஆம் அத். சஞ-ஆவது சுலோகம்)].

[கர்மங்களில் திரவியமயாம்சமென்றும் ஞானமயாம்சமென்றும் இரண்டு அம்சங்களுண்டு. அவற்றில் திரவியமயாம்சத்தைவிட ஞானமயாம்சம் சிரேஷ்டமானது. 'அகிலம்'—கர்மத்தைத்தவிர மற்றைய உபாதேயங்களெல்லாம் (ஸ்வீகரிக்கத்தகுந்தவைகளெல்லாம்), ஸமஸ்த ஸாதனங்களினாலும் அடையக்கூடிய ஞானத்தைக் கர்மத்திற்கு அந்தர்கதமாகும்படியாய் அப்பியசித்துக் கிரமமாய் அடைய வேண்டிய தசையையடைவான்].

['அகிலம்'—உபாசனைநிமித்தம் ஏற்பட்ட அங்கங்களோடு கூடிய கர்மங்களெல்லாம் ஞானத்தையுண்டாக்கும் பொருட்டே யாம்].

இந்தச் சிரேஷ்டமான ஞானம் எப்படிப்பிராப்தியாகும்?

தத்3வித்3தி4 ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா ।
உபதே3க்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்த்வத3ர்ஶிந: ॥

நச. அதை (ஞானத்தை) நமஸ்காரஞ்செய்வதனாலும், கேட்பதனாலும் பணிவிடை செய்வதனாலும் தெரிந்கொள்: தத்துவத்தையறிந்த ஞானிகள் உனக்கு ஞானத்தை உபதேசிப்பார்கள்.

[ஞானத்தை எப்படிச் சம்பாதிக்கிறதென்று தெரிந்துகொள். ஆசாரியர்களிடஞ்சென்று அவர்களுக்குத் தீர்க்கமாய் நமஸ்காரஞ் செய். பந்தத்திற்குக் காரணம் யாது, மோக்ஷம் எப்படி லபிக்கும், வித்யை யாது, அவித்யை யாது என்று இவ்வாறாக அவர்களைக் கேள். அவர்களுக்குப்பணிவிடைசெய். இவைகளினாலும் நீ செய்யும் மற்று மநேக மரியாதைகளினாலும் சந்தோஷமடைந்து, உண்மையை (தத்துவத்தை) யறிந்து அதனை அனுபவிக்கின்ற ஆசாரியர்கள் அவர்களுடைய ஞானத்தை—மேலே குறிக்கப்பட்ட ஞானத்தை

உனக்கு உபதேசிப்பார்கள். ஞான முள்ளவர்களாயும் தத்து வத்தை யறிந்து அனுபவிப்பவர்களாயு மிருப்பவர்கள் வெகு கொஞ் சம்; தத்துவத்தை யறிந்து ஸ்வாநுபவத்திற் கொண்டு வந்திருக் கிறவர்களுபதேசிக்கும் ஞானத்தினாலேயே யன்றி மற்றெந்த ஞான த்தினாலும் மோக்ஷம் சித்தியாது. இதுவே பகவானுடைய கொள் கையாம்].

[நீ யுக்தமான கர்மங்களை ஆசரித்துக்கொண்டு வரவேண்டும். ஆத்ம ஸ்வரூபஸாக்ஷாத்கார முள்ளவர்களுக்கு, ஆத்மாவின் ஸ்வரூ பத்தைப் பிரத்தியக்ஷமாய் அறிந்தவர்களுக்கு, நமஸ்காரம் முதலா கிய பணிவிடைகள் செய்து அவர்களிடத்தில் ஆத்ம ஞான உபதே சம் அடைய வேண்டும்].

𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌪𑌨𑌰𑍍𑌮𑍋𑌹𑌮𑍇𑌵𑌂 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 ।
𑌯𑍇𑌨 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌶𑍇𑌷𑍇𑌣 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌥𑍋 𑌮𑌯𑌿 ॥

௩௫. ஓ பாண்டவா (அர்ச்சுனா)! இதை (ஆத்ம ஞானத்தை)த் தெரிந்துகொண்டால் நீ மறுபடியும் இப்படி அஜ்ஞானத்தை யுடையாய்; இதனால், ஆத்மாவினிடத் தும் என்னிடத்துங்கூட எல்லாப் பூதங்களையும் பார்ப்பாய்.

[அவர்களால் ஞானத்தை உபதேசிக்கப்பெறின், நீ இப்பொ ழுது கலக்கமுற்றிருப்பதுபோல மறுபடியும் கலங்காய். உனது மயக்கம் நீங்கும். இந்த ஞானத்தினால் நான்முகப் பிரமன் முதற் புல்லீறாக வுள்ள எல்லாப் பிராணிகளையும் உனது ஆத்மாவி னிடத்தே காண்பாய். பிறகு "இப் பூதங்களனைத்தும் என்னிடத் திருக்கின்றன" என்று காண்பாய். அவைகளெல்லாம் வஸுதேவ ரது புத்திரனை வாஸுதேவனென்னும் என்னிடத் திருப்பதாயும் காண்பாய்:—

"பரமேசுவரேசே மாநி", (இவைகளெல்லாம் பரமேசுவர ரிடத்தே இருக்கின்றன), அஃதாவது, எல்லா உபநிஷத்துக்களி லும் பிரஸித்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறபடி க்ஷேத்திரஜ்ஞேசு வர ஐக்கியத்தை உணர்வாய்-ஆத்மாவும் ஈசுவரும் ஒன்றென்று

அறிவாய். பூதங்கள்—பிரமன் முதற் புல்லீறாக வுள்ள பிராணி வர்க்கங்கள்].

['அஜ்ஞானம்'—மோஹம்—ஆத்மாவினிடத்துத் தேகம் முதலான அபிமானங்களை வருவித்துக்கொள்ளல். இதுவே மமகாரம் முதலியவைகளுக்கு ஆதாரமாம். பிரகிருதி சம்பந்தமில்லாத ஆத்மவஸ்துக்களெல்லாம் ஒன்றுக்கொன்று சமானமாய் வித்தியாசமில்லாமலிருக்கும்; ஸர்வேச்வரருக்கும் சமானமாயிருக்கும்].

[இப்பொழுதுகூட அர்ச்சுனன் ஞானியேயாவன். அவனுக்கு ஞானமில்லாமற் போகவில்லை. ஆயினும், பிராரப்த வசத்தினால் அது மூடப்பட்டு அல்லது, மறைபட்டு, அவனுக்கு மோஹம் (பிரமை) ஜனித்தது. ஞானத்தினால், ஆத்மபூதனான என்னிடத்தி எல்லாப்பூதங்களையுங் காண்பாய்—எல்லாவற்றிற்கும் நானே ஆதாரமென்று காண்பாய்].

[எல்லா ஆத்மாக்களும் என்னிடத்திருந்து பிறந்தமையால், எல்லாப் பூதங்களுக்கும், உனக்கும், பரமபுருஷனாகிய எனக்கும் உள்ள சம்பந்தத்தை நீ காண்பாய்].

𑌅𑌪𑌿 𑌚𑍇𑌦𑌸𑌿 𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌾𑌪𑌕𑍃𑌤𑍍𑌤𑌮𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌲𑌵𑍇𑌨𑍈𑌵 𑌵𑍃𑌜𑌿𑌨𑌂 𑌸𑌨𑍍𑌤𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 ॥

௩௬. பாபிகளெல்லாரையும்விட மிகுந்தபாபங்களைச் செய்தவனானபோதிலும், எல்லாப் பாபங்களையும் ஞானம் என்னும் தெப்பத்தினாலேயே தாண்டுவாய்.

[மோக்ஷமடைய விரும்புகிறவனுக்குப் புண்யமுங்கூடப் பாபமாகவே எண்ணப்படும்].

[இது முதல் மூன்று சுலோகங்களிற் சாதனமாகிய ஞானத்தின் விஷயம் சொல்லப்படுகின்றது].

[இதனால், ஞானத்தை அப்பியசிக்கிறவன் தன்னிஷ்டப்படி பாபம் செய்யலாமென்று அர்த்தமாகாது. ஆயின், பின்வரும் ௩அ-ஆவது சுலோகத்தில், பரிசுத்தம் செய்வதில் உத்தமமானது என்று சொல்லப்பட்ட ஆத்மஞானமானது அவன்கீழ்க்கடையில் (இதற்கு

(முந்திச்) செய்திருந்த பாபத்தை, அஃது எவ்வளவு பெரியதாயினும், போக்கும் என்பது இந்தச்சுலோகத்தின் தாற்பரியமாகும்].

ஞானம் பாபத்தை எப்படிப்போக்கும்? உதாரணங்காண்க :—

யதைதாம்ஸி ஸமித்தோऽக்நிர் பஸ்மஸாத் குருதேऽர்ஜுந ।
ஜ்ஞாநாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா ॥

௩௭. ஓ அர்ச்சுனா! நன்றாய்ப் பிரகாசிக்கின்ற நெருப்பு ஸமித்துக்களை (கட்டைகளை) எப்படிப் பூர்த்தியாய்ச் சாம்பலாக்குமோ அப்படியே ஞானம் என்னும் நெருப்பு கர்மங்களை யெல்லாம் பூர்த்தியாய்ச் சாம்பலாக்கும் (நசிக்கச்செய்யும்).

[எந்தக் கர்மத்தினால் இந்தச் சரீரம் ஆரம்பிக்கப்பட்டதோ அந்தக் கர்மத்திற்குப் பெயர் "பிராரப்தம்". இஃது அனுபவத்தினாலேயே நசிக்க வேண்டும், அஃதாவது, அதனை அனுபவித்தே தீர வேண்டும். அதனைப் போக்க முடியாது. ஆகையால், இந்த ஜன்மத்தில் ஞானமுண்டாவதற்கு முன் செய்யப்பட்டவைகளையும், ஞானத்துடன்கூட உண்டானவைகளையும், அநேக பூர்வ ஜன்மங்களிற் செய்யப்பட்டவைகளையும்—இந்தக் கர்மங்களை மாத்திரமே ஞானம் நசிக்கச்செய்யும்.

[ஞான மென்னும் நெருப்பினால் கர்மங்கள் சாம்பலாகின்றன வெனின், அவை பயனற்றவைகளாகின்றன. உண்மையில் ஞானம் கர்மங்களைச் சாம்பலாக்காது. சரியான அறிவு, அல்லது, தெளிவான ஞானத்தினால் கர்மங்கள் பயனைக் கொடுக்கச் சக்தியற்றுப் போகின்றன. எந்தக் கர்ம விசேஷத்தினால் நாம் இப்பொழுது ஜன்ம மெடுத்திருக்கிறோமோ அந்தக்கர்மம் பயனை விளைவித்துவிட்டது. அந்தப் பயனாவது இந்தத் தேகமாம். ஆகையால் இந்தப் பயன் பூர்த்தியாய் அற்றுப்போகிறவரையில் அந்தப்பிராரப்த கர்மம் நசிக்காது. ஆயினும் இன்னும் பயன் கொடாமலிருக்கிற மற்ற கர்மங்களெல்லாம் ஞானத்தினால் நசிக்கின்றன. அந்த மற்ற கர்மங்களாவன: இந்த ஜன்மத்தில் ஞானமுண்டாவதற்கு முன்னும் ஞான

மூண்டான பின்னும் செய்யப்பட்டவைகளும், அனேக பூர்வ ஜன்மங்களிற் செய்யப்பட்டவைகளுமாம்].

𑌨𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌦𑍃𑌶𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑌿𑌹 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌯𑌂 𑌯𑍋𑌗𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌕𑌾𑌲𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 ॥

௩௮. ஞானத்துக்குச் சமானமாய்ப் பரிசுத்தஞ்செய்யக்கூடியது இந்த உலகத்தில் வேறொன்றும் இல்லை. யோக சித்தியை யடைந்தவன் காலக்கிரமத்தில் தானாகவே அந்த ஞானத்தைத் தன்னுடைய ஆத்மாவினிடத்துக் காண்கின்றான்.

['யோகம்'=கர்மயோகமும் ஸமாதியோகமும். 'சித்தி'=யோக்யதை. கர்மயோகத்தினாலும் (காரியங்களினாலும்) ஸமாதியோகத்தினாலும் (தியானத்தினாலும்) மேன்மையடைந்து மோக்ஷத்தைநாடிப் பாடுபடுகிறவன் வெகுகாலம் இவ்விதமாய்த்தவஞ்செய்யின் (அப்பியாசஞ்செய்யின்) ஞானம் அவனுக்குத் தனக்குத்தானே உண்டாகும்].

[குருவின் உபதேசத்தின்படி இன்னதேனறும் ஞானவடிவாய் ஆசரிக்கப்படுகின்ற கர்மயோகத்தினற் சித்தியடைந்தவன் ஆத்மஜ்ஞானத்தைத் தானாகவே அடைவான்].

[ஒருவருடைய உபதேசமில்லாவிடினும், மிகுந்த சிரத்தையுடனும் பக்தியுடனும் செய்யும் கர்மங்களினாலும் தியானத்தினாலும் ஆத்மஞானம் சித்திக்கும்].

நிச்சயமாய் ஞானம் பிராப்தியாவதற்கு உபாயம் சொல்லப்படுகின்றது.

𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌁𑌲𑍍𑌲𑌭𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 𑌸𑌂𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑌰𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌚𑌿𑌰𑍇𑌣𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

௩௯. சிரத்தையுள்ளவனும் ஆஸக்தி (ஆசை) யுள்ளவனும் விஷயங்களினின்று திருப்பப்பட்ட இந்திரியங்களை

யுடையவனும் ஞானத்தை யடைவான். ஞானமடைந்து கொஞ்சகாலத்திலேயே பெரிய சாந்தியை யடைவான்.

[சிரத்தை, அஃதாவது, நம்பிக்கை மிகுந்தவன் ஞானமடைவான். ஆனால் அவன் கொஞ்சம் மந்தமான ஸ்வபாவமுள்ளவனு யிருக்கலாம். ஆகையால், அவன் ஞானத்தைச் சம்பாதிப்பதற்கு வேண்டிய சாதனங்களை எப்பொழுதும் செய்துகொண்டிருக்க வேண்டுமென்று விதிக்கப்பட்டது. அச்சாதனங்களாவன: குருமார்களைச்சேவித்தல், அவர்களது உபதேசங்களைக் கேட்டு மனனம் செய்தல் முதலியன. நம்பிக்கையும் ஆஸக்தியுமுள்ளவன் தன் இந்திரியங்களை யடக்கச் சக்தியற்றவனு யிருக்கலாம்; ஆகையால், அவன் தன் இந்திரியங்களை விஷயங்களின்மீது செல்லாது தடுத்து ஆளவேண்டுமென்றும் விதிக்கப்பட்டது. இப்படி நம்பிக்கை, ஆஸக்தி, இந்திரிய நியமனம் ஆகிய இந்த யோக்யதைகளை யுடையவன் ஞானமடைவது திண்ணம். மேலே ௩௪-ஆவது சுலோகத்திற் சொல்லப்பட்ட நமஸ்காரம் முதலாகிய வெளிக்காரியங்களினுல், வேண்டிய ஞானம் சித்தியாதிருக்கலாம்; ஏனெனின், அவை சரீர தர்மங்களாகும், அவற்றைச் செய்பவர்கள் மனப்பூர்த்தியா யில்லாமல் மேலுக்குமாத்திரம் செய்பவர்களாயிருக்கலாம். ஆனுல், இப்படிப்பட்ட மோசம் நம்பிக்கை, ஆஸக்தி முதலியவைகளில் நேராது. ஆதலால், இவையே நிச்சயமான ஞானசாதனங்கள். இந்த ஞானத்தைச் சம்பாதிப்பதனுற் பயனென்னெனின்? ஞானமடைந்தபிறகு வெகு சீக்கிரத்திலேயே 'பெரிய சாந்தம்' என்னப்பட்ட மோக்ஷத்தை யடைகின்றுன்].

[நம்பிக்கையாவது சந்தேகமில்லாமை, மதக்கோட்பாடுகளின் ஆகமத்தில் உறுதியான புத்தி, அந்த ஆகம விதிகளைச் சலியாமலும் வெறுக்காமலும் சந்தோஷமாய் மனமொப்பிச் செய்தல். அர்ச்சுனன் போர்செய்யமாட்டேனென்று மறுத்ததற்குப் பிரதியாய்ச் சொன்ன கக்ஷிகளில் இஃது ஒன்றும். ஏனெனின், அவன் தன்னுடைய க்ஷத்திரிய தர்மங்களில் நம்பிக்கை பூர்த்தியாயில்லாமற் சந்தேக புத்தியுள்ளவனுயன்றே போர்புரியேனென்றது?

ஞானத்தினல் மோக்ஷம் சித்திக்குமென்று எல்லாச் சாஸ்திரங்களும் நியாயங்களும் பிரசித்தமாய்ச் சொல்லுகின்றன].

['சிரத்தை யுள்ளவன்'=ஞானத்தை விருத்தி செய்துகொள்வதிற் சிரத்தை யுள்ளவன். 'ஆஸக்தி யுள்ளவன்'=அதன்கண்ணே மனமுள்ளவன்].

இந்தச்சுலோகம் ஞானசாதனங்களைச்சொல்லுகின்றது.

ஞானத்தினல் மோக்ஷம் சீக்கிரத்திற் சித்திக்கும் என்னும் விஷயத்தில் நீ சந்தேகப்படாதே. சந்தேகித்தால் பாபமாகும். எப்படியெனின், கேள்:

அஜ்ஞஶ்சாஶ்ரத்தధாநஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி।
நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்ஶயாத்மந:॥

சம. அறிவில்லாதவனும் (அஜ்ஞனும்), நம்பாதவனும், சந்தேகப்படுகிற மனமுள்ளவனும் நாசமடைவான். சந்தேகப்படுகின்றவனுக்கு இவ்வுலகமுமில்லை, பரலோகமுமில்லை; சுகமுமில்லை.

[ஆத்ம ஞானமில்லாதவரும், தனது குருவின் வாக்கியத்தில் விசுவாஸமில்லாதவரும் கெடுபவர்களாயினும், அவர்கள் சந்தேகப்படுகிறவன் கெடுமளவு கெடார். சந்தேகப்படுகிற மனமுள்ளவன் பாபியாவன். எப்படியெனின், மானிடருக்கெல்லாம் சாதாரணமாயுள்ள இவ்வுலகங்கூட எப்பொழுதும் எல்லாவிஷயத்திற்கும் சந்தேகப்பட்டுக்கொண்டிருப்பவனுக்குப் பயன் தராது. மறுவுலகமும் அவனுக்கில்லை. அவனுக்கு ஒருபொழுதும் சுகமுமில்லை; ஏனெனின் இவை யனைத்துங்கூட அவனுக்குச் சந்தேகமானவையேயாம். ஆதலின், நீ சந்தேகித்தல் தகாது].

[உபதேசக் கிரமத்தினு லுண்டாகிய ஞானமில்லாதவனும், உபதேசிக்கப்பட்ட ஞானத்தை விருத்திசெய்து கொள்வதில் அக்கறையில்லாதவனும், உபதேசிக்கப்பட்ட ஞானத்தின்விஷயத்திற் சந்தேகமான மனமுடையவனும் கெடுவான். இப்படிச் சந்தேகமான

சித்த முள்ளவனுக்கு இவ்வுலக முதலானவையே இல்லையெனின், அவனுக்கு மோக்ஷமெப்படிச் சித்திக்கும்? ஆகையால், சந்தேகப்படுகின்றவன் சுகத்தின் துளியையும் அநுபவிப்பவனுகான்].

[இது முதலாயுள்ள சுலோகங்களில் ஞான விரோதிகளுக்கு உண்டாகும் பயன்கள் சொல்லப்படுகின்றன].

[மறுவுலகமாகிய ஸ்வர்க்கம் அவனுக்கு இல்லாமற்போவ தெப்படியெனின், அவனுடைய புத்தி சந்தேகப்பட்டுக்கொண்டிருப்பதனுல் அவன் தனக்குரிய கடமைகளைச்செய்வதில்லை, தர்மங்களை நிறைவேற்றுவதில்லை. இதற்காக அவன் நரகங்களில் தண்டிக்கப்படுவான், ஆதலின் ஸ்வர்க்கத்திற்குப்போக ஆஸ்பதமில்லை].

யொமஸஷ்ஷகூமாணம் ஜூநஸம்ஹிநஸம்ஶயம் ।
ஆத்மவந்தம் நகூமாணி நிவத்நந்தி யநஞ்ஜய ॥

சக. ஓ தனஞ்ஜயா (அர்ச்சுனு)! யோகத்தினுற் களையப்பட்ட கர்மங்களையுடையவனையும், ஞானத்தினுற் பிளக்கப்பட்ட சந்தேக முடையவனையும், திடமான மனமுடையவனையும் கர்மங்கள் பந்திக்கமாட்டா.

[எவனொருவன் பரமார்த்த ஞானத்தினுல் தர்மாதர்ம ரூபங்களாயுள்ள கர்மங்களை விட்டானே; ஞானத்தினுல்,—ஆத்மாவும் ஈசுவரரும் ஒருவரே என்னும் ஞானத்தினுல், ஸம்சய மற்றவனுனே; அவன் (இப்படிப்பரமார்த்தத்தை யறிந்தவன்) எப்பொழுதும் ஜாக்கிரதையுள்ளவனுயிருப்பது மன்றி, எல்லாக்காரியங்களையும் (கர்மங்களையும்) ஸத்வரஜஸ்தமோகுண வியாபார ரூபங்களென்று அறிகின்றுன். ஆதலால், கர்மங்கள் அவனைப் பந்திப்பதில்லை, அநிஷ்டமான பயனைக் கொடுப்பதில்லை].

[இது வரையிற் சொல்லப்பட்ட யோகத்தினுற் கர்மங்களை ஸந்நியஸிக்கவேண்டியது (விடவேண்டியது), ஞானுகாரமாக மாற்றவேண்டும். கர்மங்களாவன—பந்தத்திற்குக் காரணமாயுள்ள பிராசீன (பழமையான) கர்மங்கள்].

கர்மயோகத்தினால் மனதைச் சுத்திசெய்துகொண்டு, ஞானத்தையடைந்து அதனால் தனது சந்தேகத்தை நிவர்த்திசெய்துகொண்டவன் கர்மங்களினாற் கட்டுப்படான். அன்றியும், ஞானம், கர்மம் ஆகிய இவைகளை யநுஷ்டிக்கும் விஷயத்தில் ஸம்சயமுள்ளவன் நாசமடைவான். இவ்விரண்டு காரணங்களினாலே :

தஸ்மாதஜ்ஞாநஸம்பூதம் ஹ்ருத்ஸ்தம் ஜ்ஞாநாஸிநாத்மந: ।
சித்த்வைநம் ஸம்ஶயம் யோகமாதிஷ்டோத்திஷ்ட பாரத ॥

சஉ. ஆகையால், அஜ்ஞானத்தினா லுண்டானதாயும், இருதயத்தி லிருப்பதாயுமுள்ள ஆத்ம விஷயமான இந்தச் சந்தேகத்தை ஞானமென்னுங் கத்தியினால் நறுக்கி, யோகத்தை யாசரிப்பாயாக, ஓ பரதவம்சத்தோனே! எழுந்திரு.

['அஜ்ஞானம்'=அவிவேகம். 'இருதயம்'=புத்தி. 'யோகம்'= பரமார்த்தஞானத்திற்குச் சாதனமான கர்மத்தை யாசரித்தல். 'எழுந்திரு'= யுத்தத்திற்கு எழுந்திரு.

சந்தேகமென்பது மிகவும் பாபகரமானது. அதனை ஞானத்தினால், ஆத்மாவைப்பற்றிய உண்மையான அறிவினால், கொல். இங்குச்சந்தேகமென்பது தன்னுடைய ஆத்மவிஷயத்தைக் குறித்தேயன்றி வேறன்று. ஆதலின், அஃது ஆத்மஞானத்தினாலேயே நீங்கவேண்டும். ஞானமானது சோகமோஹாதி தோஷங்களைப் போக்கும். உனது நாசத்திற்குக்காரணமாகிய சந்தேகத்தை இவ்வாறாக நிவர்த்திசெய்துகொண்டு, உண்மையானஞானத்தை யடைவதற்குச் சாதனமாகிய கர்மயோகத்தை யநுஷ்டிக்கக்கடவை. இப்பொழுது யுத்தத்திற்கு எழுந்திரு].

[அஜ்ஞானம் அநாதியாயுள்ளது. கர்மயோகாநுஷ்டானஞ்செய் அதற்காக எழுந்திரு].

[ஒவ்வொரு அத்தியாயத்தின் கடைப்பாகத்தில், சாத்தியமான விடங்களிலெல்லாம், எதிர்நிற்கும் சத்துருவை உத்தேசித்தேனும்,

அல்லது, அல்லற்படுத்தும் யாதொரு சத்துருவை யுத்தேசித்தேனும், அர்ச்சுனனை நோக்கிக் கிருஷ்ணபகவான் யுத்தத்திற்கெழுந்திருவென்று உபதேசிக்கிறார். மூன்றாவது அத்தியாயம் ௪௩-ஆவது சுலோகத்தைப்பார்க்க].

இவ்வாறாக உபநிஷதர்த்தத்தை விளக்குவதும், பிரம்ம
வித்தையைப் போதிப்பதும், யோகசாஸ்திரமும்,
ஸ்ரீகிருஷ்ணார்ச்சுன ஸம்வாதமுமாகிய பகவத்
கீதைகளில் ஞானயோகத்தைப்பற்றிய
நான்காம் அத்தியாயம்
முற்றிற்று.



# ஐந்தாம் அத்தியாயம்.

# ஸந்நியாஸ யோகம்.

நான்காம் அத்தியாயம் ௰அ, ௰கூ, உக, உஉ, உச, ஙஉ, ஙங, ஙஎ, சக-ஆகிய இந்தச் சுலோகங்களிற் பகவான் கர்மஸந்நியாஸத்தைப் பற்றிச் சொன்னார்; ஷை அத்-சஉ-ஆம் சுலோகத்தில் அர்ச்சுனனைப் பார்த்து யோகஞ் செய்யச்சொன்னார், அஃதாவது, கர்மாநுஷ்டான லக்ஷணத்தை யுபதேசித்தார். கர்மாநுஷ்டானத்திற்கும் கர்ம ஸந்நியாஸத்திற்கும், ஸ்திதி (அசைவற்றிருத்தல்) க்கும் கதி (அசைவற்றிருத்தல்) க்கும் போல, பரஸ்பர விரோத மிருக்கின்றமையால் அவை யிரண்டும் ஒரு புருஷனால் ஒரே காலத்திற் செய்யப்படுவது (அநுஷ்டிக்கப்படுவது) அசாத்தியமாம். அவற்றை வேறு வேறு காலங்களில் அநுஷ்டிக்கவும் நிர்ணயம் ஏற்படவில்லை. ஆதலால், இவ்விரண்டில் ஒன்றே அர்ச்சுனனது கடமையென்று தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. இந்தக் கர்மாநுஷ்டானம், கர்மஸந்நியாஸ மெனு மிரண்டினில் எஃது உத்தமமானதோ அதையே தான் அநுஷ்டிக்க வேணடு மென்றும், மற்றதை விடவேண்டு மென்றும் அர்ச்சுனன் நினைக்கின்றான். இதை யுத்தேசித்து அவன் பகவானைப் பார்த்து இந்த ௧-ஆம், அத்-௧-ஆம் சுலோகத்தில் அவ்வை யிரண்டில் எது மேலானதென்று தெரிந்து கொள்ளும்பொருட்டு வினவுகின்றான்:

மூன்றும் அத்தியாயத்தின் ஆரம்பத்தில், அர்ச்சுனன், ஞானமும் கர்மமும் ஒருவனிடத்திலேயே கலந்திருத்தல் கூடாமைகண்டு இவையிரண்டினுள் எதுமேலானதோ அதைச் சொல்லுமெனப் பகவானைக் கேட்டான். அதற்கு அவர், ஸாங்கியர்களுக்கு (சந்நியாசிகளுக்கு) ஞானமும், யோகிகளுக்குக் கர்மாசரணையும் விதிக்கப்பட்டன வென்று தீர்மானமாய்க் கூறினார். அன்றியும், ங-ஆம் அத். ச ஆம் சு-ல் "கர்மங்களை விடுகின்ற மாத்திரத்தினாலேயே ஞான சித்தியைப் பெறான்" என்று சொன்னமையால், ஞானத்துடன் கூடிய ஒழிவு முக்திக்குச் சாதனமென்று விளங்குகின்றது. கர்ம

யோகமும், ௬-ஆம் அத்-௪௨-௬-ல் சொல்லப்பட்டதனால், முக்திக்குச் சாதனமாகவே ஏற்படுகின்றது. கர்மயோகம், சந்நியாசமெனு மிரண்டில் எது, ஞானமில்லாத ஒருவனுக்கு, மேலானதோ அதைத்தெரிந்துகொள்ளும்பொருட்டு அர்ச்சுனன் இப்பொழுது வினவுகின்றான்:

அர்ச்சுனன் சொல்லியது:

ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புநர்யோகம் ச ஸம்ஸஸி।
யச்ச்ரேய ஏதயோரேகம் தந்மே ப்ரூஹி ஸுநிஸ்சிதம்॥

க. ஓ கிருஷ்ண! கர்மங்களின் சந்நியாசத்தையும், மறுபடி யோகத்தையுஞ் சொல்லுகின்றீர். இவற்றில் யாதொன்று மேலானதோ, நன்றாய் நிச்சயிக்கப்பட்ட அதனை எனக்குச் சொல்லும்.

[சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டுள்ள கர்மங்களைச் செய்யாதொழித்தல் வேண்டுமென்று சொல்லுகிறீர்; அவற்றைச் செய்வது அவசியமான கடமையென்றுஞ் சொல்லுகிறீர். ஆகையால், அவ்விரண்டில், விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்வது மேலானதோ, அல்லது, அவற்றைச் செய்யாதொழிப்பது மேலானதோ வென்று, எனக்கொரு சந்தேக முண்டாயிருக்கின்றது, மேலான மார்க்கத்தையன்றோ அநுசரிக்கவேண்டும்? இரண்டு மார்க்கங்களையும் ஒருவனே அநுஷ்டித்தல் கூடாமை பற்றி, கர்மயோகம் கர்மசந்நியாசமெனு மிரண்டினில் எதனால் நான் முக்தி பெறுவேனென்பதை நிச்சயமாய்ச் சொல்லும்].

['கர்ம சந்நியாசம்'=ஞானயோகம். இரண்டாம் அத்தியாயத்தின் முற்பகுதியிற் கர்மயோகத்தையே செய்யவேண்டு மென்றும், அதனால் அந்தக்கரண சுத்தி யுண்டான பிறகு ஞானயோகத்தை யாசரிக்க வேண்டுமென்றுஞ் சொல்லப்பட்டது. ௩, ௪, அத்தியாயங்களில், ஞானயோகாதிகாரிகளுக்குங் கூடக் கர்ம நிஷ்டையே பிரசஸ்தமானது (நல்லது), அது ஞானத்தின் சகாயமின்றியே ஆத்மப் பிராப்திக்குச் சாதனமாகும் என்று கர்மயோகம் சொல்லப்பட்டது. இந்த ஞானயோகம், கர்மயோகம் எனு மிரண்டினுள் சுலப

மாய் ஆசரிக்கக் கூடியதாயும், சீக்கிரத்தில் ஆத்மப் பிராப்தியை யுண்டாக்கு விப்பதாயும், மேலானதாயு முள்ளதைச் சொல்லும்].

[நியமித்தல் முதலான கர்மங்களினல் உலகங்களையெல்லாம் ஆகர்ஷிப்பவராதலின் கிருஷ்ணன் எனப்பட்டார். சந்நியாசமே சிரேஷ்டமாயின் அதற்கு இந்த யுத்தம் விரோதமாகும் என்பது சங்கையின் பொருளென்க. சந்நியாசமெனின் யதியாசிரமமன்று. சந்நியாசம் யாதென்பதைப் பகவானே இந்த ௫-ஆம் அத்-௩-ஆவது சு-ல் சொல்லப் போகிறார்].

[கடந்த நான்காம் அத்தியாயத்தில் ஞானத்தின் தன்மையை எடுத்துரைத்து, அதனை யாசரித்தல் யோகமார்க்கத்தின் ஓரங்கமென்று சித்தாந்தப் படுத்தினர். இப்பொழுது கர்மம் முக்திக்குச் சாதனமென்று விவரிக்கப் புகுகின்றார். இந்த அத்தியாயத்தில், சாங்கிய மதமும் யோக மதமும் கர்மத்தைக் குறித்து ஒரே மாதிரியாய்ப் போதிக்கின்றன வென்று பகவான் நிரூபிக்கின்றார். கர்மங்களையெல்லாம் ஒழித்து ஞானத்தையே சார்ந்திருத்தல் வேண்டுமென்பது சாங்கிய மதத்தின் முக்கியமான கொள்கையாயினும், கர்மங்களை யெல்லாம் ஆசரிக்கவேண்டு மென்பது யோகமதத்தின் சித்தாந்தமாயினும், இவ்விரண்டிற்கும் வித்தியாச மில்லையாம். எப்படி யெனின், யோக மார்க்கத்தின்படி கர்மத்தை யநுசரிப்பதாவது சரியான ஒழிவுடன் கூடிச் செய்தலாம்; இங்கு ஒழிவெனின், கர்மஞ் செய்யாமையன்று, கர்மங்களைப் பற்றில்லாமற் செய்தலாம்].

சந்தேகத்தைத் தெளிவிக்கும்பொருட்டுத் தமது அபிப்பிராயத்தைப் பகவான் சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவான் சொல்லியது.

ஸந்ந்யாஸ꞉ கர்மயோக³ஶ்ச நி꞉ஶ்ரேயஸகராவுபௌ⁴ ।
தயோஸ்து கர்மஸந்ந்யாஸாத் கர்மயோகோ³ விஶிஷ்யதே ॥

உ. கர்மபரித்தியாகம் (ஸந்நியாஸம்), கர்மயோகம் (கர்மாநுஷ்டானம்) ஆகிய இவ்விரண்டு மார்க்கங்களும்

மோக்ஷசாதனங்களேயாம். அவற்றிற் கர்மயோகமானது கர்மஸந்நியாஸத்தைவிடச் சிரேஷ்டமானதாகும்.

[ஸந்நியாஸம்=கர்மங்களை விடுதல். கர்மயோகம்=கர்மங்களை ஆசரித்தல். இவ்விரண்டும் ஞான முண்டாவதற்குக் காரணங்களாயிருப்பதனுல் மோக்ஷம் விளைவிக்கக் கூடியவைகளே யானபோதிலும், அவற்றிற் கர்மயோகமே சிரேஷ்டமானதென்று துதிக்கப்படுகின்றது. குறிப்பு.—கர்மயோகம் உண்மையான கர்ம ஸந்நியாஸத்தைவிட மேலானதென்று பகவான் சொல்லவந்தவரல்லர். உண்மையான கர்மஸந்நியாஸம், அஃதாவது, ஞானத்துடன் கூடிய கர்ம ஸந்நியாஸமானது கர்மயோகத்தைவிட மிகவும் மேலான மார்க்கமாம். ஆனுல், கர்மயோகமானது கர்மஸந்நியாஸத்தைவிட சுளுவானதாயும் ஞானமில்லாத கர்ம ஸந்நியாஸத்தைவிட மேலானதாயுமிருக்கின்றது].

[ஞானயோகம், கர்மயோகம் என்னுமிரண்டும் ஒன்றனுதவி மற்றொன்றற்கில்லாமலே மோக்ஷமளிக்கக் கூடியவைகளாயிருக்கின்றன].

ஜ்ஞேயஸ்ஸ நித்யஸந்ந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி ।
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத் ப்ரமுச்யதே ॥

௩. எவன் துவேஷியானே, விரும்பானே, அவன் எப்பொழுதும் சந்நியாசியென்று அறியப்படத் தகுந்தவன் (எவனுக்குத் துவேஷமில்லையோ, விருப்ப மில்லையோ, அவன் நித்திய சந்நியாசி யெனப்படுவான்). ஓ பெரும் புயங்களை யுடையோனே! தொந்தங்களில்லாதவன் (புண்யம்-பாபம், நன்மை-தீமை முதலிய இரட்டைகளுக் குட்படாதவன்) ஆயாசமின்றிக் கர்மபந்தத்தினின்று விடப்படுகின்றானல்லனே?

[துக்கத்தையேனும் துக்க சாதனங்களையேனும் வெறுக்காமலும், சுகத்தையேனும் சுக சாதனங்களையேனும் இச்சியாமலும் ஒருவன் இவ்விதமாகக் கர்மங்களைச் செய்து கொண்டிருந்தால்,

ர்ராகத் துவேஷங்களுடன் கூடியவ னல்லனுகையால், கர்மஞ் செய் வோனுயினும் அவன் எப்பொழுதும் சந்நியாசியாகவே இருப்பவ னுய்க் கொள்ளப்படத்தகுந்தவன். கர்ம யோகியானவன் கர்மங்களை யாசரித்துக்கொண்டிருந்தாலும் ராகத் துவேஷங்க ளில்லாதவ னுதலால் அவன் நித்திய சந்நியாசி யெனப்படுவான்].

—[கர்ம யோகியாயிருந்து கர்மயோகத்தின்கண் அமர்ந்துள்ள ஆத்மாநுபவத்தினிடத்தே திருப்தியடைந்தவனுய், மற்றெதன்மீதும் விருப்பமேனும் துவேஷமேனும் (வெறுப்பேனும்) இன்றி நடப்பானு யின், அவன் நித்திய சந்நியாசியாவன்; எப்பொழுதும் ஞானநிஷ் டையி லிருப்பவனுவன்].

[இந்தச்சுலோகம் 'சந்நியாசம்' என்னுஞ் சொல்லி னர்த்தத்தை விளக்குகின்றது. சந்நியாச மென்பது ஞானத்திற்கு அந்தரங்கமாம்].

சந்நியாசமுங் கர்மயோகமும் வேறு வேறு மனிதர்களா லநுஷ் டிக்கப்படத் தகுந்தனவாயும், பரஸ்பர விரோதமுள்ளனவாயு மிருக் கின்றமையால், அவற்றின் பயன்களும் விரோதப்பட்டே இருத்தல் வேண்டும். அஃதன்றி, இரண்டு மார்க்கங்களும் மோக்ஷம் என்னு மொரே பயனை யெப்படி யளிக்கக்கூடுமெனின், பகவான் சொல்லு கின்றார்:

ஸாம்க்யயோகௌ ப்ருதக்பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா: ।
ஏகமப்யாஸ்தித: ஸம்யகுபயோர்விந்ததே பலம் ॥

௪. குழந்தைகள் (அறிவிலிகள்) சாங்கியத்தையும் யோகத்தையும் வேறு வேறென்று சொல்லுகிறார்கள்; பண்டிதர்கள் (அறிவுடையோர்) அங்ஙனமுரையார். இவ் விரண்டு மார்க்கங்களி லொன்றை நன்று யநுஷ்டிப்பவன் இரண்டு மார்க்கங்களின் பிரயோஜனத்தையு மடைவான்.

[வேறு வேறென்று சொல்வதெனின், விரோதமுள்ள பிரத் யேகமான பயனைக் கொடுப்பன வென்பதாம். சாங்கியம், யோக மெனு மிரண்டிற்கும் மோக்ஷமே பயனுகும். ஆதலின், பயன் விஷ யத்தில் விரோதமில்லை. ஞானத்துடன் கூடிய கர்ம சந்நியாசம்,

சாங்கியமெனப்படும். ஞானத்திற்குச் சாதனமாகிச் சமபுத்தியுடன் கூடிய கர்மமே யோகமெனப்படும்.

'சந்நியாசம்' என்றும், 'கர்மயோகம்' என்றும் முதன் முதலிற் கேள்வி கேட்கப்பட்டது. ஆயினும், பகவான் 'சாங்கியம்' என்றும், 'யோகம்' என்றும் பேசுகின்றார். சந்நியாசமே சாங்கியமென்பதும், கர்மயோகமே யோகமென்பதும் (ஞானமுஞ் சமபுத்தியுங் கூடிய விடத்து), பகவானுடைய கொள்கையென்க].

[கர்மயோகம் ஞானயோகத்தை யுண்டாக்கு மென்றும், ஞான யோகம் ஆத்மாவலோகனத்தை (ஆத்மாவைத் தரிசித்தல்) உண்டாக்குமென்றும் வித்தியாசமான பிரயோஜனங்களைச் சொல்லு வோர் பண்டிதர்களல்லர். இரண்டிற்கும் ஆத்மாவலோகனமே பயனு கும்].

[சாங்கியமும் யோகமும் அந்தரங்கங்களே யாதலின் விரோத மானவை யல்ல].

[சாங்கியம், யோகம் என்னு மிரண்டையும் பற்றிச்சொல்லுகின்ற இரண்டாம் அத்தியாயம் ௩௯-ஆவது சுலோகத்தைப் பார்க்க].

மேற்கூறிய இரண்டு மார்க்கங்களி லொன்றை மாத்திர மநு சரிப்பதனால் இரண்டு மார்க்கங்களின் பயனையு மொருவ னெப்படி யடைவானென்னின்:

யத் ஸாங்க்யை꞉ ப்ராப்யதே ஸ்தாநம் தத்³யோகை³ரபி க³ம்யதே
ஏகம் ஸாங்க்²யம் ச யோக³ம் ச ய꞉ பஶ்யதி ஸ பஶ்யதி ॥ [௫

௫. எந்த ஸ்தானம் (நிலைமை) சாங்கியர்களினு லடை யப்படுகின்றதோ, அது யோகிகளினாலு மடையப்படுகின் றது. சாங்கியத்தையும் யோகத்தையும் ஒன்றாய் எவன் தெரிந்துகொள்கின்றானோ, அவன் தெரிந்தவனாவன்.

[சாங்கியரென்போர் ஞான நிஷ்டர்கள், சந்நியாசிகள். அவர் கள் மோக்ஷமென்னும் ஸ்திதியை யடைகின்றார்கள். அதே ஸ்திதி யோகிகளினாலு மடையப்படுகின்றது. இவர்கள் ஞான மடைந்து விரக்தர்களாகி அந்த ஸ்திதியை யடைகின்றார்கள். யாதொரு பய

னையும் விரும்பாமல் (நிஷ்காமிகளாகி), தாம் செய்யுங் கர்மங்களை யெல்லாம் ஈசுவரருக்கு அர்ப்பணம் செய்து, கர்மங்களை யாசரித்தல் ஞானப்பிராப்திக்கு உபாயமென்று க்ருதி, கர்மஞ்செய்வோர் யோகிகளாவர். பயன் ஒன்றாயிருப்பதனால் சாங்கியமும் யோகமும் ஒன்றே யென்று எவன் அறிகின்றானோ அவனே சரியாய் அறிந்தவனாவன்].

[ஞானநிஷ்டர்களினா லடையப்படும் ஆத்மாவலோகனமே கர்மயோக நிஷ்டர்களினாலு மடையப்படும். இவ்வாறு பயன் ஒன்றாயிருப்பதனால் ஞானயோகம் கர்மயோகம் எனு மிரண்டும் ஒன்றேயாம், அஃதாவது, வைகல்பிகங்கள் (=ஒன்றையாசரித்தால் மன்றொன்றை யாசரிக்க வேண்டியதில்லை].

[யோகத்தினாலுங் கூட ஞானப்பிராப்தியின் வழியாய் ஞானப் பயன் அடையப்படுகின்றது].

ஸஂந்யாஸஸ்து மஹாபாஹோ து:கமாப்துமயோகத: ।
யோகயுக்தோ முநிர்ப்ரஹ்ம நசிரேணாதிகச்சதி ।

௬. ஓ பெரும்புயங்களை யுடையோனே (அர்ச்சுனா)! ஸந்நியாஸ மென்பது யோகமின்றி அடைவதற்குச் சாத்தியமானதன்று. யோகத்துடன்கூடிய முனியானவன் சீக்கிரத்திற் பிரம்மத்தை யடைகின்றான்.

[கர்மமில்லாமல் ஸந்நியாஸ மடைவது கஷ்டம். கர்மாநுஷ்டானஞ் செய்கின்ற ஞானியானவன் சீக்கிரமாய்ப் பிரம்மத்தை யடைகின்றான். இங்குச் சந்நியாஸ மென்று கூறியது பாரமார்த்திக (உண்மையான) சந்நியாஸத்தை யென்க; யோகம் என்பது வைதிக கர்மயோகமாம், வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மங்களை ஈசுவரார்ப்பணமாகவும் பயனைக் கருதாமலும் செய்தலாம். 'முனி'=ஈசுவரரது திருவுருவைத் தியானிப்பவன் (மன்னஞ் செய்பவன்). இங்குப் பிரம்மம் என்பது இப்பொழுது சொல்லப்பட்ட சந்நியாசமென்று (பிரம்மஞான மென்று) அர்த்தமாகும்; ஏனெனில், சந்நியாசமென்பது பரமாத்ம ஜ்ஞானமே யாம் (பரமாத்மாவை யறிதலாம்)-தைத்திரீய

உபநிஷத்து, ச-எஅ: "ந்யாஸ இதி ப்ரஹ்மா, ப்ரஹ்மாஹி பர: பரோஹி ப்ரஹ்மா."

யோகசாதனம் பெற்ற முனியானவன் சீக்கிரத்திற் பிரம்மம், அல்லது, உண்மையான சந்நியாசத்தை யடைகிறான். உண்மையான சந்நியாசமாவது பரமார்த்தஞான நிஷ்டையேயாம். ஆதலின், கர்மயோகமே சிரேஷ்டமென்று நான் சொன்னேன்].

[பின் சுலோகத்தின்படி, கர்மயோகத்தைவிடச் சந்நியாசமே சிரேஷ்டமாகின்றது. இப்படியிருக்க, கர்ம சந்நியாசத்தைவிடக் கர்மயோகமே சிரேஷ்டமானதென்று ங-ஆம் அத் உ-ஆம் சுலோகத்திற் சொல்லியது எப்படிப் பொருந்துமெனின், கேள்: கேவலமான கர்மசந்நியாசம், கேவலமான கர்மயோகம் ஆகிய இவை யிரண்டினில் எது சிரேஷ்டமானதென்று நீ கேட்டதற்குக் கர்ம சந்நியாசத்தை விடக் கர்மயோகமே சிரேஷ்டமென்று அதற்குத் தகுந்த மறுமொழி சொன்னேன். இப்படிச் சொன்னது ஞானத்தை யுத்தேசித்துச் சொல்லப்பட்டதன்று. ஞானாபேக்ஷையுள்ள சந்நியாசமே சாங்கிய மென்பது என்து அபிப்பிராயம். அதுவே பரமார்த்த யோகமாகும். வைதிக கர்மங்களை யாசரித்தல்கூட இதற்காகவேயாதலின், வைதிக கர்மயோகத்திற்கு ஸந்நியாஸ மென்றும் யோகமென்றும் பெயராம். வைதிக கர்மயோகத்தினுற் சாங்கியம் விளைகின்றதென்பதை இந்தச் சுலோகம் உணர்த்துகின்றது].

[கர்மயோகத்தை அநுசரிக்கிறவன் ஸ்வயமாய் ஆத்மாவை மனனம் செய்து, சுகமாகக் கர்மயோகத்தைச் சாதித்துக்கொண்டு, கொஞ்சக்காலத்திலேயே பிரம்மத்தை, அஃதாவது, ஆத்ம ஸ்வரூபத்தை அடைகின்றான். ஞானயோகத்தை யநுசரிப்பவன் மிகுந்த துக்கத்துடன் (சிரமத்துடன்) ஞானத்தைச் சாதிக்கின்றான். இவ்வளவு சிரமப்படவேண்டி யிருப்பதனால் ஆத்மாவை யடைவதற்கு வெகுகாலம் செல்லும்].

[யோகமில்லை யெனின் மோக்ஷம் முதலிய பயன்கள் சித்திக்க மாட்டா. ஆதலின், சந்நியாசிக்குக் காமங்களை ஜயித்தல் முதலிய துக்கமே யன்றி வேறொன்றுமில்லை. மோக்ஷம் தவிர மற்ற பயன்கள்

சில்லறைப்பயன்களாகையால் அவை பயன்களே யல்லவென்பது தாற்பரியமாம். பெரும் பயனை விளைவிக்கக் கூடியதற்குச் சொற்பமான பயன் பயனேயாகாது. ரத்தினத்திற்கு ஒரு பிடி அரிசியைப் போலாம். யோகத்துடன் கூடின சந்நியாசம் பெரும்பயனை விளைவிக்கும். முனி=சந்நியாஸமுள்ளவன்].

யொ₃க₃யுக்தோ விஶுத்₃தா₄த்மா விஜிதாத்மா ஜிதேந்த்₃ரிய: ।
ஸர்வபூ₄தாத்மபூ₄தாத்மா குர்வந்நபி ந லிப்யதே ॥

எ. கர்மயோகியானவன் பரிசுத்தமான மனமும் ஜயிக்கப்பட்ட தேகமும், அடக்கப்பட்ட இந்திரியங்களும் உள்ளவனும், எல்லாப் பூதங்களுக்கும் ஆத்மாவாயுள்ளதையே தனது ஆத்மாவாய் ஆக்கிக் கொண்டவனும் இருந்து, (அவன்) கர்மங்களைச் செய்துகொண்டிருந்தபோதிலும் பற்றுள்ளவனாகான்.

[கர்மயோகம் செய்பவன் சித்தசுத்தியுண்டாகி மனதைச் சுவாதீனப்படுத்திக்கொண்டு, இந்திரியங்களை ஜயித்து, எல்லாப் பூதங்களுந்தானாகவும், தான் எல்லாப் பூதங்களாகவும் பாவித்துக் கர்மங்களைச் செய்தால் அவன் அந்தக் கர்மங்களினாற் கட்டுப்படான்.

சரியாய்ப் பார்க்கிறவன், அஃதாவது, நான்முகப்பிரம்மா முதற் புல்லீறாகவுள்ள பூதகோடிகளனைத்துக்கும் ஆத்மாவாயுள்ளதே தனது ஆத்மாவென்று அறிந்தவன் பற்றுள்ளவனாகான்; அவன் லோகஸங்கிரகார்த்தமாய் (உலகத்தவர்கள் கெட்டுப்போகக்கூடாதென்னு முத்தேசத்துடன் அவர்களுக்கு நல்வழி காட்டும் பொருட்டு)க் கர்மங்களைச் செய்துகொண்டிருந்தபோதிலும் அந்தக் கர்மங்கள் அவனைப் பற்றாவாம்].

[கர்ம யோகியானவன் சாஸ்திர சம்மதமானதாயும் பகவதாராதனை ரூபமானதாயு முள்ள கர்மங்களை யாசரித்துக்கொண்டு, அதனாற் பரிசுத்தமான மனமுள்ளவனாகி, தான் கர்மங்களில் வேலை செய்துகொண்டிருப்பதனாற் சுலபமாய் ஜயிக்கப்பட்ட மனமுள்ளவனாகி, அதனாலேயே மற்ற இந்திரியங்களையுங் கூட ஜயித்தவனாகி,

சாங்கியமெனப்படும். ஞானத்திற்குச் சாதனமாகிச் சமபுத்தியுடன் கூடிய கர்மமே யோகமெனப்படும்.

"சந்நியாசம்" என்றும், 'கர்மயோகம்' என்றும் முதன் முதலிற் கேள்வி கேட்கப்பட்டது. ஆயினும், பகவான் 'சாங்கியம்' என்றும், 'யோகம்' என்றும் பேசுகின்றார். சந்நியாசமே சாங்கியமென்பதும், கர்மயோகமே யோகமென்பதும் (ஞானமுஞ் சமபுத்தியுங் கூடிய விடத்து), பகவானுடைய கொள்கையென்க].

[கர்மயோகம் ஞானயோகத்தை யுண்டாக்கு மென்றும், ஞான யோகம் ஆத்மாவலோகனத்தை (ஆத்மாவைத் தரிசித்தல்) உண்டாக்குமென்றும் வித்தியாசமான பிரயோஜனங்களைச் சொல்லு வோர் பண்டிதர்களல்லர். இரண்டிற்கும் ஆத்மாவலோகனமே பயனாகும்].

[சாங்கியமும் யோகமும் அந்தரங்கங்களே யாதலின் விரோத மானவை யல்ல].

[சாங்கியம், யோகம் என்னு மிரண்டையும் பற்றிச்சொல்லுகின்ற இரண்டாம் அத்தியாயம் ஙக-ஆவது சுலோகத்தைப் பார்க்க].

மேற்கூறிய இரண்டு மார்க்கங்களி லொன்றை மாத்திர மநுசரிப்பதனால் இரண்டு மார்க்கங்களின் பயனையு மொருவ னெப்படி யடைவானென்னின்:

𑌯𑌤𑍍𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑌦𑍍𑌯𑍋𑌗𑍈𑌰𑌪𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇
𑌏𑌕𑌂 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌂 𑌚 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ॥ [தெ।

ரு. எந்த ஸ்தானம் (நிலைமை) சாங்கியர்களா லடையப்படுகின்றதோ, அது யோகிகளாலு மடையப்படுகின்றது. சாங்கியத்தையும் யோகத்தையும் ஒன்றாய் எவன் தெரிந்துகொள்கின்றானோ, அவன் தெரிந்தவனாவன்.

[சாங்கியரென்போர் ஞான நிஷ்டர்கள், சந்நியாசிகள். அவர்கள் மோக்ஷமென்னும் ஸ்திதியை யடைகின்றார்கள். அதே ஸ்திதி யோகிகளாலு மடையப்படுகின்றது. இவர்கள் ஞான மடைந்து விரக்தர்களாகி அந்த ஸ்திதியை யடைகின்றார்கள். யாதொரு பய

ளையும் விரும்பாமல் (நிஷ்காமிகளாகி), தாம் செய்யுங் கர்மங்களை யெல்லாம் ஈசுவரருக்கு அர்ப்பணம் செய்து, கர்மங்களை யாசரித்தல் ஞானப்பிராப்திக்கு உபாயமென்று கருதி, கர்மஞ்செய்வோர் யோகிகளாவர். பயன் ஒன்றாயிருப்பதனால் சாங்கியமும் யோகமும் ஒன்றே யென்று எவன் அறிகின்றானோ அவனே சரியாய் அறிந்தவனாவன்].

[ஞானநிஷ்டர்களினா லடையப்படும் ஆத்மாவலோகனமே கர்மயோக நிஷ்டர்களினாலு மடையப்படும். இவ்வாறு பயன் ஒன்றாயிருப்பதனால் ஞானயோகம் கர்மயோகம் எனு மிரண்டும் ஒன்றேயாம், அஃதாவது, வைகல்பிகங்கள் (=ஒன்றையாசரித்தால் மற்றொன்றையாசரிக்க வேண்டியதில்லை].

[யோகத்தினாலுங் கூட ஞானப்பிராப்தியின் வழியாய் ஞானப்பயன் அடையப்படுகின்றது].

ஸந்ந்யாஸஸ்து மஹாபாஹோ து:கமாப்துமயோகத: ।
யோகயுக்தோ முநிர்ப்ரஹ்ம நசிரேணாதிகச்சதி ।

௬. ஓ பெரும்புயங்களை யுடையோனே (அர்ச்சுனா)! ஸந்நியாஸ மென்பது யோகமின்றி அடைவதற்குச் சாத்தியமானதன்று. யோகத்துடன்கூடிய முனியானவன் சீக்கிரத்திற் பிரம்மத்தை யடைகின்றான்.

[கர்மமில்லாமல் ஸந்நியாஸ மடைவது கஷ்டம். கர்மானுஷ்டானஞ் செய்கின்ற ஞானியானவன் சீக்கிரமாய்ப் பிரம்மத்தை யடைகின்றான். இங்குச் சந்நியாஸ மென்று கூறியது பாரமார்த்திக (உண்மையான) சந்நியாஸத்தை யென்க; யோகம் என்பது வைதிக கர்மயோகமாம், வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மங்களை ஈசுவரார்ப்பணமாகவும் பயனைக் கருதாமலும் செய்தலாம். 'முனி'=ஈசுவரரது திருவுருவைத் தியானிப்பவன் (மனனஞ் செய்பவன்). இங்குப் பிரம்மம் என்பது இப்பொழுது சொல்லப்பட்ட சந்நியாசமென்று (பிரம்மஞான மென்று) அர்த்தமாகும்; ஏனெனில், சந்நியாசமென்பது பரமாத்ம ஜ்ஞானமே யாம் (பரமாத்மாவை யறிதலாம்)-தைத்திரீய

உபநிஷத்து, சு-எஅ: "நியாஸ இதி ப்ரஹ்மா, ப்ரஹ்மாஹி பர: பரோஹி ப்ரஹ்மா."

யோகசாதனம் பெற்ற முனியானவன் சீக்கிரத்திற் பிரம்மம், அல்லது, உண்மையான சந்நியாசத்தை யடைகிறான். உண்மையான சந்நியாசமாவது பரமார்த்தஞான நிஷ்டையேயாம். ஆதலின், கர்ம யோகமே சிரேஷ்டமென்று நான் சொன்னேன்].

[பின் சுலோகத்தின்படி, கர்மயோகத்தைவிடச் சந்நியாசமே சிரேஷ்டமாகின்றது. இப்படியிருக்க, கர்ம சந்நியாசத்தைவிடக் கர்மயோகமே சிரேஷ்டமானதென்று ௫-ஆம் அத் உ-ஆம் சுலோகத்திற் சொல்லியது எப்படிப் பொருந்துமெனின், கேள் : கேவலமான கர்மசந்நியாசம், கேவலமான கர்மயோகம் ஆகிய இவை யிரண்டினில் எது சிரேஷ்டமானதென்று நீ கேட்டதற்குக் கர்ம சந்நியாசத்தை விடக் கர்மயோகமே சிரேஷ்டமென்று அதற்குத் தகுந்த மறுமொழி சொன்னேன். இப்படிச் சொன்னது ஞானத்தை யுத்தேசித்துச் சொல்லப்பட்டதன்று. ஞானாபேக்ஷையுள்ள சந்நியாசமே சாங்கிய மென்பது எனது அபிப்பிராயம். அதுவே பரமார்த்த யோகமாகும். வைதிக கர்மங்களை யாசரித்தல்கூட இதற்காகவேயாதலின், வைதிக கர்மயோகத்திற்கு ஸந்நியாஸ மென்றும் யோகமென்றும் பெயராம். வைதிக கர்மயோகத்தினுற் சாங்கியம் விளைகின்றதென்பதை இந்தச் சுலோகம் உணர்த்துகின்றது].

[கர்மயோகத்தை அநுசரிக்கிறவன் ஸ்வயமாய் ஆத்மாவை மனனம் செய்து, சுகமாகக் கர்மயோகத்தைச் சாதித்துக்கொண்டு, கொஞ்சக்காலத்திலேயே பிரம்மத்தை, அஃதாவது, ஆத்ம ஸ்வரூபத்தை அடைகின்றான். ஞானயோகத்தை யநுசரிப்பவன் மிகுந்த துக்கத்துடன் (சிரமத்துடன்) ஞானத்தைச் சாதிக்கின்றான். இவ்வளவு சிரமப்படவேண்டி யிருப்பதனால் ஆத்மாவை யடைவதற்கு வெகுகாலம் செல்லும்].

[யோகமில்லை யெனின் மோக்ஷம் முதலிய பயன்கள் சித்திக்க மாட்டா. ஆதலின், சந்நியாசிக்குக் காமங்களை ஜயித்தல் முதலிய துக்கமே யன்றி வேறொன்றுமில்லை. மோக்ஷம் தவிர மற்ற பயன்கள்

இல்லறைப்பயன்களாகையால் அவை பயன்களே யல்லவென்பது தாற்பரியமாம். பெரும் பயனை விளைவிக்கக் கூடியதற்குச் சொற்ப மான பயன் பயனேயாகாது. ரத்தினத்திற்கு ஒரு பிடி அரிசியைப் போலாம். யோகத்துடன் கூடின் சந்நியாசம் பெரும்பயனை விளை விக்கும். முனி=சந்நியாஸமுள்ளவன்].

யோகயுக்தோ விஶுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய꞉ ।
ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வந்நபி ந லிப்யதே ॥

எ. கர்மயோகியானவன் பரிசுத்தமான மனமும் ஜயிக்கப்பட்ட தேகமும், அடக்கப்பட்ட இந்திரியங்களும் உள்ளவனும், எல்லாப் பூதங்களுக்கும் ஆத்மாவாயுள்ள தையே தனது ஆத்மாவாய் ஆக்கிக் கொண்டவனும் இரு ந்து, (அவன்) கர்மங்களைச் செய்துகொண்டிருந்தபோதி லும் பற்றுள்ளவனாகான்.

[கர்மயோகம் செய்பவன் சித்தசுத்தியுண்டாகி மனத்தைச் சுவா தீனப்படுத்திக்கொண்டு, இந்திரியங்களை ஜயித்து, எல்லாப் பூதங் களுந்தானாகவும், தான் எல்லாப் பூதங்களாகவும் பாவித்துக் கர்மங் களைச் செய்தால் அவன் அந்தக் கர்மங்களினாற் கட்டுப்படான்.

சரியாய்ப் பார்க்கிறவன், அஃதாவது, நான்முகப்பிரம்மா முதற் புல்லீறாகவுள்ள பூதகோடிக ளனைத்துக்கும் ஆத்மாவாயுள்ளதே தனது ஆத்மாவென்று அறிந்தவன் பற்றுள்ளவனாகான்; அவன் லோகஸங்கிர கார்த்தமாய் (உலகத்தவர்கள் கெட்டுப்போகக்கூடா தென்று முக்தேசத்துடன் அவர்களுக்கு நல்வழி காட்டும் பொ ருட்டு) க் கர்மங்களைச் செய்துகொண்டிருந்தபோதிலும் அந்தக் கர் மங்கள் அவனைப் பற்றாவாம்].

[கர்ம யோகியானவன் சாஸ்திர சம்மதமானதாயும் பகவதாரா தனை ரூபமானதாயு முள்ள கர்மங்களை யாசரித்துக்கொண்டு, அத னாற் பரிசுத்தமான மனமுள்ளவனாகி, தான் கர்மங்களில் வேலை செய்துகொண்டிருப்பதனாற் சுலபமாய் ஜயிக்கப்பட்ட மனமுள்ள வனாகி, அதனாலேயே மற்ற இந்திரியங்களையுங் கூட ஜயித்தவனாகி,

தனது ஆத்மாவும் தேவர் முதலானோருடைய சரீரங்களிலுள்ள ஆத்மாக்களும் ஒருருவமுள்ளவர்களென்னும் ஆத்மயாதாத்மிய ஞானமுள்ளவனாகின்றமையால் எல்லாப் பூதங்களின் ஆத்மாவும் தன்னுடைய ஆத்மாவே, அஃதாவது, தனது ஆத்மாவைப்போல அவர்களும் ஞான ஸ்வரூபிகளே என்னும் ஞானமுள்ளவனாகி, ஆத்மாவல்லாததனிடத்து ஆத்மாபிமானப் பற்று உள்ளவனாகான்].

[இந்தச் சுலோகம் ௬-ஆவது சுலோகத்தின் பிற்பகுதியை விவரிக்கின்றது. எல்லாப் பூதங்களையு மடைந்த பரமேசுவரர் ஸர்வபூதாத்மபூதர் (பூதங்களுக்கெல்லாம் ஆத்மாவாயிருப்பவர்); அவரைத் தனது ஆத்மாவாயுள்ளவனெனின், பரமேசுவரர் தன்னைச் சமீபத்திற் சேர்த்துக்கொள்வார் என்னும் ஞானமுள்ளவன்].

நைவ கிஞ்சித்கரோமீதி யுக்தோ மந்யேத தத்த்வவித் ।
பஶ்யஞ் ஶ்ருண்வன் ஸ்ப்ருஶஞ் ஜிக்ரன்னஶ்னன் கச்சன் ஸ்வபஞ் ஶ்வஸன் ॥
ப்ரலபன் விஸ்ருஜன் க்ருஹ்ணன்னுன்மிஷன்னிமிஷன்னபி ।
இந்த்ரியாணீந்த்ரியார்தேஷு வர்தந்த இதி தாரயன் ॥

அ. ௯. தத்துவத்தை யறிந்தவன் (பிரம்மஞானி) கண்களினாற் பார்த்து, காதுகளினாற்கேட்டு, தேகத்தினாற் பரிசித்து (தொட்டு), மூக்கினால் வாசனையறிந்து, நாக்கினாற் புசித்து, கால்களினால் நடந்து, தூங்கி, மூச்சுவிட்டு, பேசி, மல மூத்திரங்களைத் தள்ளி, விஷயங்களைக் கிரகித்து, கண்களை மூடித்திறந்து இவ்வாறெல்லாம் செய்தபோதிலும் இந்திரியங்கள் இந்திரிய விஷயங்களிற் பிரவர்த்திக்கின்றன (செல்லுகின்றன) என்று நிச்சயித்துக்கொண்டு, (பரப்பிரம்மமாகிய) நான் ஒன்றையுஞ் செய்யவில்லை யென்று சித்தசுத்திகொண்டு நினைப்பான்.

[ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை, அஃதாவது, பரமார்த்தத்தை யறிந்தவனே தத்துவ ஞானியாவன். அவன் தத்துவத்தினிடத்தே மனதை நிறுத்தினவனாய் எப்பொழுது, எப்படி, மேற்

சொல்லியவாறு நினைக்கவேண்டுமெனின், " கண்களினுற் பார்த்து, காதுகளினுற் கேட்டு........................"—இவ்வாறு செய்து வரும்பொழுது என்று கொள்க.

இப்படி எல்லாவியாபாரங்களும் அகர்மங்களென்னு மெண்ணமுள்ளவனுக்குக் கர்மமில்லை யெனுமறிவு உண்டாவதனுல் கர்ம ஸந்நியாஸத்திற்கே அதிகாரமாம். அவன் கர்ம சந்நியாசத்திற்குரியவன். கானலில் நீரிருக்கின்றதென்று எண்ணி அதனைக் குடிப்பதற்குப் போனவன், ஜலமில்லை யென்று தெரிந்த பிறகு தாகத்தைத் தணித்துக்கொள்ள அந்தக் கானலண்டை போகானல்லனே]?

[தத்துவத்தை யறிந்தவன், ஞானமே ஸ்வபாவமாயுள்ள எனக்குக் கர்மமூலமான இந்திரியம், பிராண முதலியவற்றின் சம்பந்தத்தினுல் இப்படிப்பட்ட கர்த்திருத்துவம் (செய்தேனெனல்) உண்டாயிற்றே யன்றி அந்தக் கர்த்திருத்துவமானது ஸ்வபாவ ஸித்தமாய் ஏற்பட்டதன்றென்று நினைப்பான்].

[இவ்விரண்டு சுலோகங்களும் சந்நியாச மின்னதென்று சொல்லுகின்றன].

ஆயின், தத்துவ ஞானமில்லாதவன் கர்ம யோகியாய்க் கர்மத்தை யநுசரித்து வருவானுயின், அவனுக்குச் சொல்லுகிருர்:-

ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதிய: ।
லிப்யதே நஸபாபேந பத்மபத்ரமிவாம்பஸா ॥

ம. கர்மங்களைப் பிரம்மார்ப்பணம் செய்து, ஆசைவிட்டு, (கர்மங்களைச்) செய்பவன், தாமரையிலை ஜலத்தினுல் நனைக்கப்படாததுபோல, பாபங்களினுல் தாக்கப்படான்.

[இந்தச் சுலோகம் கர்ம சந்நியாசம் செய்யாதவனைக் குறித்துச் சொல்லுகின்றது. ஒரு சேவகன் தன்னுடைய எஜமானுக்காக வேலைகளைச் செய்வதுபோல, ஈசுவரப் பிரீத்யர்த்தமாய்க் கர்மங்களைச் செய்து, மோக்ஷமென்னும் பயனைக்கூட விரும்பாதவன் பாபத்திற்குள்ளாகான். அவன் செய்யுங் கர்மங்களுக்குப் பயன் மனம் சுத்தியாவதேயாம்].

["பிரம்மம்"=பிரகிருதி. பின் சுலோகத்திற் சொல்லியபடி, கர்மங்களின் கர்த்திருத்துவத்தை, இந்திரிய ரூபமாய்த் திரிக்கிருக்கிற பிரகிருதியினிடத்துவைத்து, பயன்களின் மீது ஆசைவிட்டு, "நான் ஒன்றும் செய்வதில்லை" என்று நினைந்து கர்மங்களைச் செய்பவன், தேகமே ஆத்மா என்று கொள்ளும் அபிமான ரூப ஸ்வரூபமாயுள்ள, பந்தத்திற்கு (கட்டிற்கு)க் காரணமாயுள்ள, பாபத்திற்குள்ளாகான்].

[ஸங்கியாஸ யோகத்துடன் கூடியவனே கர்மத்திற்குள்ளாகான் என்பது இந்தச் சுலோகத்தின் தாற்பரியமாம்].

காயெ௩௨௩ஸாவு௰௱ா கெவ௵ெ௩ீ௰ஹி௵ெரவி।
யொகி௩ஃக௦ஃ௯வ௱௲ஸ௰௫ தூ௱ஹரு௰ஸயெ॥

௰க. யோகிகள் ஆத்மசுத்தியின் பொருட்டுப் பற்றைவிட்டுச் சரீரத்தினாலும், மனதினாலும், புத்தியினாலும், கேவலமான இந்திரியங்களினாலும் கர்மத்தைச் செய்கின்றார்கள்.

['கேவலமான'=மமகாரமில்லாத. இந்த அடைமொழி சரீரம், மனம், புத்தி, இந்திரியங்கள் ஆகிய இவை யொவ்வொன்றிற்கும் சேர்க்கப்பட வேண்டும்.

கர்மங்களைச் செய்தல் ஈசுவரரின் பொருட்டே யன்றிப் பயன் பொருட்டன்று என்றெண்ணிப் பயன் மீது பற்றைவிட்டு யோகிகள், அஃதாவது, கர்மயோகிகள் ஸத்வசுத்தியினிமித்தமாய் (மனம் சுத்தப்படும் பொருட்டு) க்கர்மங்களைச் செய்வார்கள். ஆதலின், நீ இந்த மார்க்கத்திற்கே உரியவன், உனக்கு இதில்தான் அதிகாரம், நீ கர்மமே செய்யக்கடவை].

[சரீரம் முதலியவற்றாற் சாதிக்கத் தகுந்த கர்மத்தை, ஸ்வர்க்கம் முதலிய அனுபவங்களை யடைவோமென்னும் விருப்பத்தை விட்டு, ஆத்மாவினிடத்துள்ள பழமையான கர்மபந்தம் நசிக்கும் பொருட்டுச் செய்வார்கள்].

[பூர்வீகர்களுடைய ஆசாரம் இப்படிப்பட்டதென்று இச்சுலோகம் தெரிவிக்கின்றது].

யு-க்தஃ கமெ-ஃபலம் த்யக்த்வா ஶாந்திமாப்னோதி நைஷ்டிகீம் ।
அயு-க்தஃ காமகாரேண ஃபலே ஸக்தோ நிபத்யதே ॥

யஉ. யோகயுக்தனு யிருப்பவன் கர்மத்தின் பயன்களைவிட்டு நிஷ்டையிலுண்டான சாந்தியை (பாரமார்த்திகமான சித்த சாந்தியை) அடைகின்றான். யுக்தனல்லாதவன் காமத்தின் தூண்டுதலினாற் பயன்மீது ஆசைவைத்துக் கட்டப்படுகின்றான்.

[“ஈசுவரருக்காகக் கர்மங்களைச் செய்கின்றேன், என்னுடைய பயனுக்காக அன்று” என்னும் சித்த சமாதான முள்ளவன் யுக்தனெனப்படுவான். இப்படிப்பட்ட சமாதானத்தை யடைந்து கர்மங்களைச் செய்கிறவன் முதலில் ஸத்வசுத்தி (அந்தஃகரணசுத்தி)யையும் பிறகு ஞானப் பிராப்தியையும், பிறகு சர்வகர்ம சந்நியாசத்தையும், பிறகு ஞான நிஷ்டையையும் அடைந்து கடைசியாய் மோக்ஷ மென்னும் சாந்தியைப் பெறுகின்றான். காமத்தின் பிரேரபணையினால் “எனக்குப் பயன் வேண்டும்” என்னும் எண்ணத்துடன் கர்மங்களைச் செய்வோன் பயனுக்குப் பற்றுள்ளவனாகிக் கர்மபந்தத்திற் குட்படுகின்றான். ஆதலால், நீ யுக்தனாகக் கடவை].

[யுக்தனாகி, அஃதாவது, ஆத்மாவைவிட வேறான பயன்களின் மீது சபலமில்லாதவனாய், ஆத்மாவினிடத்தே முக்கியமாய் மனதுள்ளவனாய், கர்மத்தின் பயன்கள் மீது ஆசை யில்லாமல், கேவலம் ஆத்ம சுத்திக்காகவே கர்மஞ் செய்து, நைஷ்டிக சாந்தியை (ஸ்திரமான ஆத்மானுபவரூபமான ஆனந்தத்தை) அடைகின்றான். ஆகையால், பயன் மீது விருப்பமில்லாதவனாய் இந்திரிய ரூபமாய்த் திரிந்திருக்கிற பிரகிருதியினிடத்துக் கர்மங்களைச் சந்நியசித்து (விட்டு), பந்தத்தி லிருந்து தப்பிக்கொள்ளும் பொருட்டே கர்மங்களைச் செய்யக்கடவை].

பரமார்த்த மறிந்தவனே வெனின் அவன்

ஸர்வகர்மாணி மநஸா ஸந்ந்யஸ்யாஸ்தே ஸுகம் வசீ ।
நவத்வாரே புரே தேஹீ நைவ குர்வந்ந காரயந் ॥

ய௩. எல்லாக் கர்மங்களையும் மனதினால் ஒழித்துவிட்டு, இந்திரியஜய முள்ளவனாகி, செய்யாதவனும் செய்வியாதவனுமாய், ஒன்பது துவாரங்களுள்ள பட்டணமாகிய தேகத்திற் சுகமா யிருக்கிறான்.

[கர்மங்கள் நால்வகைப்படும்: நித்திய கர்மங்கள்=தவறாமல் அவசியமாய்ச் செய்ய வேண்டியவை; நைமித்திக கர்மங்கள்=அப்போதைக் கப்போது விசேஷ காலங்களிற் செய்யப்படுவன; காம்ய கர்மங்கள்=யாதேனும் பிரயோஜனத்தை யுத்தேசித்துச் செய்யப்படுவன; இவை செய்தே தீரவேண்டு மென்னும் கட்டாய மில்லை; நிஷித்த கர்மங்கள்=செய்யத்தகாவென்று மறுக்கப்பட்டவைகள்.

பரமார்த்த ஞானமுள்ளவன் மேற்சொல்லிய கர்மங்களை யெல்லாம் மனதினால், அதாவது, கர்மங்களில் அகர்மபாவனையென்னும் விவேக புத்தியினால், ஒழித்து, தேகம், வாக்கு, மனம் ஆகிய இவைகளின் வியாபாரங்களையும் விட்டு, ஆயாசமில்லாமல், சந்தோஷமான மனதுள்ளவனா யிருக்கிறான். தேகம், வாக்கு, மனம் ஆகிய இவைகளின் வியாபாரங்க ளில்லாமைபற்றி, அவனுக்கு ஆயாசமில்லை, மனம் சாந்தமாயிருக்கும். ஆதலின் அவன் சந்தோஷமாயிருக்கிறான் என்று சொல்லப்பட்டது. அவனுக்கு ஆத்மாவைவிட வேறான பிரயோஜன மில்லை. அவனிருக்கு மிடமாவது, தலையில் ஏழு துவாரங்களும், மல மூத்திரங்களை வெளிப்படுத்து மிரண்டு துவாரங்களும் ஆகிய ஒன்பது துவாரங்களோடு கூடிய சரீரமேயாம். இதற்கே ஒன்பது துவாரங்களுள்ள நகரமென்று பெயர். இந்த நகரத்திற்கு அதிகாரியாகிய தலைவன் ஆத்மாவாவன்; குடிகளாவன ஐம்புலன்களும், மனமும், புத்தியும், இவற்றின் விஷயங்களுமாம்; இக்குடிகளனைவரும் தங்களது பிரபுவாகிய ஆத்மாவுக்கு வெளிச்சங்களைத் தெரிவிக்கும் கரணங்களாம்; இவர்கள் செய்யும் வேலையெல்லாம் பிரபுவின் பிரயோஜனத்திற்காகவேயாம். இந்தப் பட்

ணத்திலவன்தானுக ஒரு காரியமுஞ்செய்பவனுமல்லன், செய்விப்பவனுமல்லன்; இப்படிச் சுகமாயிருக்கிறுன். தேகமே ஆத்மாவென்று நினைக்கும் அஜ்ஞன் (அறிவிலி) தேகத்தில் ஆத்மா இருக்கிருனென்று நினையான்].

[கர்த்ருத்துவம் (செய்யும் அதிகாரம்) ஆத்மாவினுடைய பழைய கர்மத்தினு லுண்டாகிய தேக சம்பந்தத்தினுல் விளைந்ததேயன்றி, ஸ்வரூப சித்தமாய் ஏற்பட்டதன் றென்னும் விவேகத்துடன் கூடிய மனமுள்ளவனுகி, எல்லாக் கர்மங்களையும் ஒன்பது துவாரங்களோடுகூடிய சரீரத்திற் சந்நியசித்து (=ஒழித்து=கர்த்திருத்துவத்தை நிறுத்தி), தான் தேகத்தை யொட்டி யிருக்கும் விஷயத்திற் பிரயத்னமின்றி, தேகத்தைக் கொண்டு செய்வியாதவனுய்ச் சுகமாயிருக்கிறுன்].

[இந்தச் சுலோகமுங்கூட 'ஸந்நியாஸ' சப்தார்த்தத்தை விவரிக்கின்றது. 'மனதினுல் ஒழித்து' என்பதனுல், அபிமானத்தியாகம் (அபிமானத்தை, பற்றை, விடுதல்) சொல்லப்படுகின்றது].

ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: ।
ந கர்மபலஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே ॥

௰௪. ஆத்மா கர்த்திருத்துவத்தைப் படைப்பதில்லை. உலகத்தின் கர்மங்களைப் படைப்பதில்லை. கர்மப்பயன்களின் சம்பந்தத்தைப்படைப்பதில்லை (உண்டாக்குவதில்லை). ஸ்வபாவமே பிரவர்த்திக்கின்றது.

[கர்மங்கள்=உலகத்திற்கு வேண்டிய ரதம், பானை, வீடு, மேடை முதலியன. கர்மப்பயன்களின் சம்பந்தம்=மேற்சொல்லிய பதார்த்தங்களைச் செய்தவனுக்கு அவற்றின் பயன்களோடு சம்பந்தம். ஸ்வபாவம்=அவித்யாரூபமான பிரகிருதியென்னும் மாயை].

[ஆத்மா (தேகத்திற்கு அதிபதி) நம்மை வேலை செய்யத் தூண்டுவதில்லை. நாம் காரியங்கள் செய்வது ஆன்மாவின் பிரேரேபணையினுலன்று. ஆத்மா ஒரு காரியத்தைச் செய்விப்பது மில்லை, செய்வது மில்லை, அதற்கும் காரியங்களின் பயனுக்கும் சம்பந்தமு

மில்லை. காரியங்களைச் செய்யும் நமக்கும் அந்தக் காரியங்களின் பய னுக்கும் சம்பந்தமுண்டாக்குவது ஆத்மாவன்று. ஆத்மா ஒன்றைச் செய்விப்பதுமில்லை, செய்வதுமில்லையெனின், மற்றுயார் எனின்,— காரியங்களைச்செய்வதும் செய்விப்பதும் ஸ்வபாவத்தின் வேலையாம். அந்த ஸ்வபாவத்திற்கு அவித்தையென்றும், பிரகிருதியென்றும், மாயையென்றும் பெயராம். எ-ஆம் அத். கச-ஆவது சுலோகத்தைப் பார்க்க].

[தேவதைகள், பசுக்கள், பக்ஷிகள், ஸ்தாவரங்கள் முதலியவை களே ஸ்வரூபமாயுள்ள பிரகிருதியுடன் கூடியிருக்கப்பட்ட இந்த உலகத்தில் அவ்வவற்றின் கர்த்துருத்துவத்தையும், கர்மங்களையும், அக்கர்மங்களினுலுண்டாகும் பயன்களுக்குச் சம்பந்தங்களையும், பிரபு, அஃதாவது, கர்மத்திற்கு வசப்படாமல் ஸ்வபாவமான ஸ்வ ரூபத்தோடு இருக்கப்பட்ட ஆத்மா, சிருஷ்டிப்பதில்லை. மற்று எப் படி எனின்—கர்த்துருத்துவம் முதலியவைகளெல்லாம், அநாதி காலமாயுண்டாயிருக்கப்பட்ட பூர்வ பூர்வ கர்மங்களினுல், தேவர் முதலிய ஸ்வரூபங்களாகிய பிரகிருதியின் ஸம்ஸர்க்கத்தினுற் (சம் பந்தத்தினுற்) செய்யப்பட்ட அந்தந்த ஆத்மாபிமானத்தினுல் விளை ந்த வாஸனைகளினுற் செய்யப்படுகின்றன. அவை ஆத்மஸ்வரூபத் தினுலுண்டானவை யல்லனவாம். ஸ்வபாம்=பிரகிருதி].

[வஸ்துவின் ஸ்திதியைக்கொண்டு பார்த்தாற் கர்த்துருத்துவம் இல்லையென்பது இந்தச் சுலோகத்தின் தாற்பரியமாம். ஜீவாத் மாவைப் பிரபுவென்பது ஜடங்களை யுத்தேசித்து].

நாத³த்தே கஸ்யசித் பாபம் நசைவ ஸுக்ருதம் விபு⁴: ।
அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ: ॥

யரு. ஆத்மா எவருடைய பாபத்தையும் ஸ்வீகரிப்ப (மேற்கொள்வ) தில்லை. புண்யத்தையும் ஸ்வீகரிப்பதில்லை; ஞானம் அஜ்ஞானத்தினுல் மூடப்பட்டிருக்கின்றது; அத னுற்பிராணிகள் மோகமடைகின்றுர்கள்.

['எவருடைய உம்': பக்தர்களுடையவும். ஆயின், என்ன உத்தேசத்துடன் பக்தர்கள் பூஜை, யோகம், தானம், ஹோமம் முதலிய நற்கர்மங்களைச் செய்கின்றார்களெனின், பகவான் சொல்லுகின்றார்: விவேகமானது அஜ்ஞானத்தினால் மூடப்பட்டிருக்கிறது; அதனால் ஸம்ஸாரத்திலுழலுகின்றவர்கள் (அவிவேகிகள்) மோகித்து "நான் செய்கின்றேன்," "நான் செய்விக்கின்றேன்," "நான் அநுபவிக்கின்றேன்," "நான் அனுபவிக்கச் செய்கின்றேன்" என்பது முதலாய் நினைக்கின்றார்கள். இதனாற் பக்தர்கள் செய்யும் பூஜை முதலிய நற்கர்மங்களும் அஜ்ஞானத்தினாலேயே யென்று ஏற்படுகின்றது]

சுலோகத்தில் 'ஆத்மா' என்பதற்கு 'விபு' என்னும் பதம் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. 'விபு': எங்கு மிருப்பவன். தேவதைகள் முதலிய சில தேகங்களில் மாத்திரமே ஆத்மா இருக்கிறதென்பதும் மானிடர் முதலிய தேகங்களிலில்லை யென்பது மில்லை யென்று தாற்பரியமாம்—எங்கும்நிறைந்திருக்கிறதென்பது பொருள். இந்த ஆத்மாவானது தனக்குச் சம்பந்தப்பட்டவர்களா யெண்ணப் படுகிறவர்களுடைய பாபத்தையும் போக்காது; தனக்கு விரோதிகளா யெண்ணப்படுபவர்களுடைய புண்யத்தையும் போக்காது. ஆகையால், ஆத்மா ஒருவனுக்குச் சம்பந்தியும் மற்றொருவனுக்கு விரோதியுமாதலில்லை].

['அஜ்ஞானம்'=ஞானத்திற்கு விரோதியாகிய பூர்வ பூர்வ கர்மம். இதனால் இந்த ஆத்மாவின்ஞானம் ஸங்கோசிக்க (குறுக்க)ப்பட்டது. இந்தக் கர்மத்தினாலேயே தேவர் முதலானோருடைய தேக சம்பந்தமும், தேவர் முதலானோருடைய தேகங்களில் ஆத்மாபிமானமென்னும் மோஹமு முண்டாகின்றன. அதனால், அப்படிப்பட்ட ஆத்மாபிமான வாஸனையும் அதற்குத் தகுந்த கர்ம வாஸனையு முண்டாகின்றன. வாசனையினால் விபரீதமான ஆத்மாபிமானமும் கர்மாரம்பமும் ஏற்படுகின்றன].

ஜ்ஞாநேந து தத³ஜ்ஞாநம் யேஷாம் நாஶிதமாத்மந꞉ ।
தேஷாமாதி³த்யவஜ்ஜ்ஞாநம் ப்ரகாஶயதி தத்பரம் ॥

௰௬. எந்த ஆன்மாக்களின் அஜ்ஞானமானது ஆத்மாவினுடைய ஞானத்தினால் நாசஞ்செய்யப்பட்டுளதோ, அவர்களுடைய ஞானமானது அந்தப் பர தத்துவத்தைச் சூரியன்போலப் பிரகாசிக்கச்செய்யும்.

[ஞானம்=ஆத்ம விஷயமான விவேகஞானம். சூழ்ந்து மூடிக்கொண்டிருப்பதனால் மோகத்தை யுண்டாக்குகின்ற எவருடைய அஜ்ஞானமானது ஆத்ம விஷயமான விவேக ஞானத்தினால் நசிக்கச் செய்யப்பட்டதோ, அவருடைய ஞானம், சூரியனைப்போல், எல்லா வஸ்துக்களையும் பிரகாசிக்கச்செய்கின்றது. அதுவே பரமார்த்த தத்துவமாம்].

[எந்த ஆத்மாக்களின் ஆத்மஞானத்தினால் கர்ம ஸஞ்சய ரூபமான அஜ்ஞானம் நசிக்கச்செய்யப்பட்டதோ, அவர்களுடைய இயல்பான, சிரேஷ்டமான, அந்த ஞானமானது ஸங்கோசமில்லாததாய், எல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்யும்].

ஈசுவரரை நேராய்த் தெரிந்து கொள்வதே—ஈசுவர விஷயமான பிரத்தியக்ஷஞானமே—அஜ்ஞானத்தைப்போக்குகின்றது].

தத்³பு³த்³த⁴யஸ்ததா³த்மாநஸ் தந்நிஷ்டா²ஸ்தத்பராயணா: ।
க³ச்ச²ந்த்யபுநராவ்ருத்திம் ஜ்ஞாநநிர்தூ⁴தகல்மஷா: ॥

௰௭. அதனிடத்துப் புத்தியுள்ளவர்களும், அதுவே ஆத்மாவென்று எண்ணுகிறவர்களும், அதனிடத்தே அபிநிவேச முள்ளவர்களும் (அதனிடத்தே மனத்தைச் சலனமில்லாமல் வைத்திருப்பவர்களும்), அதுவே பரம்கதியென்றிருப்பவர்களும், ஞானத்தினாற் பாபங்களைப் போக்கிக்கொண்டவர்களும் மறுபடி பிறவாமையை யடைகின்றார்கள்.

['அது'=பிரம்மம். இந்த லக்ஷணங்களுள்ள ஸந்நியாசிகள் மறுபடியுந் தேக சம்பந்த மடையார்; ஜன்மமெடார்; மோக்ஷமடைவார்].

['அது'=ஆத்மா. அந்த ஆத்ம விஷயமான மனமுள்ளவரும், அந்த அப்பியாசத்தி லாசையுள்ளவரும், அதுவே முக்கியமான பிரயோஜனமென்றெண்ணுவோரும்; எந்த அவஸ்தையிலுள்ள ஆத்மாவுக்குப் புனராவிருத்தி (மறுபடி வருதல், மறுபிறப்பு) இல்லையோ, அந்த ஆத்மாவை யடைவார்கள். மேற்கூறிய லக்ஷணங்களுள்ளவர்கள் ஸ்வஸ்வரூபத்தோடுகூடிய (தன்னுடைய உண்மையான ஸ்வரூபத்திலிருக்கிற) ஆத்மாவை யடைவார்கள்].

ஞானத்தினால் ஆத்மவிஷயமான அஜ்ஞானத்தைப் போக்கிக் கொண்டவர்கள் தத்துவத்தை (உண்மையை) எப்படிப் பார்க்கின்றார்கள்?—கேள்:

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑍇 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇 𑌗𑌵𑌿 𑌹𑌸𑍍𑌤𑌿𑌨𑌿 ।
𑌶𑍁𑌨𑌿 𑌚𑍈𑌵 𑌶𑍍𑌵𑌪𑌾𑌕𑍇 𑌚 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ॥

௧௮. வித்தையுடனும் விநயத்துடனும் கூடிய பிராமணனிடத்தும், பசுவினிடத்தும், யானையினிடத்தும், நாயினிடத்தும், நாயைப் புசிப்பவனிடத்தும் (சண்டாளனிடத்தும்) ஞானிகள் சமபுத்தியுள்ளவர்களா யிருப்பார்கள்.

['விநயம்'=உபசமம், சாந்தம்; உத்தம ஸம்ஸ்காரங்களினால் வரும் தன்மை. இங்கே சொல்லப்பட்ட பிராணிகளில், மிகவும் உத்கிருஷ்டமாய்ப் பிராமணனைச் சொன்னார்; அவன் உத்தம ஸம்ஸ்காரங்களினால் ஆத்ம தத்துவ பராயணனானவன், மிகுந்த ஸாத்விக குணமுள்ளவன். அந்த அந்தஸ்துக்குக் கீழ்ப்பட்டதாய்ப் பசு சொல்லப்பட்டது. அது ஸம்ஸ்காரங்க ளில்லாதது, மத்தியமமானது, ராஜஸ குணமுள்ளது. கேவல தாமஸகுண மதிகமாயுள்ள, ஸம்ஸ்காரங்களில்லாத, அதமமான யானை முதலியவை கடைசியாய்ச் சொல்லப்பட்டன. இவை யெல்லாவற்றிலும், புத்திசாலிகள் (பண்டிதர்கள்) ஒன்றையே, ஓர் ஆத்ம தத்துவத்தையே காண்பார்கள்; அந்த ஆத்ம தத்துவமானது ஸாத்விக ஸம்ஸ்காராதிகளின் ஸம்பர்க்கமில்லாததாயும் (முக்குணங்களுக்குச்சம்பந்தப்படாததாயும்) விகாரமில்லாததாயுமிருக்கின்றது].

[பிராமணன், பசு, யானை முதலிய விஷமாகாரங்கள் (உருவ வித்தியாசங்கள்) பிரகிருதியைச் சேர்ந்தவைகளே யன்றி, ஆத்மாவைச் சேர்ந்தவை யல்ல. ஆத்மாவானது ஞானைகஸ்வரூபமானதனால் (ஞானமாகிய ஒரே உருவமுள்ளதாதலால்) எல்லாவிடத்தும் சமமேயாம் என்று ஆத்ம ஞானிகள் நினைப்பார்கள்].

[பரமேசுவரருடைய ஸ்வரூபங்களெல்லாவற்றையும் எல்லாவிடத்தும் சமமாய்ப் பார்ப்பது அபரோக்ஷ (நேரான) ஞானத்திற்குச் சாதனமென்று இந்தச் சுலோகம் தெரிவிக்கின்றது].

ஆக்ஷேபணை.—நீர் சொல்லிய பண்டிதர்கள் பாபிகளாவர். அவருடைய அன்னத்தைப் புசிக்கக்கூடாது. ஏனெனின், விதி இவ்வாறிருக்கின்றது:

நச்வபோஜ்யாந்நாஸ்தே தோஷவந்த:

ஸமாஸமாப்யாம் விஷமஸமே பூஜாத—(கௌதமஸ்மிருதி, ௰எ, உ௰).

"சமானமானவர்களை வேறுவிதமாகவும், சமானமில்லாது, தாழ்மையானவர்களைத் தனக்குச் சமமாகவும் பூஜிக்கப்பட்ட, மரியாதை செய்யப்பட்ட இடத்தில் அன்னமுண்ணலாகாது."

சமாதானம்.—அவர்கள்பாபிகளாகார்கள். எங்ஙனமெனின்,—

𑌇𑌹𑍈𑌵 𑌤𑍈𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌸𑌰𑍍𑌗𑍋
𑌯𑍇𑌷𑌾𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌮𑌨𑌃 ।
𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌂 𑌹𑌿 𑌸𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ॥

௰௯. யாருடைய மனம், எல்லாவற்றினிடத்தும், சமதிருஷ்டி யடைந்திருக்கிறதோ, அவர்களால் இவ் வுலகத்திலேயே, பிறவி (த்துன்பம்) ஜயிக்கப்படுகின்றது பிரம்மமானது தோஷமில்லாததும், சமமானது மன்றோ? ஆகையால் அவர்கள் பிரம்மத்தினிடத்தே உள்ளவர்களாவர்.

[பிரம்மமொன்றையே பார்ப்பவர்களாயும், எல்லாப் பூதங்களி லும் பிரம்மம் சமமாகவே இருக்கின்றதென்னும் நினைவு கொஞ்சங் கூடச் சலியாத மனத்தை (அந்தக்கரணத்தை) யுடையவர்களாயும் இருக்கிற ஞானிகள் பூமியின்மீது உயிர்த்திருக்கும்பொழுதே பிற வித் துன்பத்தை ஜயிக்கின்றார்கள். நாய் தின்னும் புலையர்கள் முத லானோருடைய அசுத்தமான சரீரங்களிற் பிரம்மமானது அவர்க ளது அசுத்தத்தினால் தோஷப்பட்டதுபோல் மூடர்களுக்குத்தோற் றியபோதிலும், பிரம்மமானது குண பேதங்களினால் உண்டாகும் பேதங்க ளில்லாததாய்த் தோஷ மற்றதாய்ச் சுத்தமா யிருக்கின் றது. பிரம்மம் நிர்க்குணமாதலின் அதற்கு ஸ்வகுணபேத (சொந்த மாகியகுணத்திற் பேத) மில்லை. ஆசை (காமம்) முதலானவைகள் தேகமாகிய க்ஷேத்திரத்தின் குணங்களேயன்றி ஆத்மா (சைதன் யம்) வினுடையனவல்லவென்று ௰௩-ஆவது அத். ௬-ஆவது சுலோ கத்திலும், ஆத்மாவானது ஆதியில்லாதது (பிறப்பில்லாதது), அதற் குக் குணங்களில்லை யென்று ௰௩-ஆவது அத். ௩௧-ஆவது சுலோகத் திலும் பகவான் சொல்லுகின்றார். ஆத்மாவினிடத்துப் பேதங்களைக் காட்டுவதற்குக் கடைசிக்குறிகளெனப்பட்ட அந்த்ய விசேஷங்களு மில்லை. ஏனெனின், ஒவ்வொரு சரீரத்திலும் அவையிருக்கின்றன வென்பதற்கு நிதர்சனமில்லை. ஆகையாற் பிரம்மம் சமமாகவும் ஒன் றாகவுமே யிருக்கின்றது. இந்தக் காரணங்களினால் ஞானிகள் (பண் டிதர்கள்) பிரம்மத்தினிடத்தே இருக்கின்றார்கள்.

வைசேஷிக மதப்பிரகாரம் அந்த்ய விசேஷ மென்பது ஒரு நித்திய வஸ்துவினிடத்து, அதனை மற்றொரு நித்திய வஸ்துவினி ன்று பகுத்துக்காட்டுவதற்காக, இருக்கப்பட்ட ஒருவிதமான லக்ஷ ணமாம்; அந்தலக்ஷணம் இத்தன்மையதென்று எடுத்துச் சொல்ல முடியாததாம். வேறுவேறாய் ஒவ்வொரு நித்திய வஸ்துவுக்கும் அத னைக்குறித்துக்காட்டுவதற்காக அமைந்திருக்கும் லக்ஷணமாம். வேறு விதங்களால் தெரிந்திருக்கப்பட்ட ஒருவித்தியாசத்திற்குக் காரணம் காட்டும் நிமித்தமாக இந்த 'அந்த்ய விசேஷ' மென்னும் லக்ஷணம் ஊகிக்கப்படுகின்றது. நித்திய வஸ்துக்களாவன :—பிருதிவி (மண்), அப்பு(ஜலம்), தேயு (சோதி), வாயு, ஆகாசம் (ஈதர் Ether), காலம்,

தேசம் (Space), ஆத்மா, மனம் ஆகிய இவைகளினுடைய அணுக்களாம். ஆத்மாவினிடத்து அந்த்ய விசேஷங்கள், அது வித்தியாசமாய்க்காணப்படுவதனல், ஊகிக்கப்படுகின்றன. இதை வேதாந்திகள் ஸ்தாபித மானதாக ஒப்புக்கொள்ளார். சரீரவித்தியாசத்தினல் ஆத்மாவில் வித்தியாச மிருக்கிறதென்று சொல்லக்கூடாது; ஏனெனின், ஒரு யோகியானவன் ஒரே காலத்திற் பலசரீரங்களைத் தரிக்க வல்லவனுயிருக்கின்ருன்.

தேகம் முதலானவைகளின் தொகுதியே ஆத்மாவென்னும் அபிமானமும், அதுவே "நான்" என்னும் அகங்காரமும் ஞானிகளுக் கில்லாததனல் அவர்களுக்குச் சரீரங்களின் தோஷங்கள் கொஞ்சங்கூடச் சம்பந்தப்படா. தோஷவாசனையும் அவர்களை யணுகாது. மேலேயுதாகரிக்கப்பட்ட கௌதம சூத்திரமானது, சரீரம் முதலியவற்றின் தொகுதியே ஆத்மாவென்று அபிமானங்கொண்டு அகங்கார மடைந்திருப்பவர்களுக்கு மாத்திரமே உரித்தாகும்; ஏனெனின், அது பூஜிப்பவர்களையும் பூஜிக்கப்படுபவர்களையுங் குறிக்கின்றது. பூஜிப்பதிலும், தானம் கொடுப்பதிலும், சில குண விசேஷங்கள் கவனிக்கப்படுகின்றன; பிரம்மஞான முள்ளவர்களுக்கும், ஷடங்கங்களெனப்படும் ஆறுசாஸ்திரங்களில் தேர்ந்தவர்களுக்கும், நான்கு வேதங்களிற் சமர்த்தர்களுக்கும், இன்னும் இவை போன்ற யோக்கியதை யுள்ளவர்களுக்கும் அவர்களுடைய குண விசேஷங்களுக்காகப் பூஜை செய்யப்படுகின்றது, தானம் கொடுக்கப்படுகின்றது. ஆனல், பிரம்மமோவெனின், அது சர்வ குணதோஷ சம்பந்த மில்லாததா யிருக்கின்றது; நற்குணமுமில்லை, தோஷமு மில்லை, ஆகையால் ஞானிகள் 'பிரம்மத்தினிடத்து இருக்கிருர்கள்' என்று சொல்லப்பட்டது. இஃதன்றியும், மேலே ஆக்ஷேபணைக்கு ஆதாரமாகக் காட்டப்பட்ட கௌதம சூத்திரம் கர்மவிஷயமானது; இங்கு நாம் ௰௩-ஆவது சுலோகம் முதல் (இந்த அத்தியாயத்தின் கடைசிவரைக்கும்) பிரஸ்தாபிப்பது ஸர்வகர்மஸந்நியாஸயோக விஷயமாகும்].

['இவ்வுலகத்திலேயே': சாதனத்தை யாசரிக்குந்தசை (ஸ்திதி) யிலேயே. 'பிறவி': ஸம்ஸாரம். பிரகிருதியின் சம்பந்தமென்னுந்தோ

ஷமில்லாமற் போவதனாற் சமமாயிருக்கும் ஆத்மவஸ்துவன்றே பிரம்மமாகும்? ஆத்மசமத்துவத்திலிருப்பவர்களானல், பிரம்மத்தினிடத் திருப்பவர்களேயாவர். பிரம்மத்தினிடத்திருப்பதன்றே ஸம்ஸார ஜயமாகும்? ஆன்மாக்கள் ஞானைக ஸ்வரூபிகள் (அனைவரும் ஞான ஸ்வரூபிகள், ஒரே ஸ்வரூபமுள்ளவைகள்) என்னும் சமத்துவத்தையே நினைத்துக் கொண்டிருப்பவர்கள் முக்தர்களே என்று அர்த்தமாம்].

[இதற்குக் கீழ்ச் சுலோகத்திற் சொல்லிய சமத்துவத்தையே இந்தச் சுலோகம் துதிக்கின்றது].

ஆத்மாவாகிய பிரம்மமானது தோஷங்களில்லாததாயும் சமமாயு மிருக்கின்றது. ஆகையால்,

ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய
நோத்விஜேத் ப்ராப்ய சாப்ரியம் ।
ஸ்திரபுத்திரஸம்மூடோ
ப்ரஹ்மவித் ப்ரஹ்மணி ஸ்தித꞉ ॥

உ௰. நிலையான புத்தியுள்ளவனும், மோக மில்லாதவனும், பிர்ம்மஞான முள்ளவனும், பிரம்மத்தினிடத்தே இருப்பவனும் (பிரம்மமா யிருப்பவனும்) இஷ்டமானதை யடைந்து சந்தோஷிக்கக்கூடாது. இஷ்டமில்லாததை யடைவதனாற் பயப்படவுங் கூடாது.

['நிலையான புத்தியுள்ளவன்': எல்லாப் பிராணிகளிலுமுள்ள ஆத்மாஒருவனே, அவன் சமமானவன், தோஷமில்லாதவன் என்னும்நிச்சயமுள்ளவன். 'பிரம்மத்தினிடத் திருப்பவன்': கர்மங்களைச் செய்யாதவன்; எல்லாக்கர்மங்களையுஞ் சந்நியசித்த (விட்ட)வன்.

தேகமே ஆத்மா வென்று நம்பிக்கொண்டிருக்கிறவர்களுக்குப் பிரியமும் அப்பிரியமும் சந்தோஷத்தையுந் துக்கத்தையுமுண்டாக்கக்கூடும். கேவலம் ஆத்மாவையே பார்க்கிறவனுக்கு அப்படிப்பட்ட

சந்தோஷமும் துக்கமுமுண்டாகமாட்டா; ஏனெனின், ஆத்மாவுக்கு ஒருபொழுதும் பிரியமுமில்லை அப்பிரியமுமில்லை].

[ஆத்மாவினிடத்து ஸ்திரமான புத்தியுள்ளவன் 'நிலையான புத்தியுள்ளவ' னவன். 'மோகம்'=நிலையில்லாத சரீரத்தையும் நிலையான ஆத்மாவையுமொன்றெனப்பாவிப்பது. அஃதில்லாதவன் 'மோகமில்லாதவன்.' 'பிரம்மஞான முள்ளவன்'—'பிரம்மவித்'=ஆத்மாவின் உண்மையை யறிந்தவன். 'பிரம்மத்தினிடத்தே யிருப்பவன்'=அந்தஞானத்தையே (பிரம்மத்தின் உண்மையான ஞானத்தையே) அப்பியாசஞ் செய்துகொண்டிருப்பவன். ஒவ்வொரு சரீரத்திலிருக்கும்பொழுது பழைய கர்மவாசனையை யநுசரித்துச் சில விஷயங்கள் பிரியமாயும், சில பிரியமில்லாமலு மிருக்கும். ஸ்திரமில்லாத இந்த இஷ்டாநிஷ்டங்களை யடைந்து சந்தோஷத்தையாவது பயத்தையாவது கொள்ளக்கூடாது].

[இந்த அத்தியாயத்தில் இனிவரும் சுலோகங்களினால் ஸந்நியாஸம், யோகம், ஞானம் என்கிற மூன்றும் மொத்தமாக விவரிக்கப் படுகின்றன].

அன்றியும், பிரம்மத்தினிடத் திருந்துகொண்டு,

ஸ்ரீாஹ்யஸ்பெர்ஹ்ஷஸக்தாத்மா விந்தத்யாத்மநியத்ஸுகம்।
ஸப்ரஹ்மயோகயுக்தாத்மா ஸுகமக்ஷயமஶ்நுதே ॥

உக. வெளிவிஷயங்களிற் பற்றில்லாத அந்தக்கரண முள்ளவனாகி அவன் ஆத்மாவினிடத்து எந்தச்சுகமுண்டோ அந்தச்சுகத்தை யடைகின்றான்; பிரம்மத்தினிடத்துச் சமாதியுடன் கூடிய அந்தக்கரண முள்ளவனாகி, அவன் ஒருபொழுதுங் குன்றாத சுகத்தை யடைகின்றான்.

[ஆத்மாவினிடத்துக் குறைவில்லாச் சுகத்தையடைய விரும்புகிறவன் க்ஷணகாலமாத்திரமாயிருக்கிற வெளிவிஷய சுகங்களினின்று இந்திரியங்களைத் திருப்பி உள்ளிழுக்கவேண்டும்].

['வெளி விஷயங்களிற் பற்று'=ஆத்மாவைவிட வேறான விஷயங்களின் அநுபவம். எவன் வெளி விஷயாநுபவங்களில் ஸங்கமில்

லாத மனமுள்ளவனுகி, ஆத்மாவினிடத்தே சுகத்தையடைகின்ருனே அவன் பிரகிருதியப்பியாசத்தைவிட்டுப் பிரம்மாப்பியாசத்துடன்கூடிய மனமுள்ளவனுகிப் பிரம்மாநுபவ ரூபமான அக்ஷய (குறைவில்லாத) சுகத்தையடைகின்ருன்].

[இந்தச்சுலோகத்தினுல் யோகத்தின் ஆதிக்யம் (விசேஷத்துவம்) வெளியிடப்படுகின்றது. காமம் (விருப்பம்) இல்லாத ஆத்மாவினிடத்து எவன் சுகத்தை யடைகின்ருனே, அவனே பிரம்மத்தைக் குறித்த யோகத்துடன் (தியான முதலியவைகளுடன்) கூடிய ஆத்மாவுள்ளவனுகி அந்த அக்ஷய சுகத்தையடைகின்ருன். தியானம் முதலானவைகளுடன் கூடியவனுக்கே குறைவில்லாத ஆத்ம சுகமுண்டாகும்; வேறெவ்விதத்திலு முண்டாகாது].

இன்னு மிந்தக்காரணத்தினுலும் அவன் இந்திரியங்களை வெளி விஷயங்களினின்று நிவர்த்திக்கவேண்டும்.

யெஹிஸம்ஸ்பர்ஶஜாபோகா: து:கயோநய ஏவதே ।
ஆத்யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே புத: ॥

உஉ. விஷயங்களும் இந்திரியங்களும் சம்பந்தப்படுவதனுலுண்டாகிற அநுபவங்கள் எவையோ அவை துக்கத்திற்குக் காரணங்களேயல்லவோ? அவை முதலுங் கடையுமுள்ளவை. (சொற்பகால மிருப்பவைகளாம்). ஓ குந்தீ புத்திரா (அர்ச்சுனு)! ஞானமுள்ளவன் அவைகளிற் பிரீதி வையான்.

[இந்திரியங்களும் இந்திரிய விஷயங்களும் சம்பந்தப்படுவதனுலுண்டாகும் போகங்கள் துக்க காரணங்களேயாம்; ஏனெனின், அந்தப்போகங்கள் அவித்தையினுலுண்டாயின. நமக்குச் சம்பவிக்கிற எல்லாத் துக்கங்களும் அந்தப்போகங்களினின்றே விளைவனவென்றுங் காண்கிறேம். இவ்வுலகத்திலெப்படியோ அப்படியே பரலோகத்திலும்—'காரணங்களே' என்பதிலுள்ள ஏகாரத்தினுலறிக. சமுசாரத்திற் சுகமென்பதன் வாசனை மாத்திரங் கூட இல்லையென்று

தெரிந்து கொண்டு, ஒருவன் இந்திரிய விஷயங்களென்னுங் கான
லினின்று இந்திரியங்களை நிவர்த்திக்கவேண்டும். அந்தப்போகங்
கள் துக்க முண்டாக்குவனவேயன்றி, அவைகளுக் கொருமுதலும்
(ஆதியும்) கடையும் (முடிவும்) இருக்கின்றன. ஓரிந்திரியமானது
தனது விஷயத்துடன் சம்பந்தப்படுவது (ஸம்யோகப்படுவது) அந்
தப்போகத்திற்கு ஆதியாகும், இந்திரியம் விஷயத்தினின்று பிரிவது
(வியோகப்படுவது) அதற்கு முடிவாகும். போகங்கள் அவற்றின்
ஆதிக்கும் அந்தத்திற்கு மிடையிலுள்ள நிமிஷ மாத்திரத்திலுண்
டாகிற அநித்தியமானவைகள். பரமார்த்த தத்துவத்தை யறிந்த
விவேகியானவன் இவைகளிற் சந்தோஷமடையான். பசு முதலான
வைகளின் மிருகத்தன்மையையுடைய மூழமூடர்கள் மாத்திரமே
இந்திரிய விஷயங்களில் ஆனந்திப்பார்கள்].

அன்றியும், ச்ரேயோமார்க்கத்திற்கு (நற்கதிக்கு) த்தடையா
கக் குறுக்கே நிற்கின்ற சத்துருவான தோஷமொன்றுளது; அது
தீத்தன்மையது; அதனுடன் போராடுவது வெகு கஷ்டம்; எல்லா
அநர்த்தங்களும் அதனாலேயே உண்டாகின்றன; அதனை ஒதுக்கித்
தள்ளுவது வெகு பிரயாசையான காரியம்; அந்தச் சத்துருவைத்
தூரத்தியடிக்கும் பொருட்டு பலமான பிரயத்னம் பண்ணவேண்டு
மென்று பகவான் சொல்லுகின்றார்.

ஶக்நோதீஹைவ ய: ஸோடும் ப்ராக் ஶரீரவிமோக்ஷணாத் ।
காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர: ॥

௨௩. எவன் இங்கேயே, சரீரத்தை விடுவதற்கு முன்
னரே, காமத்தினாலும் க்ரோதத்தினாலும் உண்டாகிற
வேகத்தை (ஆவேசத்தை)ச்சகித்துக் கொள்ளச்சமர்த்த
னாகின்றானோ, அந்த மனிதன் யோகமுள்ளவன்; அவன் சுக
முள்ளவன்.

[‘இங்கேயே’: உயிர்த்திருக்கும்பொழுதே. ‘சரீரத்தை விடுவ
தற்கு முன்னரே’: மரணத்திற்கு முன்னரே. மரணத்தை வரை
யாகக் குறித்ததனால், உயிர்த்திருக்குமளவும் காமக்குரோதங்களின்
வேகம் தவறாமல் வருமென்றும், அதற்குக் காரணங்கள் எண்ணித்

தொலையாவென்றும், மரண பரியந்தம் (சாகும் வரை) அவற்றை யடக்கிவிட்டோமென்று திடமாய் நம்பக்கூடாதென்று பகவான் போதிக்கின்றார். 'காமம்:' இனிமையான விஷயம் இந்திரிய கோசரமாகும்பொழுதும் (புலன்களுக்கு அகப்படும்பொழுதும்) அதனைக் கேட்கும்பொழுதும் நினைக்கும்பொழுதும் உண்டாகும் ஆசை. 'க்ரோதம்:' தனக்குப் பிரியமில்லாத விஷயங்களை யநுபவிக்கும் பொழுதும் கேட்கும்பொழுதும் நினைக்கும்பொழுதும் உண்டாகும் த்வேஷம் (வெறுப்பு). இவற்றின் 'வேகம்' ஆவது அந்தக்கரணத்தின் சஞ்சலம் (கலக்கம்) காம வேகத்திற்கு மயிர்க் கூச்சல், கண் மலர்ச்சி, முகக் கிளர்ச்சி முதலியன குறிகளாம். க்ரோத வேகத்தின் குறிகளாவன,—நடுக்குதல், வியர்த்தல், உதட்டைக் கடித்தல், கண் சிவத்தல் முதலியனவாம். காமக் க்ரோதங்களின் வேகத்தைச் சகித்துக்கொண்டு, அவற்றிற்கு இடங் கொடாமல் வெற்றி கொள்பவனே யோகி; இவ்வுலகிற் சுகி அவனே].

['இங்கேயே:' சாதனங்களை யநுஷ்டிப்பதற்கு அநுகூலமான பருவத்திலேயே. 'யோகமுள்ளவன் (யுக்தன்):' ஆத்மாநுபவத்திற்குத் தகுந்தவன். 'சுகமுள்ளவன்:' சரீரத்தை விட்டபிறகு ஆத்மாநுபவமொன்றனையே சுகமாகக்கொண்டவன்].

[இந்தச் சுலோகம் காம போகங்களை விட்டொழிப்பதைப்பற்றிச் சொல்லுகின்றது. 'சரீரத்தை விடுவதற்கு முன்னரே' என்றதனால், மானிட தேகத்திற் காமக் குரோதங்களின் வேகத்தைச் சகித்து (தாங்கி) வெல்வது சாத்திய (இயலு) மென்றும் மற்றெந்த தேகத்திலும் சாத்தியமில்லையென்றும் அர்த்தமாயிற்று. பிரஹ்ம லோகம் முதலியன காமத்தை வென்றவர்க்கே கிட்டும்].

எத்தன்மை யுள்ளவன் பிரஹ்மத்தினிடத் திருந்துகொண்டு பிரஹ்மத்தை யடைகிறானெனின்,—பகவான் சொல்லுகிறார்:—

𑌯𑍋𑌽𑌨𑍍𑌤𑌃𑌸𑍁𑌖𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌰𑌾𑌮𑌸𑍍
𑌤𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍇𑌵 𑌯𑌃।
𑌸 𑌯𑍋𑌗𑍀 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌂
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑍋𑌽𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿॥

உச. எவன் ஆத்மாவினிடத்தே சுகமுடையவனே, ஆத்மாவினிடத்தே ரமிக்கிறவனே, அதுபோல ஆத்மாவினிடத்தே பிரகாசிக்கிறவனே,—அந்த யோகி பிரஹ்மமே தானாகி பிரஹ்மானந்தத்தை யடைகிறான்.

[அவன் உலகில் உயிர்த்திருக்கும்பொழுதே மோக்ஷமடைகிறான்].

[எவன் ஆத்மாநுபவ மொன்றனையே சுக மெனக் கொண்டவனே, ஆத்மாவொன்றனையே தோட்டமாக்கொண்டவனே, அஃதாவது, ஆத்மாவே தனது குணங்களினாற் சுகத்தை யபிவிருத்தி செய்விப்பதாய்க் கொண்டவனே,—அவன் பிரஹ்மானந்த யடைவான். 'பிரஹ்மாந்த:' பிரஹ்ம நிர்வாணம், ஆத்மாநுபவ சுகம்]

[இனி ஞானியின் லக்ஷணம் விவரித்துச் சொல்லப்படுகின்றது. 'ரமிக்கிறவனே (ராம:):' 'ஆராமம்' என்பது காட்சி முதலியவற்றால் (பரதர்சனாதிகளினால்) உண்டாகும் சுகம். சுகமாவது உபத்திரவம் நீங்குவதனால் உண்டாவதாம். இங்கு ஆராமம் பரமாத்மாவைத் தரிசித்தல் முதலியவற்றால் உண்டாகியது. பரமாத்மா தனக்குத்தானே பிரகாசிக்கிறவர். அவரிடத்து இருப்பவன் ஆத்மாவினிடத்தே பிரகாசிக்கிறவன் ஆவான். (அந்தர்ஜ்யோதி:—உட்புறத்துப் பிரகாசிப்பவன்). அஸம்பிரஜ்ஞாத ஸமாதியிலிருப்பவனுக்கு வெளி விஷயங்கள் தோற்றா; தோற்றினும் அவனைக் காரியத்திற் பிரவேசிக்கச் செய்யமாட்டா. ஆகையால் அவன் உட்புறத்துப் பிரகாசிப்பவனாவான். அவன் பிரஹ்மத்தினிடத்திருப்பவனாதலின் உட்புறத்துச் சுகங்களை (பிரஹ்மானந்தத்தை) யனுபவிக்கக் கூடியவனாயினான்].

[ஆத்மாவினிடத்தே: உட்புறத்தில், வெளிநோக்கின்றி; உலக சம்பந்தமான வெளிவிஷயங்களி லல்லாமல். ஆத்மாவினிடத்தே பிரகாசிக்கிறவன்: ஆத்மஞானத்தினாற் பிரகாசிக்கிறவன்].

லபந்தே ப்ரஹ்மநிர்வாணம்ருஷய: க்ஷீணகல்மஷா: |
சிந்நத்வைதா யதாத்மாந: ஸர்வபூதஹிதே ரதா: ||

𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌮𑍁𑌨𑌿𑌰𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑌰𑌾𑌯𑌣𑌃।
𑌵𑌿𑌗𑌤𑍇𑌚𑍍𑌛𑌾𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑍋 𑌯𑌃 𑌸𑌦𑌾 𑌮𑍁𑌕𑍍𑌤 𑌏𑌵 𑌸𑌃॥

உஎ-அ. வெளியுகை விஷயங்களைத் தனக்கு வெளியிலேயே நிறுத்தி, கண்களின் பார்வையைப் புருவங்களினிடையில் நிறுத்தி, பிராணனையும் அபானனையும் ஸமமாக்கி மூக்கின் நடுவிற் சஞ்சரிக்குமாறு செய்து, வெளியிந்திரியங்களையும் (ஐம்புலன்களையும்) மனத்தையும் புத்தியையும் அடக்கித் தன் சுவாதீனப்படுத்திக்கொண்டு, ஆசையும் பயமும் கோபமுமில்லாதவனாய், மோக்ஷத்தையே முக்கியமான பேறாய்க் கொண்டிருக்கிற முனியானவன் எப்பொழுதும் முக்தனே (துன்பத்தினின்றும் விடப்பட்டவனே) யாவன்.

[சப்தம் முதலிய விஷயங்கள் ச்ரோத்திரம் (கேள்வி) முதலிய புலன்களின் வழியே மனத்திற் சேர்கின்றன. இந்தச் சப்தம் முதலிய வெளி விஷயங்களைப்பற்றி ஒருவன் நினையாமலே இருப்பானாயின், அவன் அவைகளைத் தனக்கு வெளியே நிறுத்தினவனாவன். மனனம் (தியானம்) செய்யுந் தன்மையால் முனியெனப் பெயர் வாய்ந்தவன் சந்நியாசி, அஃதாவது, உலகத்தை யொழித்தவன். அவன் மோக்ஷத்தையே பெரும்பேறாய் நாடவேண்டும். 'முக்தனே யாவன்': மோக்ஷமடைவதற்கு அவன் வேறொன்றுஞ் செய்யவேண்டியதில்லை; தியானயோகத்தில் அவன் தியானிக்கத்தக்கது வேறொன்றுமில்லை].

['விஷயங்களை' (ஸ்பரிசங்களை): சப்தம்முதலாகிய விஷயங்களின் சம்பந்தங்களை. 'வெளியிலே நிறுத்தி:' ஐம்புலன்களின் வியாபாரங்களை யொழித்து. 'பிராணன்:' மூக்கின் வழியாய் விடப்படும் சுவாஸம்; 'அபானன்;' மூக்கின்வழியாய் உள்ளே இழுக்கப்படும் சுவாஸம்; இவை யிரண்டையும் ஸமமாக்கி, ஒன்றைவிட மற்றொன்று அதிகப்படாமற் செய்துகொண்டு; அவையோடும் போது மூக்குத்துவாரங்களின் பக்கங்களிலேனும், கீழ்ப்புறத்தேனும், மேற்புறத்தேனும் தாக்காமல் நடுவே செல்லுமாறு சாதித்துக்கொண்டு.

'இந்திரியங்களையும் மனத்தையும் புத்தியையும் அடக்கி:' ஆத்மாவைத் தரிசிப்பதற்குத் தவிர ஏனையவற்றில் அவைகளைச் செலுத்தாமல். 'முனி:' ஆத்மாவைத் தரிசிப்பவன். அவன் சாதனங்களைச் சாதித்துவரும்பொழுதுகூட, சாதித்தபிறகு இருப்பதுபோல, முக்தனே].

[இனி தியானத்தின் முறை கூறப்படுகின்றது. சுரோத்திரம் முதலான இந்திரியங்களை யடக்குவதனால் வெளியுலகத்து விஷயங்களின் சம்பந்தங்களையொழித்து; பிராணாபானங்களைச் சமமாக்கி—கும்பகத்திலிருந்து].

['கண்களின் பார்வையைப் புருவங்களின் இடையில் நிறுத்தி:' ௬-ஆம் அத். ௧௩-ஆம் சுலோகத்தில் முனியானவன் கண்களின் பார்வையை மூக்கு நுனியில் நிறுத்தவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விரண்டு விதமான அப்பியாஸங்களின் உத்தேசமும் ஒன்றேயாம், அஃதாது, பார்வையை உள் நோக்கச் செய்தல், அதனால் எண்ணங்களை உலகத்து விஷயங்களினின்று இழுத்தல், இந்த உத்தேசம் நிறைவேறவேண்டுமாயின் அவன் கண்களை மூடக்கூடாது, மூடினால் தூக்கம் வரும், தியானம் இல்லாமற்போம். 'பிராணனையும் அபானனையும் ஸமமாக்கி:' ௪-ஆம் அத். ௨௯-ஆம் சுலோகத்தைப் பார்க்க. 'எப்பொழுதும் முக்தனே' அஃதாவது, அவன் உயிர்த்திருக்கும்பொழுதுங்கூட. இது ஜீவன் முக்தி தசையைக் குறிக்கின்றது. ஸாங்கிய மதத்தின்படியும் யோக மதத்தின்படியும் இரண்டு விதமான முக்தியுண்டு. முதலாவது சொல்லும் முக்தியே உண்மையான முக்தியாம். அது பக்தி முதலிய குணங்கள் நிறைந்த முனியானவன் ஸ்தூல தேகத்தை விட்ட பிறகு அவனுக்கு ஸித்திக்கும்; அப்பொழுது அவனுடைய ஜீவாத்மாவானது பரமாத்மாவினிடத்து ஐக்கியமாகின்றது; மறு ஜன்மமெடுப்பதில்லை. ஜீவன் முக்தியெனப்படுவது உண்மையான முக்தியாகாது. என்னையெனின், அதையடைந்த முனிக்குப் பிரகிருதி வாழ்க்கை இன்னுமிருக்கின்றது; ஆனால் அவனுடைய ஜீவாத்மா தேகத்தினின்று பிரிந்து அபிமானம் சிறிதுமின்றி அதனுடன் சற்றும் பற்றில்லாமலிருக்கின்றது; பரமாத்மாவுடன் ஐக்கியமானதற்கொப்பாக விள

குகின்றது; தேகத்தினின்று அவ்வளவு வேறாய்ப் பிரிந்திருக்கிறது. பரமாத்மாவினிடத்து அவனுடைய ஆத்மா பூர்த்தியாய் ஐக்கியமாய் விடுகிறதென்று கபிலர் சொல்லுகிறார்; ஜீவன் முக்தனுடைய பிரகிருதிவாழ்க்கையை அவர் குயவனுடைய சக்கரத்திற்கு ஒப்பிட்டுச் சொல்லுகிறார். பானைசெய்து ஆனபிறகுங்கூடச் சிறிது நேரம் அந்தச் சக்கரம் சுழல்கின்றதன்றோ? அதுபோல, ஜீவாத்மா தேகத்துடன் சம்பந்தப்பட்டிருப்பதுபோல அவனுடைய தேகயாத்திரை நடக்கின்றது என்பது அவருடைய கொள்கை. என்னையெனின், அந்த ஜன்மத்திற்குரிய இயற்கை வேகம் (பிராரப்தம்) இன்னும் தீரவில்லை. இதே விஷயத்தைப்பற்றி பதஞ்சலி யானவர் சொல்லுமிடத்து, ஜீவன்முக்தனுடைய ஆத்மாவானது பரமாத்மாவுடன் பூர்த்தியாய் ஐக்கியமாவதில்லை யென்று அவர் கூறுகிறார்; அவ்வளவு உயர்ந்தநிலைமையை அவன் அடைந்தும் அந்த ஜீவன் முக்ததசையிலிருந்து கீழிழிந்து தாழ்மையான ஸ்திதிக்குவரக் கூடுமென்றும், இந்த பயம் அவனுக்கு எப்பொழுது மிருக்கிறதென்றும் அவர் சொல்லுகிறார். இதுவுமன்றி, உயர்பதவியை நாடுகிற முனியைக்கண்டு ஸ்வர்க்கலோகவாஸிகள் முதலான தேவதைகள் அசூயைப்பட்டு ரம்பை முதலான அழகிய ஸ்திரீகளை யனுப்பி அவர்களுடைய தவத்தைக் கெடுப்பதற்கு எப்பொழுதும் பிரயத்னப்பட்டுக்கொண் டிருப்பார்களென்றும் பதஞ்சலி சொல்லுகிறார். வேதாந்த மதத்தின்படி மூன்றாவதான இன்னுமொருவகை முக்தி ஏற்பட்டது; ஆனால் இது பூரணமான முக்தியன்று; ஜீவாத்மாவானது பிரகிருதி சம்பந்தப்பட்ட உத்தமமான உலகத்தை, அதாவது, நான் முகப்பிரம்மலோகத்தை, அடைகின்றது. இதுவேயிந்த ஜன்மத்தில் ஸாத்தியமென்பது வேதாந்த மதத்தின் அபிப்பிராயம் போலும்].

இவ்விதமாக மனத்தை ஒரு நிலையில் நிறுத்திக்கொண்டவன் அறிந்துகொள்ளவேண்டிய தென்னை? தியானயோகத்தில் அவன் தியானிக்கத்தக்கது யாது?

ஸ்ரீ॥ ... 

[illegible]

உகூ. யஜ்ஞங்களையும் தவங்களையும் அநுபவிக்கிறவனாகவும், எல்லா உலங்களுக்கும் பெரிய ஈசுவரனாகவும், எல்லாப்பூதங்களுக்கும் நண்பனாகவும் என்னைத்தெரிந்து கொண்டு சாந்தியை (மோக்ஷத்தை) அடைகிறான்.

['அநுபவிக்கிறவன்' யஜ்ஞாதிகளைச் செய்யும் கர்த்தாவும் நானே, அவைகளினால் பிரார்த்திக்கப்படும் தேவதையும் நானே; ஆகவே, யஜ்ஞாதிகளின் கர்த்தாவாகவும் அவற்றிற்கு அதிதேவதையாகவும் அநுபவிக்கிற நாராயணன் நானே. 'நண்பன்' பதில்உபகாரத்தை விரும்பாமல் உபகாரம் செய்கிறவன். நான்பக்தர்களுடைய இருதயத்தில் வஸிப்பதனால் அவர்கள் செய்யுங்காரியங்களுக்கும் அவற்றின்பயன்களுக்கும் மேலதிகாரியாயிருக்கிறேன் (அத்தியக்ஷனாயிருக்கிறேன்); அறிவுக்கெல்லாம் சாக்ஷியாயிருக்கிறேன் (அறிவினுக்கறி வாயிருக்கிறேன்) இங்ஙனம் நாராயணனாகிய என்னைத்தெரிந்து கொண்டு அவன்சாந்தியை (ஸம்ஸாரமெல்லாம் அற்றுப்போதல் என்னும் மோக்ஷத்தை) அடைகிறான்].

[என்னைத் தெரிந்து கொண்டு கர்மயோகத்தைச் செய்து வந்தால்தான் சாந்தியை (சுகத்தை) அடைகிறான். என்னை ஸர்வலோகமஹேசுவரனாகவும் ஸமஸ்த பூதங்களுக்கும் சிநேகிதனாகவும் தெரிந்து கொண்டு, கர்மயோகம் என்னுடைய ஆராதனையே யாதலின் அதனில் சுகமாய்ப்பிரவர்த்திக்கின்றான்].

[இந்தச் சுலோகத்தில் 'தியேயம்' (தியானம் செய்யவேண்டியது) சொல்லப்படுகின்றது].

['எல்லா உலகங்களுக்கும் உலகங்களெண்ணிறந்தவை. சாதாரணமாய் உலகங்கள் மூன்றெனச் சொல்வ துண்டு. அவையாமன—ஸ்வர்க்கம், மர்த்தியம், பாதாளம் (விண்ணுலகம, மண்ணுலகம், நரகம்). ஆயினும், ஸாங்கிய மதத்திலும் வேதாந்த மதத்திலும் பிரகிருதி சம்பந்தமான வாழ்க்கையுள்ளன எட்டு உலகங்களாம். அவையாவன—(மேலே இருந்து படிப் படியாய்க் கீழே சொல்லுமிடத்து) க. பிரஹ்மலோகம் (உயர்தர தேவதைகளிருக்குமுலகம்), உ. பிதுரு லோகம் (பிதுருக்கள், ரிஷிகள், பிரஜாபதி

கள் ஆகிய இவர்களிருக்குமுலகம்), ௩. ஸோம லோகம் (சந்திரன் அல்லது கிரஹங்களிருக்குமுலகம்), ௪. இந்திர லோகம் (தாழ்ந்த நிலைமையிலுள்ள தேவதைகளிருக்குமுலகம்), ௫. கந்தர்வ லோகம் (வானவரிருக்குமுலகம்); ௬. ராக்ஷஸ லோகம், ௭. யக்ஷ லோகம், ௮. பிசாச லோகம் (பூதப் பிரேத பிசாசங்களிருக்குமுலகம்)].

இவ்வாறாக உபநிஷதர்த்தத்தை விளக்குவதும், பிரஹ்ம
வித்தையைப் போதிப்பதும், யோக சாஸ்திரமும்,
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதமுமான பகவத்
கீதைகளில் ஸந்நியாஸ*யோகத்தைப்
பற்றிய ஐந்தாம் அத்தியாயம்.
முற்றிற்று.

---

* கர்ம ஸந்நியாஸ யோகமென்றும் சொல்வதுண்டு.

# ஆரும் அத்தியாயம்.

# தியான யோகம்.

கடந்த ஐந்தாம் அத்தியாயத்தின் இறுதியில் உண்மையான ஞானத்தைப் பெறுவதற்குரிய சாதனமான தியானயோகத்தை ஸூத்திரங்கள்போன்ற உஎ-உஅ-சுலோகங்களில் உபதேசித்தார். இப்பொழுது ஆரம்பமாகும ஆரும் அத்தியாயம் மேற்குறித்த சுலோகங்களின் வியாக்கியானம் போன்றதாகும். கர்மம் தியானயோகத்திற்குப் புறச்சாதனமாகும் (பஹிர் அங்கம்). தியானயோகம் செய்யும் நிலைமைக்கு வருமளவும் கிருஹஸ்தன் கர்மங்களைச் செய்ய வேண்டியது. இதை உத்தேசித்துப் பகவான் இந்த சு-ஆம் அத். சு. க-இல் கர்மத்தைத் துதிக்கின்ருர். தியானயோகத்தைக் கருதிக் கிருஹஸ்தாசிரமத்தை மேற்கொண்ட முனியானவன் அக்நிஹோத்ரம் முதலான கர்மங்களை, பயனை விரும்பாமல், செய்துவரின், அவனுடைய மனம் நிர்மலமாகின்றது ; அதனால் தியானயோகம் ஸித்திக்கின்றது. ஆதலின், அப்படிப்பட்டவனை ஸந்நியாஸியென்றும் யோகியென்னும் துதிக்கின்ருர்.

ஸ்ரீபகவான் சொல்லியது.

𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌯𑌃 ।
𑌸 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌚 𑌯𑍋𑌗𑍀 𑌚 𑌨 𑌨𑌿𑌰𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌨 𑌚𑌾𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 ॥

க. கர்மத்தின் பயனை விரும்பாமல் செய்யத் தகுந்த கர்மங்களை எவன் செய்கிருனே, அவன் ஸந்நியாஸியுமாவான், யோகியுமாவான். அக்நியில்லாதவன் (ஸந்நியாஸி) ஆகான் ; கர்மம் செய்யாதவன் (ஸந்நியாஸி) ஆகான்.

[பயனை விரும்பாமற் செய்யப்படுகிற கர்மம் ஸந்நியாஸம் போன்றதென்று இந்தச் சுலோகத்தில் துதிக்கப்படுகின்றதனால், ஸந்நியாஸம் கூடாதென்று மறுக்கப்படவில்லை. 'செய்யத்தக்க கர்மங்கள்:' நித்திய கர்மம். 'கர்மம் செய்யாதவன்:' அக்நி (நெருப்பு)

இருக்கவேண்டிய அவசியமில்லாத தவம், தானம் முதலானவைகளைச் செய்யாதவன்].

['செய்யத்தக்க:' அவசியமாய்ச் செய்யவேண்டிய பரமபுருஷனுடைய ஆராதனை ரூபமாகின்றமையின் கர்மமே எனக்குப் பிரயோஜனமல்லாது அதனாற் சாதிக்கவேண்டியது ஒன்றுமில்லை என்றெண்ணி எவன் கர்மம் செய்கின்றனோ அவன் ஸந்நியாஸியு மாவான் (ஞானயோகநிஷ்டனுமாவான்) யோகியுமாவான் (கர்மயோகநிஷ்டனுமாவான்). ஆத்மதரிசனம் என்னும் யோகத்திற்குச் சாதனங்களான ஞானம், கர்மம் என்னு மிரண்டிலும் நிஷ்டை யுள்ளவன் ஆவான் என்பது பொருள். வேதத்தில் விதிக்கப்பட்ட யஜ்ஞாதி கர்மங்களிற் பிரவர்த்தியாத கேவலஞானநிஷ்டன் இப்படிப்பட்டவனல்லன். அவனுக்கு ஞானநிஷ்டைமாத்திரமேயுளது. இந்தக்கர்மயோகிக்கோவெனின், இவனுக்கு இரண்டு நிஷ்டைகளு முள].

[ஸந்நியாஸிக்குக்கூட அக்நியும் கிரியையும் உள. அவனுக்கு அக்நி பிரஹ்மமே; பரப்பிரஹ்ம பூஜையே கிரியை].

யஂ ஸஂந்யாஸமிதி ப்ராஹுர்யோகஂ தஂ வித்தி பாண்டவ।
ந ஹ்யஸஂந்யஸ்தஸஂகல்போ யோகீ பவதி கஶ்சந॥

உ. எதனைச் சந்நியாஸமென்று சொல்லுகிறார்களோ, ஓ பாண்டவா (அர்ச்சுன)! யோகமென்பது அதுவே என்று அறி. ஸங்கல்பத்தை விட்டொழியாதவன் எவனும் யோகி ஆகானல்லனே?

[எல்லாக்கர்மங்களையும் அவற்றின் பயன்களையும் விட்டொழிப்பது ஸந்நியாஸமாகும். கர்மபலஸங்கல்பத்தைமாத்திரம் விட்டவனாகிய கர்மயோகியும் ஸந்நியாஸம் செய்தவனெனத் துதிக்கப்படுகின்றான். பயனை ஆசியாதிருத்தல் இருவருக்கும் பொதுவாயிருப்பதனால் இப்படிச் சொல்லப்பட்டது. 'ஸங்கல்பம்:' பயனைக்குறித்த உத்தேசம். இஃதில்லாமற் கர்மங்களைச் செய்கிறவன் சித்தம்(மனம்) சிதறிப்போவதற்குக்காரணமான பயன்மீது விருப்பம் இல்லாதவனாகின்றமையின், யோகியாவான். 'யோகி:' சித்த ஸமாதானமுள்ளவன்; மனம் ஒருவழிப்பட்டு நிற்பவன்].

['ஸந்நியாஸம்:' ஞானயோகம், அது கர்மயோகமே என்று அறி. 'ஸங்கல்பம்' ஆத்மாவல்லாதபிரகிருதியினிடத்து ஆத்மா வென்னும் எண்ணம். அதனை ஆத்மாவின் உண்மையானஞானத் தினுற் போக்கிக்கொண்டவன் கர்மயோகியாகானல்லனே]?

[ஸந்நியாஸமுங்கூட யோகத்திற்சேர்ந்ததேயென்று சொல்லப் படுகின்றது. கர்மத்தையும் ஸங்கல்பத்தையும் விடாதவன் எப்படி உபாயமுள்ளவனுவான்]?

[யோகம் ௫-ஆம் அத். முதற் சுலோகத்தி னடியிலுள்ள குறிப்புக்களைக் கவனிக்க. கர்மங்களை யெல்லாம் விட்டொழித்து ஞானத்தைச் சார்ந்தொழுகுவதே ஸாங்கிய மதத்தின் கொள்கை யெனினும், கர்மங்களைச் சிரத்தையுடன் செய்வதே யோகமதத்தின் கொள்கை யெனினும், கர்மத்தைப்பற்றி இவ்விரண்டு மதங்களின் அபிப்பிராயமும் ஒன்றே யென்று ஐந்தாம் அத்தியாயத்தில் பக வான் காட்டினர். இஃது எங்ஙனமெனின், யோகமதத்தின் படி கர்மாசரணையாவது கிரமமான மனவொழிவுடன் கூடியதாம்; மனவொழிவாவது, கர்மங்களை விடுவதன்று, அவற்றின் பயன்களை விரும்பாதிருத்தலாம்].

இனி தியானயோகத்திற்குக் கர்மயோகம் சாதனமாவதெப்படி யெனக்காட்டுகிருர்.

ஆருருக்ஷோர்முநேர்யோகம் கர்ம காரணமுச்யதே ।
யோகாரூடஸ்ய தஸ்யைவ ஶம: காரணமுச்யதே ॥

௩. யோகத்தை அடைய விரும்புகிற முனிக்குக் கர்மம் சாதனமென்று சொல்லப்படுகிறது. யோகத்தையடைந்தவனுக்கே சமம் (சாந்தி) சாதனமென்று சொல்லப்படுகிறது.

['முனி' கர்மப்பயனை விரும்பாதவன். தியான யோகத்தை ஆசரிக்கச் சக்தியில்லாதவன் தியான யோகத்தை அடைய விரும்பு வாணுயின் அவனுக்குப் பயனை விரும்பாத கர்மயோகம் சாதனமா கும். தியானயோகத்தில் நிலையாயிருப்பதற்கு அவனுக்குச் சக்தி

யில்லை. கர்மயோகத்தினால் அவனுடைய மனம் பரிசுத்தமாகின்றது; அதன் பிறகு அவன் தியானயோகத்தில் நிலைகொள்வது எளிதாகும். 'சமம்:' எல்லாக்கர்மங்களையும் விட்டொழித்தல்; யோகத்திற் பிரவேசித்தவனுக்கு இதுவே சாதனமாகும். மேற்சொல்லிய முனியானவன் கர்மயோக சாதனத்தைக் கொண்டு தியானயோக நிலையேறிய பின்னர் அவன் கர்மங்களை விடுவதே அவனுக்குச்சாதனமாகும். கர்மங்களை எவ்வளவுக் கெவ்வளவு விடுகிறானோ அவ்வளவுக் கவ்வளவு அவனுக்குத் தொந்தரவு குறைகின்றது, இந்திரிய ஜய மதிகமாகின்றது, மனம் ஒரு நிலையில் அதிக உறுதியாய் நிற்பதற்காகின்றது. அப்பொழுது அவன் யோகாரூடன் (யோகமேறினவன்) எனப்படுவான். ஆனதனாலேயே, மகாபாரதம், சாந்திபர்வம் கஎ௫-௩௮-இல்

"எல்லாப் பிராணிகளிலும் பரமாத்மா வித்தியாசமின்றி ஒருவராயிருக்கின்றாரென்னும் அறிவு, ஸத்தியம், நற்குணம், உறுதி, தீமை செய்யாதிருத்தல், நேர்மை, கர்மங்களைத் துறத்தல் ஆகிய இவைகளுக்குச் சமானமான ஐசுவரியம் பிராமணனுக்கு வேறொன்றுமில்லை"

என்று சொல்லப்பட்டிருக்கின்றது].

['யோகம்:' ஆத்மாவைத் தரிசித்தலென்னும் மோக்ஷம், கைவல்யம். 'சமம்' கர்மநிவிர்த்தி. மோக்ஷம் ஸித்திக்கும் வரைக்கும் கர்மம் செய்யவேண்டியது].

['யோகம்' உபாயம். 'யோகத்தை அடைய விரும்புகிறவன்:' அந்த உபாயத்தின் ஸம்பூர்த்தியை விரும்புகிறவன். 'யோகத்தை அடைந்தவன்' உபாயம் ஸம்பூர்த்தியானவன், அபரோக்ஷ ஞானமுள்ளவன். 'சமம்' அநுபவிக்கவேண்டிய மர்மங்களெல்லாம் குறைவுபடுதல். 'ஸாதனம்' பரம ஸு௱க ஸாதனம்].

எப்பொழுது யோகாரூடன் (யோகநிலையடைந்தவன்) ஆகின்றானென்று சொல்லுகிறார்.

யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்மஸ்வநுஷஜ்ஜதே।
ஸர்வஸங்கல்ப ஸந்ந்யாஸீ யோகாரூடஸ்ததோச்யதே॥

ச. எப்பொழுது விஷயங்களின்மீது ஆசைபாராட்டானோ, கர்மங்களின்மீது விருப்பம் வையானோ, அப்பொழுது எல்லா ஸங்கல்பங்களையும் விட்டவனாய் அவன் யோகாரூடன் எனப்படுவான்.

[‘விஷயங்கள்’ சப்தம் முதலியன. ‘கர்மங்கள்’ நித்திய, நைமித்திக, காம்ய, நிஷித்த கர்மங்கள். இவற்றினாற் பிரயோஜனமில்லையென்றறிந்தவனாய் இவை செய்யத் தகுந்தவையல்லவென்று நினைப்பான். ‘எல்லா ஸங்கல்பங்களையும் விட்டவன்’ இம்மை மறுமைக் கர்மங்களுக்குக் காரணமானவைகளையெல்லாம் விட்டவன்].

[‘விஷயங்கள்’ ஆத்மாவைத் தவிர மற்ற பிராகிருத விஷயங்கள். இந்த யோகி ஆத்மாவுடன் ஐக்கியத்தை யநுபவிக்கும் தன்மையுள்ளவனாதலின் பிராகிருத விஷயங்களிலும் அவற்றுடன் சம்பந்தப்பட்ட கர்மங்களிலும் எப்பொழுது பற்றில்லாதவனாவனோ அப்பொழுது அவன் எல்லா ஸங்கல்பங்களையும் விட்டவனாகி யோகாரூடன் எனப்படுகின்றான். ஆதலின் விஷயங்களின்மீது ஆசையில்லாமற் பழகும் கர்ம யோகமே அவனுக்கு யோக ஸித்தியைக் கொடுக்கும்]:

[இந்தச் சுலோகம் யோகாரூடனுடைய லக்ஷணத்தைச் சொல்லுகின்றது. அபரோக்ஷ ஞானமுள்ளவனுக்கு தோஷங்கள் தாமாகவே அடங்கிப்போம்].

ஒருவன் யோகாரூடன் ஆனால், ஆத்மாவானது ஸம்ஸாரதுக்கங்களினின்று விடுவிக்கப்படுகின்றது. ஆதலால்.

உத்தரேதாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாதயேத் |
ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்துராத்மைவ ரிபுராத்மந:

ரு. ஆத்மாவினால் ஆத்மாவை எழுப்பவேண்டும். ஆத்மாவைக் கீழேபோக விடக்கூடாது. ஆத்மாவுக்கு நண்பன் ஆத்மாவே யன்றோ; ஆத்மாவுக்கு ஆத்மாவே சத்துரு.

['எழுப்பவேண்டும்' ஸம்ஸாரமென்னும அநர்த்தத் தொகுதியினின்று மேலுக்கு எழுப்பவேண்டும். 'நீழேபோக' அதோகதியடைய. ஆத்மாவை ஸம்ஸாரத்தினின்று விடுவிக்கக்கூடிய உறவினன் அல்லது சிநேகிதன் ஆத்மாவேயாம். மற்ற உறவினர்களும் நண்பர்களும் சிநேகம் முதலிய பந்தத்திற்கு (கட்டிற்கு) ஆதாரங்களாவதனால் மோக்ஷத்திற்கு அநுகூலமானவர்களல்லர். மற்ற அபகாரம் செய்யும் வெளிச்சத்ருக்களும் ஆத்மாவை யநுசரித்து வந்தவர்களே யாதலின் ஆத்மாவே சத்துருவென்று சொல்லப்பட்டது].

['ஆத்மாவினால்' மனத்தினால். விஷயங்களின்மீது ஆசையில்லாத மனத்தினால் ஆத்மாவை எழுப்ப (உத்தரிக்க) வேண்டுமேயன்றி விஷயங்களின்மீது ஆசையுள்ள மனத்தினால், ஆத்மாவைப் பாதிக்கக்கூடாது].

[யோகாரூடத்துவம் பிரயத்னத்தினாற் செய்யத் தகுந்த தன்றென்று இந்தச் சுலோகம் சொல்லுகின்றது. 'ஆத்மாவினால்' மனத்தினால். 'ஆத்மாவை' ஜீவனை. 'ஆத்மாவே' மனமே. 'ஆத்மாவுக்கு' ஜீவனுக்கு].

ஆத்மாவுக்கு நண்பன் ஆத்மாவே யென்றும், ஆத்மாவுக்கு ஆத்மாவே சத்துருவென்றும் சொல்லப்பட்டது. எப்படிப்பட்ட ஆத்மா நண்பன், எப்படிப்பட்ட ஆத்மா சத்துரு என்று சொல்லுகிறார்.

ஷந்ஸுராத்தாத்தநஸ்ஸ யெநாதெைவாத்தநா ஜிதஃ।
அநாத்தநஸ்து ஶத்ருதெ வதெதாதெைவ ஶத்ருவத்॥

௬. எந்த ஆத்மாவினாலே ஆத்மாவே ஜயிக்கப்பட்டதோ அந்த ஆத்மாவுக்கு ஆத்மா சிநேகிதனாகும்; ஜயிக்கப்படாத ஆத்மாவுக்கோ, ஆத்மா சத்துருவைப்போல விரோதியாயிருக்கும்.

[ஆத்மா காரியகரணங்களின் சேர்க்கை; தேகம், இந்திரியங்கள் முதலியவைகளின் தொகுதி. அதை ஜயித்தவன்—ஜிதேந்திரியன். தேகத்தையும் இந்திரியங்களையும் அடக்கித் தன்வயமாக்கிக் கொண்டவனுக்கு ஆத்மா சிநேகிதனாகும்; அவைகளை அப்படி அடக்

காதவனுக்கு ஆத்மாவானது, வெளிச் சத்துரு எப்படி தீமை செய்யுமோ அப்படியே, தீமை செய்யும்.

[எந்தப்புருஷனால் தன்மனம் விஷயங்களைச் சேராதபடிஜயிக்கப்பட்டதோ அவனுக்கு அந்தமனம் பந்து (சிநேகிதன்) ஆகும். ஜயிக்கப்படாத மனமுள்ளவனுக்குத் தன்னுடையமனமே சத்துருவைப் போலத் தனக்குத் தீமை செய்கின்றது].

(ஆத்மாவினாலே புத்தியினாலாவது ஜீவனினாலாவது. 'ஆத்மாவே' மனமே. ஜயிக்கப்படாத ஆத்மா மனம் இல்லாதவனுக்கு, ஜயிக்கப்படாத மனமுள்ளவனுக்கு. ஜயிக்கப்படாத மனமுள்ள புருஷனுடைய மனம் இருந்தபோதிலும் அஃது உபகாரம் செய்யாததாகையால் இல்லாததாலவே சொல்லப்பட்டது. சம்பளக்காரன் இருந்தபோதிலும் அவன் செய்யவேண்டிய வேலையைச் செய்யானாயின் அதிகாரி சம்பளக்காரனில்லாதவனே யாவன்].

ஜிதாத்மந꞉ ப்ரஶாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித꞉।
ஶீதோஷ்ணஸுகது꞉கேஷு ததா² மாநாவமாநயோ꞉॥

எ. ஜயிக்கப்பட்ட காரிய கரணச் சேர்க்கையுள்ளவனுக்கும் சாந்தியை யடைந்தவனுக்கும் பரமாத்மா ஸமாதியினால் அடையக் கூடியவராகிறார்; சீதோஷ்ணங்களிலும் ஸுகதுக்கங்களிலும் அப்படியே மானாவமானங்களிலும் ஸமமானவனாகவேண்டும்.

[தேகம், இந்திரியங்கள் ஆகிய இவைகளின்தொகுதியை அடக்கியான்பவனுக்குப் பரமாத்மாவே சொந்த ஆத்மாவாகின்றார்].

[சீதோஷ்ணங்களிலும் சுகதுக்கங்களிலும் அப்படியே மானாவமானங்களிலும் ஜயிக்கப்பட்டமனமுள்ளவனாகி சாந்தியை யடைந்தவனுடைய மனத்தில் பரமாத்மாவானவர் தம்ரூபத்தோடு விளங்குகின்றார். இங்குப் பரமாத்மா வென்றது பிரத்யகாத்மாவே(ஜீவனே) யாகும். பரமாத்மா விளங்குகின்றார். என்பதற்குப் பதிலாக, 'பரம்' என்னும் சப்தத்தை வேறாகப்பிரித்து 'மிகவும்' என்று அர்த்தம் செய்து, ஆத்மா தம்முடைய ஸ்வரூபத்தில் மிகவும் விளங்குகின்றார் என்றும் சொல்லலாம்].

[ஜிதாத்மாவின் மனம் அடிக்கடி விஷயங்களை நாடாதாதலின் அவன் பிரசாந்தியை யடைந்தவனாவான். அப்பொழுது அவனுடைய இருதயத்தில் பரமாத்மா (ஈசுவரர்) பிரஸன்னராய் விளங்குவார்; அவன் அபரோக்ஷ ஞானமுள்ளவனாவான் என்பதாம். "சீதோஷ்ணங்களில்" என்பது முதற்கொண்டு அபரோக்ஷஞானியின் லக்ஷணம் சொல்லப்படுகின்றது].

𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑍃𑌪𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌕𑍂𑌟𑌸𑍍𑌥𑍋 𑌵𑌿𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌯𑍁𑌕𑍍𑌤 𑌇𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌯𑍋𑌗𑍀 𑌸𑌮𑌲𑍋𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌮𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌃 ॥

அ. ஞானவிஜ்ஞானங்களினால் திருப்தியடைந்த அந்தஃகரணமுள்ளவனாய், அசையாதவனாய், ஜயிக்கப்பட்ட இந்திரியங்களுள்ளவனாய், மண்கட்டியையும் கல்லையும் பொன்னையும் ஸமமாய்க்கொள்கிற யோகி யுக்தனெனப் படுவான்.

[‘ஞானம்:’ சாஸ்திரத்திற்சொல்லப்பட்ட பதார்த்தங்களைத் தெரிந்துகொள்ளுதல். ‘விஜ்ஞானம்:’ சாஸ்திரத்தினால் தெரிந்துகொண்டவைகளைத் தன் அநுபவத்திற்குக்கொண்டு வருதல். ‘அசையாதவன்:’ கூடஸ்தன்=அசைக்கமுடியாதவன். ‘யுக்தன்:’ ஸமாதியுள்ளவன்].

[‘ஞானம்:’ ஆத்மஸ்வரூபத்தைத்தெரிந்துகொள்ளுதல். ‘விஜ்ஞானம்:’ ஆத்மஸ்வரூபம் பிரகிருதியைவிட வேறுலக்ஷணங்களுள்ள உருவமுடையது என்று தெரிந்துகொள்ளுதல். ‘அசையாதவன்:’ தேவாதி அவஸ்தைகளிலும் அநுசரித்துக் கொண்டிருக்கும் ஞானைகஸ்வரூபனான ஆத்மாவினிடத் திருப்பவன்; ஆதலாற்றானே அவன் ஜயிக்கப்பட்ட இந்திரியங்களுள்ளவன். ‘மண்கட்டி......ஸமமாய்க் கொள்கிறவன்:’ பிரகிருதியைவிட வேறான லக்ஷணமுள்ள ஸ்வரூபத்தி லிருப்பவனாதலின், பிருகிருதி சம்பந்தமான வஸ்துக்களை யநுபவிக்க வேண்டுமென்னும் புத்தி இராது; ஆதலால் அவனுக்கு மண்ணாங்கட்டியாயினும், கல்லாயினும், பொன்னாயினும், எல்லாம் ஒன்றேயாம். ‘யோகி:’ கர்மயோகி. ‘யுக்தன்:’ ஆத்மாவைத் தரிசித்தல் என்னும் யோகாப்பியாஸத்திற்குத்தகுந்தவன்].

['அசையாதவன்:' கூடஸ்தன்=(கூடம்=ஆகாசம்) ஆகாசத்தைப்போலிருப்பவன், அஃதாவது, நிர்விகாரி. 'விஜ்ஞானம்:' சாதாரணமானவர்க ளறியாத விசேஷங்களை யறிதல், அல்லது, அபரோக்ஷஞானம். 'யோகி:' யோகம் செய்கிறவன். 'யுக்தன்:' ஸம்பூர்ணமான யோகமுள்ளவன். இப்படி யோகாநுஷ்டானம் செய்கிறவன் யோக ஸம்பூரணன் எனப்படுவான்].

அன்றியும்,

ஸுஹ்ருந்மித்ரார்யுதாஸீநமத்யஸ்தத்வேஷ்யபந்துஷு ।
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர்விஶிஷ்யதே ॥

கூ. நன்னினைவுள்ளோர், மித்திரர், சத்துருக்கள், உதாஸீனர், மத்தியஸ்தர், துவேஷிகள், பந்துக்கள், ஸாதுக்கள், பாபிகள் ஆகிய இவர்களிடத்து ஸமமான புத்தியுள்ளவன் விசேஷித்தவனாவான்.

['நன்னினைவுள்ளோர்:' பதிலுபகாரத்தை விரும்பாமல் உபகாரம் செய்வோர். 'மித்திரர்:' சிநேகமுள்ளவர். 'சத்துருக்கள்:' விரோதிகள். 'உதாஸீனர்:' எவர் பக்கத்திலும் சேராதவர். 'மத்தியஸ்தர்:' விரோதிகளான இருகக்ஷிக்காரர்களுக்கும் நன்மை நாடுவோர். 'துவேஷிகள்:' தனக்கு இஷ்டமில்லாதவர்கள். 'பந்துக்கள்:' உறவினர். 'ஸாதுக்கள்:' சாஸ்திரத்தையநுசரிப்பவர்கள். 'பாபிகள்:' செய்யத்தகாதென விலக்கப்பட்ட காரியங்களைச் செய்வோர். 'ஸமமான புத்தியுள்ளவன்:' செய்பவன் யாவன், செய்யப்படுவது யாது என்னும் விவரங்களை விசாரித்துப் புத்தியைப் பரவவிடாதவன். 'விசேஷித்தவனாவான்' 'ஸம்ஸாரத்தினின்று விடுவிக்கப்படுகிறான்' என்று ஒரு பாடம் இருக்கின்றது. யோகாரூடர்களுள் இவன் உத்தமனெனப்படுவான்].

['நன்னினைவுள்ளோர்:' வயதை ஆலோசியாமல் தன்னுடைய நன்மையைக் கோருகிறவர்கள். 'மித்திரர்:' ஸமமான வயஸ்ஸு உள்ளவர்களாய் நன்மையைக் கோருகிறவர்கள். 'சத்துருக்கள்:' காரணத்தை யுத்தேசித்து அநர்த்தங் கோருகிறவர்கள். 'உதாஸீ

னர்:' நன்மையாவது அநர்த்தமாவது கோருவதற்குக் காரணமில்லாதவர்கள். 'மத்தியஸ்தர்:' பிறந்தது முதல் எவர்க்கும் நன்மையாவது அநர்த்தமாவது கோராதவர்கள். 'துவேஷிகள்:' பிறந்தது முதல் அநிஷ்டங்களையே (இஷ்டமில்லாதவைகளையே) கோரிக்கொண்டிருப்பவர்கள். 'பந்துக்கள்:' பிறந்தது முதல் நன்மையையே கோருகிறவர்கள். 'ஸாதுக்கள்:' தர்ம ஸ்வபாவமுள்ளவர்கள். 'பாபிகள்:' பாப ஸ்வபாவமுள்ளவர்கள்].

[ஜீவர்களின் சித்து, அஃதாவது, சைதன்யமும் பரமாத்மாவும்—எல்லாம் பரமாத்மாவினால் உண்டானதனால்—ஸாதுக்கள் பாபிகள் முதலானவர்களிடத்தெல்லாம் ஒரே விதமாயிருப்பதனால் எல்லாரிடத்தும் ஸமபுத்தியுள்ளவன். ஜீவர்கள் சித்ரூபிகளேயல்லரோ? விசேஷம் (தோஷம்) அந்தக்கரணத்தினாலுண்டானது; எல்லோர்க்கும் ஸாதுத்துவாதிகமெல்லாம் ஈசுவரரால் செய்யப்பட்டதே; ஸ்வயமாக (தானாக) எதுவுமில்லை; என்றிவ்வாறு ஸமபுத்தியுள்ளவனாயிருத்தலேயன்றி, ஸாதுக்களுக்கும் பாபிகளுக்கும் பூஜை முதலானவைகளை ஸமமாய்ச் செய்தலன்று. நன்னினைவுள்ளோர் முதலானவர்களுக்குச் சாஸ்திரத்திற் சொல்லியதைவிட ஏற்றக்குறைவின்றி பூஜைசெய்தலும் ஸமத்துவமேயாம். 'நன்னினைவுள்ளோர்:' பதிலுபகாரத்தை விரும்பாமல் உபகாரஞ் செய்பவர்கள். 'மித்திரர்:' துக்கம் வரும் நிலைமையையறிந்து ரக்ஷிப்பவர்கள். 'சத்துருக்கள்:' ஹிம்ஸை முதலியன செய்வோர். 'உதாஸீனர்:' செய்யவேண்டிய உபகாரத்திலும் அபகாரத்திலுங்கூட உபேக்ஷை செய்கிறவர்கள். 'மத்தியஸ்தர்:' செய்யவேண்டிய உபகாரத்தையும் அபகாரத்தையுங்கூடச் செய்கிறவர்கள். 'துவேஷிகள்:' இஷ்டமில்லாதவைகளைச் செய்கிறவர்கள்].

[ஞானவிஜ்ஞானங்களின் விவரம் எ - ஆம் அத்தியாயத்திற் காண்க].

ஆதலால், உத்தமமான பயன் கிடைக்கும்பொருட்டு

யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மாநம் ரஹஸி ஸ்தித꞉ ।
ஏகாகீ யதசித்தாத்மா நிராஶீரபரிக்ரஹ꞉ ॥

ம. யோகியானவன் தனியா யிருந்துகொண்டு, நியமிக்கப்பட்ட மனமும் ஆத்மாவுமுள்ளவனுகி, ஆசைகளைத் துறந்து, பரிக்ரஹ மில்லாதவனாய் (பற்றில்லாதவனாய்), ஏகாந்தத்திலிருந்துகொண்டு எப்பொழுதும் ஆத்மாவைக் குறித்து யோகஞ் செய்யவேண்டியது.

['யோகி:' தியானஞ் செய்பவன். 'ஆத்மாவைக்குறித்து யோகஞ்செய்யவேண்டியது:' அந்தஃகரணத்தை நிக்கிரகிக்கவேண்டும். ஏகாந்தம்:' மலை, குகை முதலான இடம். 'தனியாயிருந்துகொண்டு:' ஸந்நியாஸம் செய்து. 'மனம்:' அந்தஃகரணம். 'ஆத்மா:' சரீரம்].

['யோகி:' இதுவரையிற்சொல்லப்பட்ட கர்மயோகநிஷ்டன். 'எப்பொழுதும்:' தினந்தோறும் யோகாப்பியாஸகாலத்தில். 'ஆத்மாவைக்குறித்து யோகஞ்செய்யவேண்டியது:' ஆத்மாவை யுக்தனுகச்செய்யவேண்டியது, தன்னைப் பார்ப்பவனுகச் செய்யவேண்டியது. 'ஏகாந்தத்தில்:' ஜனசந்தடியில்லாமல் அமைதியாயிருக்கிற இடத்தில். 'தனியாயிருந்துகொண்டு:' தன்னைத்தவிர வேறொருவரும் இல்லாமல். 'மனம்:' சிந்தையுடன் கூடினமனம்; 'ஆத்மா:' அப்படியல்லாதமனம். 'பரிக்ரஹ மில்லாதவன்:' ஆத்மாவைத்தவிர வேறெதனிடத்தும் மமகாரமில்லாதவன்].

[இனி ஸமாதி யோகக்கிரமம் சொல்லப்படுகின்றது. 'ஆத்மாவைக்குறித்து யோகஞ்செய்யவேண்டியது:' மனத்தை ஸமாதியோகத்தோடு கூடினதாகச் செய்யவேண்டும்].

['பரிக்ரஹமில்லாதவனாய்:'—நான்காம் அத். உக-ஆம் சுலோகத்தைப்பார்க்க. பரிக்ரஹம்=ஒருவனைச் சுற்றிக்கொண்டிருப்பது—குடும்பம், பரிஜனங்கள், வஸ்துக்கள் (உடைமைகள்) முதலியன; இவற்றின்மீது பற்று].

இனி, யோகாப்பியாஸம் செய்பவனுக்கு ஆஸனம், ஆஹாரம், விஹாரம் (விளையாட்டு) முதலியன எவ்வெவ்வாறு இருக்கவேண்டுமென்றும், எப்படிப்பட்டவன் யோகத்தில் தேர்ச்சி யடைவானென்

றும், யோகசம்பந்தமாய் மேற்சொல்லியவைகளின் பிரயோஜனமுத லிய விவரங்களை யெல்லாம் எடுத்துரைக்கக்கருதி, முதலாவதாக ஆஸன மிருக்கவேண்டிய விதத்தைச் சொல்லுகிறார்:

ஶுசௌ தே³ஶே ப்ரதிஷ்டா²ப்ய ஸ்தி²ரமாஸநமாத்மந: ।
நாத்யுச்ச்²ரிதம் நாதிநீசம் சைலாஜிநகுஶோத்தரம் ॥

தத்ரைகாக்³ரம் மந: க்ருத்வா யதசித்தேந்த்³ரியக்ரிய: ।
உபவிஶ்யாஸநே யுஞ்ஜ்யாத்³யோக³மாத்மவிஶுத்³த⁴யே ॥

யக, யஉ. மிக்க உயர்வல்லாததும் மிக்க தாழ்வல்லாததும், வஸ்திரமும் தோலும் தர்ப்பைப் புல்லின் மீது விரித்து அமைந்ததும், அசைவுறாததுமான தனது ஆஸனத்தைப் பரிசுத்தமான இடத்தில் நிறுத்தி, அவ் ஆஸனத்தின்மீதுட்கார்ந்து, சித்தத்தின் விருத்திகளையும் இந்திரியங்களின் வியாபாரங்களையும் அடக்கி மனம் அசைவுறாது செய்து, ஆத்மா பரிசுத்தமாகும்பொருட்டு யோகம் செய்ய வேண்டும்.

[ஆஸனம் அமைக்கும் கிரமமாவது,—முதலில் தர்ப்பைப் புல் லினாலாயதடுக்கு, அதன்மீது கிருஷ்ணாஜினம் (மான் தோல்), அதன் மீது வஸ்திரம். 'பரிசுத்தமான இடத்தில்:' சுசியான ஸ்தலத்தில்; இயற்கையினாலாவது செயற்கையினாலாவது நிர்ஜனமான (ஜனங்க ளில்லாத) பிரதேசத்தில். 'யோகம்:' ஸமாதானம் செய்தல்—சித்தத் தின் விருத்திகளை யடக்குதல். 'மனம் அசைவுறாது செய்து:' மனத்தை ஏகாக்ரமாக்கி—விஷயங்களினின்று திருப்பி. 'ஆத்மா பரிசுத்தமாகும்பொருட்டு:' அந்தஃகரணம் பரிசுத்தமாகுமாறு].

[பரிசுத்தர்களல்லாதவர்கள் சேராததும் அவர்கள் சூழாததும் பரிசுத்தமல்லாத வஸ்துக்களின் சம்பந்தமில்லாத பவித்திரமான இடத்தில் கோல், குச்சி முதலியவைகளினால் செய்யப்பட்டதும் அதன் மீது தர்ப்பை, மான் தோல், வஸ்திரம் ஆகிய இவை

முறையே ஒன்றன் மீது ஒன்றாய் விரிக்கப் பெற்றதுமான ஆஸனத்தை யேற்படுத்திக்கொண்டு பந்தம் போமாறு ஆத்ம தரிசனம் செய்யவேண்டும்].

['யோகம்:' ஸமாதி யோகம்].

['மிக்க உயர் வல்லாததும் மிக்க தாழ் வல்லாததும்:' ஸமதரையாயிருக்கவேண்டும்; குன்றாயின், அங்கிருந்து பார்க்கக்கூடும் காட்சிகளினால் கவனம் சிதைவுறும்; பள்ளத்தாக்காயின், அங்கு உலகத்துப் பொருள்களெல்லாம் சூழ்ந்து நிற்பதனால் கவலை பாயும். சாதாரணமாய் முனிகள் தவஞ்செய்யப்போகுமிடங்கள் காடு,குடிப்பதற்கும் உடம்பு குளிப்பதற்குமேற்ற நல்ல தண்ணீருள்ள ஆற்றங்கரை, கொஞ்ச மட்டும் மரங்களை வெட்டி யொழித்து அதனால் அங்கு வன மிருகங்கள் வந்து சேராதிருக்கும் இடம் ஆகிய இவை ஆகும்].

இவ்வாறு வெளியாஸனம் விதிக்கப்பட்டது. இனி சரீரதாரணம், உடம்பை வைத்துக்கொள்ளவேண்டிய நிலை இன்னதென்று சொல்லுகிறார்.

𑌸𑌮𑌂 𑌕𑌾𑌯𑌶𑌿𑌰𑍋𑌗𑍍𑌰𑍀𑌵𑌂 𑌧𑌾𑌰𑌯𑌨𑍍𑌨𑌚𑌲𑌂 𑌸𑍍𑌥𑌿𑌰𑌃 ।
𑌸𑌂𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌨𑌾𑌸𑌿𑌕𑌾𑌗𑍍𑌰𑌂 𑌸𑍍𑌵𑌂 𑌦𑌿𑌶𑌶𑍍𑌚𑌾𑌨𑌵𑌲𑍋𑌕𑌯𑌨𑍍 ॥
𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌗𑌤𑌭𑍀𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌵𑍍𑌰𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ।
𑌮𑌨𑌃 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑍋 𑌯𑍁𑌕𑍍𑌤 𑌆𑌸𑍀𑌤 𑌮𑌤𑍍𑌪𑌰𑌃 ॥

௧௩, ௧௪. உடம்பையும் தலையையும் கழுத்தையும் ஸமமாகவும் (நேராகவும்) அசையாமலும் வைத்துக்கொண்டு; உறுதியாய், தனது மூக்கின் நுனியை யுற்று நோக்கிக்கொண்டு, சுற்றிப் பாராமல்; சாந்தமடைந்த அந்தக்கரணமுள்ளவனாய், பயமற்று, பிரஹ்மசாரி விரதத்தையுறுதியாய் நடத்திக்கொண்டு, மனத்தையடக்கி, என்னையே நினைத்துக்கொண்டு, என்னையே பிரபுவாய்ப் பார்த்துக்கொண்டு நிலையா யுட்கார்ந்திருக்கவேண்டும்.

[நோயிருக்கும் உடம்பு அசைந்து கொண்டிருக்கலாம். ஆதலின், 'அசையாமலும்' என்னும் அடைமொழி சேர்க்கப்பட்டது. 'மூக்கின் நுனியை யுற்று நோக்கிக்கொண்டு:' மூக்கின் நுனியை யுற்றுநோக்குவது 'போல' இருந்துகொண்டு—என்றிருக்கவேண்டும். மூக்கின் நுனியையே உண்மையாய் உற்றுநோக்கவேண்டுமென்பது இந்தச் சுலோகத்தின் கருத்தாகாது; மற்று, பார்வையை வெளி விஷயங்களினின்று இழுத்து உட்புறத்தில் நிறுத்தவேண்டும்; மனம் ஒருநிலையாயிருந்தாலன்றி இப்படிச் செய்யமுடியாது. அல்லாது, மூக்கின் நுனியையே யுற்றுநோக்கின் மனம் அவ்விடத்து லயப்படுமேயன்றி ஆத்மாவின்மீது நிலையாய் நில்லாது. உண்மையில், யோகிசெய்யவேண்டிய காரியமாவது (சு-அத். சு-உரு) மனத்தை ஆத்மாவினிடத்து நிறுத்தவேண்டும். ஆதலின், மூக்கு நுனியை யுற்று நோக்குவதுபோலப் பார்ப்பதனால் இரண்டு கண்களையும் ஒன்றுய்க் கூட்டுவதே இங்கு விதிக்கப் படுகின்றது. 'பிரஹ்மசாரி விரதம்:' ஸ்திரீயுடன் புணராதிருத்தல், குருவுக்குப் பணிவிடை செய்தல், பிச்சை யெடுத்துண்ணல் முதலியன யடங்கியது. 'மனத்தையடக்கி:' மனத்தின் வியாபாரங்களை யடக்கி. அவன் எப்பொழுதும் என்னையே நினைத்துக்கொண்டிருக்க வேண்டும், என்னையே பிரபுவாக, பெரியவனாக மதிக்க வேண்டும். ஸ்திரீயின்மீது பிரியமுள்ளவன் அவளையேஎப்பொழுதும்நினைத்துக் கொண்டிருக்கலாம்; ஆனால் அவளைத்தனக்குப் பெரிய பிரபுவாக ஒருபொழுதும் மதியான். அவன் தன் அரசனையாவது ஈசுவரனையாவது தனக்குப் பிரபுவாய் மதிக்கிறான். இந்த யோகியோவெனின், என்னையே எப்பொழுதும் நினைக்கிறான்; என்னையே பிரபுவாயும் மதிக்கிறான்].

['சாந்தியடைந்த அந்தஃகரணமுள்ளவன்:' சுகமடைந்த மனமுள்ளவன். 'யுக்தன்:' அவதானமுள்ளவன்].

இனி யோகத்தின் பயன் விவரிக்கப்படுகின்றது:

யுஂஜந்நேவம் ஸதா³த்மாநம் யோகீ³ நியதமாநஸ꞉ ।
ஶாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்தா²மதி⁴க³ச்ச²தி ॥

௰௫. தியானம் செய்பவன் நியமிக்கப்பட்ட மனமுள்ளவனாய் இவ்வாறு எப்பொழுதும் அந்தঃகரணத்தை யடக்கி நிலையாய் வைத்துக்கொண்டு மோக்ஷமே பரமகதியாய் என்னிடத்திருக்கப்பட்ட சாந்தியை யடைகிறான்.

['இவ்வாறு:' மேலே விதிக்கப்பட்டவாறு. 'சாந்தி:' உபரதி= காரிய மெதுவுஞ் செய்யாதிருத்தல். 'என்னிடத்திருக்கப்பட்ட:' என்னக்கு அதீனமாயிருக்கிற].

[பரப்பிரம்மனும் புருஷோத்தமனுமான என்னிடத்தில் மனத்தைச் சேர்த்து, என்னுடன் கலப்பதனால் மனம் பரிசுத்தமாகுமாதலின் நிச்சலமான மனமுள்ளவனாகிறான். ஆத்ம யோகம் செய்கிறவனுக்கு மனம் சுத்தப்படும்பொருட்டு மனத்தைப் பகவானிடத்து வைக்கவேண்டுமென்று சொல்லப்பட்டது].

['மோக்ஷமே பரமகதியாய்:' சரீரத்தை விட்டபிறகு உண்டாகிற].

இனி யோகி அநுசரிக்கவேண்டிய ஆஹார நியமம் முதலியன சொல்லப்படுகின்றன:

நாத்யஸ்நதஸ்து யோகோஸ்தி நசைகாந்த மநஸ்நத: ।
நசாதிஸ்வப்நஸீலஸ்ய ஜாக்ரதோ நைவசார்ஜுந ॥

௰௬. மிகத் தின்பவனுக்கு யோகமில்லை; கொஞ்சங்கூடத் தின்னாதவனுக்கு மில்லை; அதிகமாய்த் தூங்குந் தன்மையுள்ளவனுக்கும் இல்லை; ஓ அர்ஜுனா! உறங்காமலே இருப்பவனுக்கும் இல்லை இல்லை.

['மிகத் தின்பவன்:' தகுந்த அளவைவிட அதிகமாய்த் தின்பவன், ஆத்ம ஸம்மிதமான அன்னத்தைவிட அதிகமாய்த் தின்பவன். எவ்வளவு அன்னம் சாப்பிட்டால் அஜீரணமாகாதிருக்குமோ வேலைகளுக்கும் கவலைகளுக்கும் அநுகூலமாயிருக்குமோ அது ஆத்ம ஸம்மிதமான அளவாகும்; ச்ருதி (சதபதபிராஹ்மணம்):—"தனக்கு எந்த அன்னம் தகுதியாய்ப் பொருந்தி யிருக்கிறதோ அது காப்பாற்

றுகின்றது; அது தீமை செய்வதில்லை. அத்னினும் அதிகம் தீமை செய்யும், அதனினும் குறைவு காப்பாற்ருது." அல்லாது, யோக சாஸ்திரத்தின் பிரகாரம் அரை வயிறு நிறைவதற்கு அதிகமாக ஆஹாரம் தின்னக்கூடாது; கால் வயிறு நீர் குடிக்கவேண்டும் மிகுந்த கால் வயிறு காற்றின் ஓட்டத்திற்குக் காலியாய் விடவேண்டும்].

[ஆஹாரம் சாப்பிடாம லிருக்கக்கூடாது என்று முதலாய்ச் சொல்லப்பட்டது சக்தியில்லாதவனைக் குறித்துச் சொல்லியதாகும். சக்தியுள்ளவன் தூக்கம் ஆஹாரம் முதலியவைகளைவிட்டுக் கண்ணை மூடிக்கொண்டு தியானம் செய்து ஸித்தியடையலாமென்று நாரதீயத்திற் சொல்லப்பட்டிருக்கிறது].

[யோகி சாப்பாடு முதலிய விஷயங்களில் மிதமாயிருக்கவேண்டும்; 'அதிஸர்வத்ரவர்ஜயேத்'—அதிகமாய்ச் செய்தல் எதனிலுமாகாது; முரட்டுப் பிடிவாதமாய்ச் சாப்பாடு முதலியவற்றை மறுப்பதுங் கூடாது].

ஆயின் யோகம் எப்படி ஸாதிக்கலாம்? மறுமொழி சொல்லுகிருர்:

யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு ।
யுக்தஸ்வப்னாவபோதஸ்ய யோகோ பவதி து:கஹா ॥

௰எ. தகுந்த ஆஹாரமும் ஸஞ்சாரமுமுள்ளவனாய், கர்மங்களில் தகுந்த வியாபாரமுள்ளவனாய், தகுந்த உறக்கமும் விழிப்புமுள்ளவனாய் இருப்பவனுக்கு துக்கங்களைப் போக்கும் யோகம் கைகூடுகின்றது.

['துக்கங்கள்:' ஸம்ஸார துக்கங்கள். சாப்பாட்டையும் ஆட்ட பாட்டங்களையும் (நடத்தல் முதலிய கார்யங்களையும்) நியமத்தின் படி நடத்திக்கொண்டு, சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கிறபடி விழித்திருக்கவேண்டிய காலத்தில் விழித்துத் தூங்கவேண்டிய காலத்தில் தூங்குகிறவனுக்கு யோகமானது ஸம்ஸார துக்கங்களைப் போக்குகின்றது].

[' தகுந்த (யுக்த): ' உபாயத்தோடு கூடிய. எம்மட்டிருந்தால் சிரமம் முதலியன இல்லாதிருக்குமோ அம்மட்டு ஆஹாரம் முதலியன கொள்பவனுக்கு யோகம் ஸம்ஸார துக்கங்களை யகற்றும்].

['கர்மங்களில் தகுந்த வியாபாரமுள்ளவன் : ' எந்தெந்தக் காரியத்தில் எவ்வளவு எவ்வப்போழ்து பிரவேசிக்கலாமோ எவ்வளவு பிரயாசைப்படலாமோ அவ்வளவுமாத்திரம் நியாயமாகச் செய்பவன்].

அவன் எப்பொழுது 'யுக்தன்' (மனம் ஒரு நிலைப்பட்டவன்) ஆகின்றான்?—பதில் சொல்லுகிறார்:

யதா விநியதம் சித்தமாத்மந்யேவாவதிஷ்டதே ।
நிஸ்ப்ருஹஸ்ஸர்வகாமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா ॥

௧௮. எப்பொழுது சித்தம் (மனம்) நியமிக்கப்பட்டதாய் ஆத்மாவினிடத்தே நிற்கின்றதோ, அப்பொழுது எல்லாவிருப்பங்களினின்றும் திரும்பின ஆசை யுள்ளவனாய் (எதன் மீதும் விருப்ப மில்லாதவனாய்) யுக்தன் எனப் படுகின்றான்.

['சித்தம் : ' நினைக்கும் தன்மையுள்ள தத்துவம். 'நியமிக்கப்பட்டது : ' ஏகாக்ரத்துவம் அடைவிக்கப்பட்டது, ஒரு முனையில் நிற்கத் தகுந்ததாய்ச் செய்யப்பட்டது, அஃதாவது, வெளி விஷயங்களை விட்டது. 'யுக்தன் : ' ஸமாதியை அடைந்தவன். 'எல்லா விருப்பங்கள் : ' கண்ணுக்குப் புலப்படும் விஷயங்களின்மீதும் புலப்படாதவைகளின் மீதும் ஆசை].

['யுக்தன் : ' யோகத்திற்குத் தகுந்தவன்].

['ஆத்மாவினிடத்தே : ' பகவானிடத்தே].

யோகியின் நிலையான மனத்திற்கு உவமை காட்டுகிறார்:

யதா தீபோ நிவாதஸ்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா ।
யோகிநோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோகமாத்மந: ॥

௧௯. 'காற்றில்லாத இடத்திலுள்ள தீபம் எப்படி யிருக்குமோ,'— இது யோகம் செய்துகொண்டு மனத்தை நியமித்து வைத்துக்கொண்டிருக்கிற யோகியின் ஆத்மாவுக்கு உவமையாக நினைக்கப்படுகிறது.

['ஆத்மா:' சித்தம் (மனம்). இது சரியான உவமையென்று யோகசாஸ்திர மறிந்தவர்கள், நினைக்கும் தத்துவமாகிய சித்தத்தின் வழி வகைகளை யறிந்தவர்கள், சொல்லுகிறார்கள்].

['ஆத்மா:' ஆத்மஸ்வரூபம். காற்றில்லாத இடத்தில் இருப்பதனால் அசைவின்றிப் பிரகாசத்தோடு கூடியதாயிருக்கும் தீபத்தைப்போல, மற்ற மனோவியாபாரங்களெல்லாம் ஒழிவதனால் யோகியினுடைய ஆத்மா அசையாததாய் ஞானமென்னும் பிரகாசமுள்ளதாயிருக்கும்].

[பகவானைக் குறித்து யோகம் செய்கிற யோகிக்கு அஃது உவமையாகும்].

𑌯𑌤𑍍𑌰𑍋𑌪𑌰𑌮𑌤𑍇 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌂 𑌯𑍋𑌗𑌸𑍇𑌵𑌯𑌾 ।
𑌯𑌤𑍍𑌰𑌚𑍈𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌤𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 ॥

𑌸𑍁𑌖𑌮𑌾𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌕𑌂 𑌯𑌤𑍍𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌮𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 ।
𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌯𑌤𑍍𑌰 𑌨 𑌚𑍈𑌵𑌾𑌯𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌶𑍍𑌚𑌲𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 ॥

𑌯𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌚𑌾𑌪𑌰𑌂 𑌲𑌾𑌭𑌂 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 𑌨𑌾𑌧𑌿𑌕𑌂 𑌤𑌤𑌃 ।
𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌨 𑌦𑍁𑌃𑌖𑍇𑌨 𑌗𑍁𑌰𑍁𑌣𑌾𑌪𑌿 𑌵𑌿𑌚𑌾𑌲𑍍𑌯𑌤𑍇 ॥

𑌤𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌦𑍁𑌃𑌖𑌸𑌂𑌯𑍋𑌗𑌵𑌿𑌯𑍋𑌗𑌂 𑌯𑍋𑌗𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌮𑍍 ।
𑌸 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍇𑌨 𑌯𑍋𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑍋 𑌯𑍋𑌗𑍋𑌽𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌣𑍍𑌣𑌚𑍇𑌤𑌸𑌾 ॥

௨௰-௩. யோகத்தை ஆசரிப்பதனால், கட்டுப்படுத்தப்பட்ட சித்தம் (மனம்) எதனிடத்து சாந்தியை அடையுமோ, எதனிடத்து மனத்தினால் ஆத்மாவைப் பார்ப்ப

வனாய் ஆதமா வினிடத்தே ஸந்தோஷிக்கிறானோ, எந்த இந்திரியங்களைக் கடந்ததும் புத்தியினால் கிரகிக்கப்படுவதும் மிகுதியு (அதிகமு) மான ஸுகமோ, அதனை எதனிடத்து அநுபவிக்கிறானோ, எதனில் இருக்கிற இவன் (யோகி) தத்துவத்தினின்று அசையானோ, எதனையடைந்து வேறொரு லாபத்தை அதனைவிட அதிகமானதாக நினையானோ, எதனிலிருப்பவன் பெரிய துக்கத்தினாலும் அசைக்கப்படானோ;—(யோகமென்பது அதுவே) துக்கசம்பந்தப்பற்றறுத்தலே (துக்கஸம்பர்க்க வியோகமே) யோக மெனத் தெரிந்து கொள்ளத்தக்கது. அந்தயோகத்தை உற்சாக மற்ற மனமில்லாதவனாய் நிச்சயத்தோடு ஆசரிக்கவேண்டியது.

['எதனிடத்து மனத்தினால் ஆத்மாவைப்பார்ப்பவனாய்:' எப்பொழுது ஸமாதியினாற் பரிசுத்தமான அந்தঃகரணத்தினால் எங்கும் சோதிமயமாய் விளங்குகிற பரமசைதன்யத்தைத்தெரிந்துகொண்டு. 'மிகுதியுமான ஸுகம்:' அநந்தமாயிருக்கிற, முடிவில்லாததாயிருக்கிற ஸுகம். 'பெரியதுக்கம்:' கத்திமுதலிய ஆயுதங்களினால் உண்டாக்கப்படுவது. 'யோகம்:' சேர்க்கை, கூடுதல்; 'வியோகம்:' பிரிதல்; துக்க ஸம்பர்க்க வியோகமே யோக மாகும், துக்க சம்பந்தம் இல்லாமற்போவதே யோகம். 'உற்சாகமற்ற மனமில்லாதவனாய்:' உற்சாகத்தோடு. மனத்தில் உற்சாகமும் நிச்சயமும் யோகத்திற்கு அவசியமான சாதனங்கள்].

['எதனிடத்து சாந்தியைஅடையுமோ:' எந்தயோகத்தில் மிகுதியான சுகம் உண்டாகின்றதென்று பிரியம்வைக்கிறானோ. 'தத்துவத்தினின்று அசையானோ:' யோகத்தினாலுண்டான அதிசயமான சுகத்திலிருந்து அசையானோ. 'எதனையடைந்து வேறொருலாபத்தை அடையானோ:' எந்தயோகத்தையடைந்து, அதனைச்செய்யாதிருக்கும்பொழுதும், அந்த்யோகத்தையே விரும்புகிறவனாய் வேறொருலாபத்தையும் விரும்பானோ. 'பெரியதுக்கத்தினால் ...:' யோகத்திலிருக்கும்பொழுதும்யோகஞ்செய்யாதிருக்கும்பொழுதுங்கூட

புத்திரவியோகம் (மக்கள் இறத்தல்) முதலிய பெரியதுக்கங்களினாலும் அசைக்கப்படான். 'துக்கசம்பந்தப்பற்றறுத்தல்...:' துக்கசம்பந்தத்திற்கு விரோதமான ஸ்வரூபமுள்ள அதனையே யோகம் என்னும் பதத்தின் அர்த்தமாகத் தெரிந்து கொள்ளவேண்டும். 'உற்சாகமற்ற... :' ஆரம்பதசையில் யோகம் இப்படிப்பட்டதென்று நிச்சயித்துக் கொண்டு ஸந்தோஷம் நிறைந்தமனமுள்ளவனாய் யோகஞ்செய்ய வேண்டும்].

['எதனிடத்து மனத்தினால் ஆத்மாவைப்பார்ப்பவனாய்:' மனத்தினால் தேகத்தில் பகவானைப்பார்ப்பவனாய். 'தத்துவத்தினின்று:' பகவானுடைய ரூபத்திலிருந்து. துக்கஸம்யோகம் எதனால்விடுமோ அது துக்க ஸம்யோக வியோகம். பிறவித்துன்பத்தை மாத்திரமேயல்லாது துக்கமான பிறவியையே போக்குமென்று 'ஸம்யோக' சப்தம் தெரிவிக்கின்றது. 'நிச்சயத்தோடு:' ஸம்பத்தை விரும்பினவன் தப்பாமல் ஆசரிக்கவேண்டியது].

𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌪𑍍𑌰𑌭𑌵𑌾𑌨𑍍𑌕𑌾𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑌶𑍇𑌷𑌤𑌃 ।
𑌮𑌨𑌸𑍈𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌵𑌿𑌨𑌿𑌯𑌮𑍍𑌯 𑌸𑌮𑌨𑍍𑌤𑌤𑌃 ॥
𑌶𑌨𑍈𑌃 𑌶𑌨𑍈𑌰𑍁𑌪𑌰𑌮𑍇𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌧𑍃𑌤𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌯𑌾 ।
𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌂 𑌮𑌨𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌪𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 ॥

௨௪-௫. ஸங்கல்பத்தினாலுண்டான எல்லாக் காமங்களையும் கொஞ்சங்கூட பாக்கியில்லாமல் விட்டுவிட்டு, மனத்தினாலேயே இந்திரியத் தொகுதியை எப்புறத்தும் அடக்கி, உறுதியான நிலையில் வைக்கப்பட்ட மனத்தினால் மெல்ல மெல்ல சாந்தியை யடையவேண்டும்; மனத்தை ஆத்மாவினிடத்து நிறுத்தி ஒன்றையும் நினைக்கக்கூடாது.

['பாக்கியில்லாமல்:' சிறிதும் பற்றில்லாமல். 'மனத்தினால்:' விவேகத்தோடுகூடிய மனத்தினால். 'உறுதியான நிலையில் வைக்கப்பட்ட:' தைரியத்தோடுகூடிய. 'ஆத்மாவினிடத்து நிறுத்தி:' எல்லாம் ஆத்மாவே; அதைத்தவிர வேறொன்றில்லையென்னும் நினைவு

கொண்ட மனமுள்ளவனாகி. இந்த மனவுறுதியே யோகத்தின் பெரிய ரகஸியம்].

[‘எல்லாக் காமங்களையும்:’ காமங்கள் ஸ்பரிசத்தினாலுண்டாவனவென்றும் ஸங்கல்பத்தினா லுண்டாவன வென்றும் இருவகைப்படும். ஸ்பரிசத்தினாலுண்டாவன சீதோஷ்ணாதிகள். ஸங்கல்பத்தினாலுண்டாவன புத்திரன்க்ஷேத்திரம் (இடம்) முதலியவைகளின் மீது பற்று. ஸங்கல்பத்தினா லுண்டாவனவற்றை அவற்றினுடன் தனக்குச் சம்பந்தமில்லையென்று மனத்தினால் விடவேண்டியது. ஸ்பரிசத்தினாலுண்டாவனவற்றினின்று தப்பித்துக்கொள்ள முடியாது; அவை நேர்ந்தபொழுது அவற்றினாலுண்டாகத்தக்க ஸந்தோஷத்தையும் பயத்தையும்விடவேண்டியது. இவ்வாறு எல்லா விஷயங்களிலிருந்தும் இந்திரியங்களையெல்லாம் திருப்பி யடக்கவேண்டியது].

[‘எல்லாக் காமங்களையும்:’ எல்லா விஷயங்களையும் பற்றிய காமங்களை: ‘கொஞ்சங்கூட பாக்கியில்லாமல்:’ ஒரு விஷய சம்பந்தமான காமத்தையும் கொஞ்சங்கூட ஒருபொழுதாவது கொண்டாடக்கூடாது. ‘மனத்தினாலேயே:’ என்றதனால், வேறெதனாலும் இது சாத்தியமாகாது என்பது கருத்து. புத்தியானது மனத்தை யடக்குவதற்கும் ஆத்மாவினிடத்து ரமிப்பதற்கும் ஸாதனமாகும்].

𑌯𑌤𑍋 𑌯𑌤𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌰𑌤𑌿 𑌮𑌨𑌶𑍍𑌚𑌞𑍍𑌚𑌲𑌮𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑍍 ।
𑌤𑌤𑌸𑍍𑌤𑌤𑍋 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯𑍈𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵 𑌵𑌶𑌂 𑌨𑌯𑍇𑌤𑍍 ॥

உ௬. சஞ்சலமானதும் (ஆதலால்) ஸ்திரமில்லாததுமான மனம் எந்தெந்தவிஷயத்தின் நிமித்தம் வெளிப்புறப்படுகின்றதோ, அதனதனிடத்திருந்து இதை (மனத்தை)த் திருப்பி ஆத்மாவுக்கே வசமாக்கவேண்டும்.

[மனம் நிலையற்று ஓடுவதற்குக் காரணம் சப்தம் முதலிய விஷயங்களே. இவ்வாறு இந்திரிய விஷயங்களினால் இழுபட்டு அலைவது மனத்திற்குரிய இயற்கையான தன்மையாம். இந்திரிய விஷயங்களின் உண்மையான தன்மையை ஆராய்ந்து பார்த்து அவை

பிரமையினுலுண்டாயினவென்றறிந்து உலகத்து விஷயங்களினிடத்தெல்லாம் வைராக்கியத்தைப் பாராட்டுவதனுல் மனத்தை இந்திரிய விஷயங்களினின்று திருப்பி ஆத்மாவின்வசம் ஆக்கலாம். இப்படிப் பயின்று வந்தால் மனம் ஆத்மாவினிடத்துச் சாந்தியடையும்].

[ஆத்மாவினிடத்து அதிகமான ஸுகமிருப்பதாய் எண்ணுவதனுல் மனத்தை வசமாக்கவேண்டும்].

ப்ரஶாந்தமநஸம் ஹ்யேநம் யோகிநம் ஸுகமுத்தமம் ||
உபைதி ஶாந்தரஜஸம் ப்ரஹ்மபூதமகல்மஷம் ||

உஎ. சாந்தியடைந்த மனமுள்ளவனுய், ரஜோகுணத்தையடக்கிக் கல்மஷமில்லாமல் விளங்கி பிரஹ்மமேதானுய் நிற்கின்ற யோகிக்குப் பெரிய ஸுகம் நிச்சயமாய்க் கிடைக்கும்.

['ரஜோகுணத்தை யடக்கி:' வருத்தத்திற்குக் காரணமான விருப்பம் (மோஹம்) முதலியன இல்லாதவனுய். 'பிரஹ்மமேதானுய் நிற்கின்றயோகி:' ஜீவன்முக்தன், உயிர்த்திருக்கும்பொழுதே முக்தியடைந்தவன், எல்லாம் பிரஹ்மமே யென்னும் நிச்சயமுள்ளவன். 'கல்மஷமில்லாமல்:' தர்மம் (புண்ணியம்) அதர்மம் முதலியன இல்லாமல்].

['சாந்தி யடைந்த மனமுள்ளவன்:' ஆத்மாவினிடத்து அசையாமல் மனத்தை வைத்தவன். இதனுல் ரஜோகுண மற்றுப்போகின்றது. 'பிரஹ்மமேதானுய்:' தன் உண்மையான ஸ்வரூபத்தோடு இருப்பவன். 'பெரியஸுகம்:' ஆத்மாநுபவமெனும் உத்தம ஸுகம்].

யுஞ்ஜந்நேவம் ஸதாத்மாநம் யோகீ விகதகல்மஷ: ||
ஸுகேந ப்ரஹ்ம ஸம்ஸ்பர்ஶ மத்யந்தம் ஸுகமஶ்நுதே ||

உஅ. இவ்வாறு எப்பொழுதும் ஆத்மாவைக்குறித்து யோகம் செய்துகொண்டு, பாபங்களைப் போக்கிக்கொண்ட

யோகி பிரஹ்ம ஸம்பந்தமாகிய பெரிய ஸுகத்தை ஆயாஸ மின்றி அடைகிறான்.

['எப்பொழுதும்:' யோகத்திற்கு நேரும் இடையூறுகளினால் தடைப்படாமல். 'பெரிய(அத்யந்தம்):' முடிவில்லாத, நாசமில்லாத].

['பாபங்கள்:' பழைய பாபங்கள். 'பிரஹ்ம ஸம்பந்தமான:' பிரஹ்மாநுபவரூபமான].

[௨௭-ஆவது சுலோகத்திற் சொல்லியதே இந்தச்சுலோகத்தில் விவரித்துச் சொல்லப்பட்டது].

இனி ஸம்ஸாரத்தைப் போக்குகிற யோகத்தின், அஃதாவது, பிரஹ்மமேதானென்று உணர்வதன், பயன் விவகரிக்கப்படுகின்றது:

ஸர்வபூதஸ்தமாத்மாநம் ஸர்வபூதாநி சாத்மநி ।
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சந: ॥

௨௯. யோகத்துடன் கூடிய அந்தஃகரணமுள்ளவனாய் எல்லாவற்றையும் ஸமமாய்ப்பார்க்கிறவன் ஆத்மா எல்லா பூதங்களினிடத்து மிருப்பதாயும் எல்லாபூதங்களும் ஆத்மாவினிடத்து இருப்பதாயும் பார்க்கிறான்.

[பிரஹ்மமொன்றிருக்கிறது, அதுயோகத்தினால் கிடைக்கும் பெரும்பயன், ஸம்ஸாரத்தைப் போக்குவதற்குக்காரண மானது என்னும் ஞானம் இந்தச்சுலோகத்தினால் உபதேசிக்கப்படுகிறது. யோகியானவன் தன்னுடைய ஆத்மாவை எல்லாபூதங்களிலுமிருப் பவனாகவும், நான்முகப் பிரஹ்மாமுதல் புல்லீறாக உள்ள எல்லா பூதங்களும் ஆத்மாவினிடத்து ஒன்றாகவே இருப்பனவாகவும், பார்க்கிறான். 'எல்லாவற்றையும் ஸமமாய்ப்பார்க்கிறவன்:' நான் முகப்பிரஹ்மாமுதல் செடிமுதலான ஸ்தாவரங்கள் இறுதியாக ஏற்றக்குறைவா யிருக்கும் எல்லா பூதங்களினிடத்தும் விகார மில்லாத பிரஹ்மமும் தன்னுடைய ஆத்மாவு மொன்றாயிருப் பதைக்காண்கிறான்].

[‘இதுமுதல் நான்கு சுலோகங்களில், யோகத்தின் நான்கு பரிபக்குவ தசைகள் சொல்லப்படுகின்றன. தன்னுடைய ஆத்மாவும் மற்ற எல்லா பூதங்களின் ஆத்மாக்களும் பிரகிருதி சம்பந்த மில்லாத ஸ்வரூபத்தை அநுசரித்து ஞான மொன்றே உருவமாயுள்ளவைகள்; ஆதலின் அவை ஸமானமானவைகள். வித்தியாஸம் பிரகிருதியினிடத்திருக்கிறது. யோகத்தோடுகூடிய மனமுள்ளவன் எல்லா ஆத்மாக்களினிடத்தும் அவை ஞானமென்னும் ஒரே உருவமுள்ளன வென்னும் ஸம்புத்தி யுள்ளவனாய்த் தன்னுடைய ஆத்மா எல்லா பூதங்களிலு மிருப்பதாயும் எல்லா பூதங்களும் தன் ஆத்மாவினிடத்து இருப்பவைகளாகவும் பார்க்கிறான். தன் ஆத்மாவை எல்லா பூதங்களோடு ஸம்மான உருவமுள்ளதாகவும் தன்னுடைய ஆத்மாவோடு ஸமமான உருவமுள்ளவைகளாய் எல்லா பூதங்களையும் பார்க்கிறான் என்பது அர்த்தம். ஓர் ஆத்ம வஸ்துவைப் பார்த்தால், ஆத்ம வஸ்துக்களெல்லாம் அதைப்போலிருப்பதனால், ஆத்ம வஸ்துக்களெல்லாவற்றையும் பார்த்ததுபோலாயிற்று].

[இந்தச் சுலோகத்தினால் (தியேயம்) தியானம் செய்யவேண்டிய விஷயம் சொல்லப்படுகின்றது. ‘ஆத்மா எல்லா பூதங்களினிடத்தும்:’ பரமேசுவரரை எல்லா பூதங்களினிடத்தும் இருப்பவராயும். ‘எல்லா பூதங்களும் ஆத்மாவினிடத்து:’ பரமேசுவரரிடத்து ஸர்வ பூதங்களும். அந்தப் பரமேசுவரர் ஐசுவரியம் முதலான லக்ஷணங்களுடன் பிரஹ்மா முதல் புல் ஈறாக உள்ள எல்லாவற்றிலும் அமர்ந்திருப்பதாய்க் காண்கின்றான்].

[இங்கு ‘ஆத்மா’ என்னும் பதம் அக்ஷரன், அல்லது, கூடஸ்தன் என்னப்படும் பரமாத்மாவைக் குறிக்கின்றது. ‘ஆத்மா’ என்னும் பதமே சில இடங்களில் ‘தான்’ என்பதையும், மற்றஇடங்களில் ‘ஜீவன்’ என்பதையும், வேறு சில இடங்களில் ‘பரமாத்மா’ வையும் குறிக்கின்றது. இங்கு அதன் அர்த்தம் பின்வரும் சுலோகத்தினால் நிர்ணயிக்கப்படுகின்றது].

𑌯𑍋 𑌮𑌾𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌚 𑌮𑌯𑌿 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌨 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌸 𑌚 𑌮𑍇 𑌨 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿 ॥

௩௰. எவன் என்னை எங்கும் பார்க்கிறானோ, என்னிடத்து எல்லாவற்றையும் பார்க்கிறானோ, அவனுக்கு நான் காணமற்போகேன், அவனும் எனக்குக்காணமற்போகான்.

[முன் சுலோகத்திற் சொல்லியபடி எங்கும் ஆத்மா ஒன்றனையே பார்ப்பதன் பயன் இந்தச் சுலோகத்திற் கூறப்படுகிறது. எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருக்கும் வாஸுதேவனாகிய என்னை எல்லா பூதங்களிலும், எல்லா பூதங்களையும் ஸர்வாத்மாவான என்னிடத்தும் பார்க்கின்றவனுக்கு நான் அகப்படாம லிருக்கமாட்டேன்; அவனை விட்டு அகலேன், அவனும் என்னைவிட்டு அகலான். அவனுக்கும் எனக்கும் ஆத்மா ஒன்றே யாகும். தன் ஆத்மா தனக்குப் பிரியமானவனே யல்லனோ]?

[முன் சுலோகத்திற் சொல்லியதைவிட பரிபக்குவமான தசையிலிருப்பவன் புண்ணிய பாபங்களைவிட்டு உண்மையான ஸ்வரூபத்தோடிருக்கும் ஆத்மவஸ்து வெல்லாம் என்னோடு (பகவானோடு) ஸமானமென்று பார்க்கிறான்].

[பயன் சொல்லப்படுகிறது. அவனுக்கு நான் எப்பொழுதும் யோகக்ஷேமத்தை வகித்தவனாவேன். அவன் எனக்கு எப்பொழுதும் பக்தனாவான். ஆளுந்தன்மையிருந்தும் இவனை ரக்ஷியாவிடின் இவன் அநாதனே; இப்படிப்பட்ட பக்தன் இருந்தும் பக்தனில்லாதவனே].

ஆத்மா எங்கும் ஒன்றேயாகி இருத்தலைப்பார்ப்பவன் நானே ஆதலின், நீ இந்த ஒற்றுமையை உணர்ந்து அநுபவிக்க முயல வேண்டுமென்று முன் சுலோகத்திற் சொல்லியதையே திருப்பிச் சொல்லி, அந்த ஞானத்தின் பயன் மோக்ஷமேயெனக்கூறுகிறார்:

ஸர்வபூதஸ்திதம் யோ மாம் பஜத்யேகத்வமாஸ்தித: ।
ஸர்வதா வர்த்தமானோऽபி ஸ யோகீ மயி வர்த்ததே ॥

௩௧. எவன் ஏகத்துவத்தை யடைந்து எல்லா பூதங்களிலும் என்னை ஸேவிக்கின்றானோ, அந்த யோகி எவ்விதமாயிருப்பவனாயினும் என்னிடத்தே இருக்கின்றான்.

['ஏகத்துவத்தை யடைந்து :' எல்லாபூதங்களிலும் ஆத்மா ஒன்ருகவே இருக்கிறதென்று அறிந்து. அவன் எப்படி இருந்தாலும் பரமபதமாயும் மகாவிஷ்ணுவின் இருப்பிடமாயுமுள்ள என்னிடத்து இருக்கின்ருன். அவன் நித்திய முக்தனே, எப்பொழுதும் மோக்ஷ மடைந்தவனே, அவன் மோக்ஷமடைவதற்கு எதுவும் தடையில்லை].

['ஏகத்துவத்தை யடைந்து :' ஸங்கோசமில்லாத ஞானமே உருவமாயுள்ளவனாதலின் பிரகிருதிக்குரிய வித்தியாஸங்களை விட்டவனாய். இப்படிப்பட்டவனாகி, எல்லாபூதங்களிலு மிருக்குமென்னை யோகதசையில் திடமாய் எவன் புஜிப்பனோ, அவன் யோகமில்லாத தசையில் தன் ஆத்மாவையும் எல்லா பூதங்களையும் பார்ப்பவனாயி னும் என்னிடத்தே இருப்பவனுவான் ; அஃதாவது, அவன் என் னையே பார்க்கிருன். தன் ஆத்மாவி னிடத்தும் எல்லா பூதங்களி னிடத்தும் எப்பொழுதும் என்னைப் போன்ற உருவத்தையே பார்க் கிருன். இது முன்சுலோகத்திற் சொல்லியதைவிட பரிபக்குவமான தசை].

[முன் சுலோகத்திற் சொல்லப்பட்டதே மறுபடி தெளிவாய்ச் சொல்லப்படுகிறது. 'ஏகத்துவத்தையடைந்து :' எங்கும் ஈசுவரர் ஒருவரே என்றிருப்பவன் எவ்விதமா யிருக்கினும் என்னிடத்தே இருப்பவனுவான். அபரோக்ஷ ஞானமுள்ளவனுக்கு ஞானப் பயன் தப்பாது என்பது அர்த்தம். அப்படியாயினும் அதிகமாய் அதர்மம் செய்யான்].

['எவ்விதமாயிருப்பவனாயினும் :' தனது வர்ணாசிரம தருமங் களையாசரிக்கும் கிருகஸ்தனாயிருக்கினும் தனிமையான காட்டில் துறவியாயிருக்கினும்].

ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பச்யதி யோऽர்ஜுந।
ஸுகம் வா யதி வா து:கம் ஸ யோகீ பரமோ மத:॥

௩௨. ஓ அர்ஜுனா! தன்னைப் போன்றதாகவே நினைத்து எங்கும், ஸுகமேயாயினும் துக்கமேயாயினும்

ஸமமாக் நினைப்பவனே பெரிய யோகியென மதிக்கப்படு
வான்.

[எனக்கு ஸுகம் எப்படி அநுகூலமோ (பிரியமோ) அப்படியே
எல்லாப் பிராணிகளுக்கும் ஸுகம் அநுகூலமாகும், துக்கம் பிரதிகூ
லம் (பிரயமில்லாதது) ஆகும் என்றறிந்து எவர்க்கும் பிரதிகூலம்
செய்யாமல் ஹிம்ஸை செய்யாதிருக்கும் யோகியானவன், யோகி
களுளெல்லாம் உத்தமனாவான்].

[ஆத்மாக்களெல்லாரும் ஞானமே ஸ்வரூபமாயுள்ளவர்களாத
லின், மக்கட் பேறு முதலிய ஸுகமும் மக்களின் மரணம் முதலிய
துக்கமும் ஆத்மாக்களுக்கு ஸம்பந்தப்படாதவையென எவன் நினை
வனோ, அஃதாவது, மற்றவருக்கு உண்டாகும் மக்கட்பேறு மரணம்
முதலியவற்றைப்போல தன்னுடைய மக்கட் பேறு முதலியவைக
ளையும் ஸமமாக நினைக்கிற யோகி சரமாவதியையடைந்தவன்].

[உவமையை மற்றொருவிதமாய் இந்தச் சுலோகம் எடுத்துச்
சொல்லுகின்றது].

இதுகாறும் விவரிக்கப்பட்ட, ஸமதரிசன லக்ஷணமமைந்த,
யோக நிலையை அடைவது கஷ்டமென்று கண்டு அதனை ஸாதிக்கும்
வகை யாதென்று அர்ஜுனன் வினவுகின்றான்:

அர்ஜுனன் சொல்லியது:

யோயம் யோகஸ்த்வயா ப்ரோக்தஃ ஸாம்யேந மதுஸூதந ।
ஏதஸ்யாஹம் ந பஶ்யாமி சஞ்சலத்வாத் ஸ்திதிம் ஸ்திராம் ॥

௩௩. ஓ மதுஸூதனா (ஸ்ரீகிருஷ்ணா)! நீர் உபதே
சித்த ஸமதரிசன லக்ஷணமமைந்த இந்த யோகத்தின் ஸ்தி
ரமான நிலையை, மனம் சஞ்சலப்படுவதனால், நான் காணா
திருக்கிறேன்.

[தேவதைகள் மனிதர்கள் என்னும் பேதமும், ஜீவன் ஈசுவரர்
என்னும் பேதமும் வெகு காலமாய் அநுபவத்திலிருக்கிறபடியால்,
ஞானமொன்றே ஸ்வரூபமாயுள்ளவர்களாதலின் ஜீவர்களெல்லா

ரும் ஒருவருக்கொருவர் ஸம்மானவர்களென்றும், கர்மத்தினுற் கட்டுப்படாதிருத்தலின் ஈச்வரருக்கு ஒப்பானவர்களென்றும் நினைக்க வேண்டியது, இதுவே ஸமதரிசனயோகமென்று சொன்னீர். இந்த யோகம் எனக்குப் பிடிபடாதென்று தோற்றுகின்றது].

இது பிரஸித்தமான விஷயம்:

சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம்।
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்॥

நு-ச. ஓ கிருஷ்ண! மனம் சஞ்சலமுற்றது, கலக்கம் விளைவிப்பது, பிரபலமானது, திடமானது அன்றோ? வாயுவைப்போல அதனை நிக்கிரகிப்பது மிகவும் அஸாத்திய மானதென்று நான் நினைக்கிறேன்.

['கிருஷ்ண:' 'கிருஷ்'—சுரண்டு-என்னும் பகுதியடியாய்ப் பிறந்த சொல்; பக்தஜனங்களுடைய பாபம்முதலாகிய தோஷங்களைச் சுரண்டியெறிவதனால் அவர் கிருஷ்ணர் என்னப்பட்டார். 'கலக்கம் விளைவிப்பது:' சரீரத்தையும் இந்திரியங்களையும் கலங்க அடித்துப் பரவசமாக்குந்தன்மையது. 'பிரபலமானது:' எவராலும் அடக்கி நியமிக்கமுடியாதது. 'திடமானது:' தந்துநாகம் அல்லது வாருணபாசம் என்னும் சுருமீனைப் போல வெட்டமுடியாதது. (தந்துநாகமென்பது நதிகள் மடுக்கள் முதலானவைகளில் நீளமாயிருக்கு மொருபிராணி; அதுமனிதருடைய காலிலும் பசுக்கள் முதலியவைகளின் காலிலும் சுற்றிக்கொள்ளும். அதனால் அந்தப்பிராணிகள் மூழ்கிப்போம்)].

[தனக்கு வழக்கப்பட்ட விஷயங்களிலுங்கூட நிலையில்லாதிருக்கும் மனத்தை, அப்படியல்லாத ஆத்மஸ்வரூபத்தினிடத்தில் நிறுத்துவது, எதிர்காற்றை விசிறிமுதலியவற்றால் நிறுத்துவது போல, மிகவும் இயலாத காரியமென்று நினைக்கிறேன். மனோநிக்கிரக (மனத்தை யடக்குவதற்கான) உபாயத்தைச் சொல்லவேண்டும்].

ஸ்ரீபகவான் சொல்லியது:

𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌮𑌨𑍋 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 𑌚𑌲𑌮𑍍 ।
𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌤𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑍇𑌣 𑌚 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇 ॥

௩௫. ஓ பெரும்புயங்களை யுடையோனே (அர்ஜுனா)! மனம் சஞ்சலமானது, (ஆத்மினிலேயே) அடக்கவொண்ணாதது, ஸந்தேகமில்லை. ஆயின், ஓ குந்தீபுத்திரா (அர்ஜுனா)! அப்பியாஸத்தினாலும் வைராக்கியத்தினாலும் அதனை அடக்கலாம்.

[‘அப்பியாஸம்:’ ஒரே விஷயத்தைப் பலதடவை மனத்தில் அடிக்கடி நினைத்தல், தியானித்தல். ‘வைராக்யம்:’ விஷயங்களினிடத்துள்ள தோஷங்களைத் தெரிந்துகொள்வதனால் உண்டாகும் நிராசை (ஆசையின்மை). இவையிரண்டினாலும் மனத்தின் விக்ஷேபத்தைத் தடுக்கலாம். விக்ஷேபமாவது வெளி யுலகத்து வியாபாரங்களில் மனம் செல்லுதல்].

[ஆத்மா குணஸ்வரூபமானதென்று அடிக்கடி நினைப்பதனால் அதனிடத்து உண்டாகும் விசேஷத்தினாலும், ஆத்மா அல்லாத மற்றவைகளினிடத்துள்ள தோஷங்களைத் தெரிந்து கொள்வதனாலுண்டாகும் ஆசையின்மையினாலும் ஒருவிதமாய் மனம் நிக்கிரகிக்கப்படும்].

[ஒருபொழுதும் மனம் ஸ்வயமாகவே (தானாகவே) நிக்ரகிக்கப்படாது].

𑌅𑌸𑌂𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌯𑍋𑌗𑍋 𑌦𑍁𑌷𑍍𑌪𑍍𑌰𑌾𑌪 𑌇𑌤𑌿 𑌮𑍇 𑌮𑌤𑌿𑌃 ।
𑌵𑌶𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌤𑍁 𑌯𑌤𑌤𑌾 𑌶𑌕𑍍𑌯𑍋𑌽𑌵𑌾𑌪𑍍𑌤𑍁𑌮𑍁𑌪𑌾𑌯𑌤𑌃 ॥

௩௬. நியமிக்கப்படாத அந்தஃகரணமுள்ளவன் யோகம் அடைவது இயலாது என்பது என்னுடைய தாற்பரியம். அந்தஃகரணத்தைத் தன்வயப்படுத்திக்கொண்டு பிரயத்னம் (விடாமுயற்சி) செய்கிறவன் (மேற்சொல்லிய) உபாயத்தினால் அதனை அடையலாம்.

['நியமிக்கப்படாத:' அப்பியாஸத்தினாலும் வைராக்கியத்தினாலும் ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளப்படாத].

['நியமிக்கப்படாத அந்தக்கரணமுள்ளவன்:' மனத்தை ஜயிக்காதவன். அந்தக்கரணத்தை யடக்கி ஸ்வாதீனப்படுத்திக் கொண்டவன் (உபாயத்தினால்) ஞானத்தோடுகூடிய கர்மத்தினால் யோகநிலையை யடைகிறான்].

யோகாப்பியாஸம் செய்ய முயல்வதனால், இம்மையிலும் மறுமையிலும் மேன்மை யடைவதற்குக் காரணமான கர்மங்களை யெல்லாம் ஒழித்துவிட்டான்; யோகஸித்தியின் பயனும் மோக்ஷஸாதனமுமான நல்ல ஞானமும் அவனுக்குக் கிடைக்கவில்லை. இப்படிப்பட்ட யோகியின் மனம் மரணகாலத்தில் யோகமார்க்கத்தினின்று தப்பி அலைகின்றது. இவ்வாறு ஆலோசித்து அப்படிப்பட்டவனுக்கு நற்கதி வாய்க்காதென்று கருதி அர்ஜுனன் சொல்லுகிறான்:—

அர்ஜுனன் சொல்லியது:

அயதிஃஶ்ரத்தயோபேதோ யோகாச்சலிதமாநஸ: ।
அப்ராப்ய யோகஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி ॥

௩எ. ஓ கிருஷ்ணா! பிரயத்னம் செய்யாதவனாய், சிரத்தை (நம்பிக்கை) யுள்ளவனாய், மனம் யோகத்தினின்று தப்பித் திரிகிறவனாய் இருப்பவன் யோக ஸித்தி யடையாமல் என்ன கதியடைவான்?

[யோகத்தின் உண்மையில் அவனுக்கு நம்பிக்கையிருக்கிறது, ஆனால் யோகாப்பியாஸத்தில் முயற்சி செய்வதில்லை; மரணத் தருவாயில் அவனுடைய மனம், ஞாபக சக்தி யிழந்து, யோக மார்க்கத்தை விட்டுத் தடுமாறுகின்றது. இப்படிப்பட்டவனுக்கு யோக ஸித்தியின் பயனாகிய உண்மையான ஞானம் கிடையாதன்றோ? மற்று அவனுடைய கதி யாது]?

[சிரத்தையுடன் யோகஞ்செய்ய ஆரம்பித்தவன் மிக்க பலமான அப்பியாஸமென்னும் முயற்சி செய்யாதவனாய், யோக ஸித்தியடை

யாமற்போகிறான்; அவனுடைய மனம் யோக மார்க்கத்தைவிட்டலை கின்றது. அவனுக்கு என்ன கதி வாய்க்கும்]?

கச்சிந்நோப⁴யவிப்⁴ரஷ்டஶ்சி²ந்நாப்⁴ரமிவ நஶ்யதி ।
அப்ரதிஷ்டோ² மஹாபா³ஹோ விமூடோ⁴ ப்³ரஹ்மண: பதி² ॥

௩௮. ஓ பருத்தபுயங்களையுடையோனே (கிருஷ்ண)! ஆதாரமில்லாதவனாய், பிரஹ்மத்தின் வழியிற் கலக்கமுற்ற வனாய், இருவகையிலுங் கெட்டுச் சிதறுண்ட மேகம்போல் நசிப்பானல்லனே?

['இருவகையிலும்:' கர்ம மார்க்கத்திலும் யோக மார்க்கத்தி லும். 'பிரஹ்மத்தின் வழியில்:' பிரஹ்மத்தை யடையக்கூடிய வழியில்].

['ஆதாரமில்லாதவன்:' பயன்களின் மீது அவனுக்கு விருப்ப மில்லாததனால் ஸ்வர்க்கம் முதலியவைகளுக்கு ஸாதனமான கர் மம் தன் பயனை அவனுக்குக் கொடுத்து ஆதாரமாகாமற் போயிற்று. அன்றியும், தான் ஆரம்பித்த பிரஹ்ம மார்க்கத்தைக் கைவிட்டலைபவனாயுமிருப்பதனால், இருவகையிலும் கெட்டவனாயி னான். 'சிதறுண்ட மேகம்போல்:' ஒரு பெரிய மேகப் படலத்தி னின்று சிதறின துண்டுமேகமானது மற்றொரு பெரும் படலத் தைச் சாராமலே நடுவில் நசிப்பதுபோல].

[கர்ம மார்க்கத்தை விட்டு யோக மார்க்கத்தைப் பற்றினான்; ஆனால் அந்த யோக மார்க்கத்தில் ஸித்தி பெறவில்லை. ஆதலின், கர்மத்தின் பயனாகிய ஸ்வர்க்காதி அநுபவம் அவனுக்கு இல்லாமற் போயிற்று. யோகத்தின் பயனாகிய மோக்ஷமும் இல்லாமற் போயிற்று].

ஏதந்மே ஸம்ஶயம் க்ருஷ்ண சே²த்தும³ர்ஹஸ்யஶேஷத: ।
த்வத³ந்ய: ஸம்ஶயஸ்யாஸ்ய சே²த்தா ந ஹ்யுபபத்³யதே ॥

௩௯. ஓ கிருஷ்ண! என்னுடைய இந்தச் சந்தேகத் தைப் பூர்த்தியாய்ப் போக்கத்தக்கவர் நீரே யாவீர். உம்

மைத் தவிர வேறெவரும் இந்தச் சந்தேகத்தைப் போக்கத் தக்கவர் இலர்.

['வேறெவரும்:' ரிஷியாயினும் தேவராயினும்].

['வேறெவரும்:' தாமாகவே நேரில் ஒரே தடவையில் பார்க்கின்றவரான உம்மைத் தவிர வேறெவரும்].

ஸ்ரீபகவான் சொல்லியது:

பார்த² நைவேஹ நாமுத்ர விநாஶஸ்தஸ்ய வித்³யதே ।
ந ஹி கல்யாணக்ருத்கஶ்சித் து³ர்க³திம் தாத க³ச்ச²தி ॥

௪௰. ஓ பார்த்தா (அர்ஜுனா)! அவனுக்கு இவ்வுலகத்தில் நாசம் இல்லை இல்லை, பரலோகத்திலும் இல்லை. ஓ மகனே (அர்ஜுனா)! நற்காரியம் செய்பவனெவனும் துர்க்கதியடையானல்லனே?

['நாசம்:' இந்தப் பிறப்பைவிடத் தாழ்ந்த பிறப்பு. 'மகனே:' ஸம்ஸ்கிருதத்தில் 'தாத' என்னுஞ் சொல் தந்தையைக் குறிக்கும்; தந்தையே மகன் வடிவமாய்ப் பரிணமிக்கின்றான் ஆதலின், மகனே தந்தையாவன்; ஆகவே இங்கு மகனைப் பார்த்து 'தாத' என்று அழைத்தார். சிஷியன், மகனல்லனாயினும், மகனைப்போன்றவனேயாதலின் 'தாத' எனப்படுவான்].

[சிரத்தையுடன் யோகத்தை ஆரம்பித்து அதனின்று தவறினவனுக்கு விநாசம் இல்லை. அஃதாவது, ஸ்வர்க்காதி போகங்களையநுபவிப்பதிலாவது பிரஹ்மாநுபவத்திலாவது தான் விரும்பியது கிடையாமற்போவதும் அதற்கு இடையூறு நேர்வதும் இல்லை].

ஆனால் அவன் கதி யாது?

ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாநுஷித்வா ஶாஶ்வதீ: ஸமா: ।
ஶுசீநாம் ஶ்ரீமதாம் கே³ஹே யோக³ப்⁴ரஷ்டோ(அ)பி⁴ஜாயதே ॥

௪௧. யோகத்தினின்று தவறினவன் புண்ணியஞ் செய்தவர்களின் உலகமெய்தி, அங்கு அநேக ஆண்டுகள்

இருந்து, ஸம்பத்துள்ளவர்களாயும் பரிசுத்தர்களாயுமிருக்கிறவர்களுடைய வீட்டிற் பிறக்கிறான்.

[ஸந்தர்ப்பத்தை யநுசரித்துப் பார்க்குமிடத்து இது தியான யோகத்தி லமர்ந்த ஸந்நியாஸியைப்பற்றிச் சொல்லியதாகும். 'புண்ணியஞ்செய்தவர்கள்:' அசுவமேதம்முதலியன செய்தவர்கள். அந்த உலகத்தில் அவன் அநுபவிக்க வேண்டிய ஸுகத்தை யநுபவித்த பிறகே ஸம்பத்தும் சுசியு முள்ளவர்களுடைய வீட்டிற் பிறக்கிறான். 'பரிசுத்தர்கள்:' சாஸ்திரத்தின் பிரகாரம் நடப்பவர்கள்].

[எப்படிப்பட்ட போகங்களை விரும்புவதனால் யோகத்தினின்று தவறுவானே அப்படிப்பட்ட போகங்களை யோகத்தின் மகிமையினாலேயே அநுபவித்து போகங்களின்மீது ஆசை ஒழிந்தவுடனே, யோகம் ஆரம்பிப்பதற்குத்தகுந்தவர்களுடைய வீட்டிற்பிறக்கிறான்].

['புண்ணியம் செய்தவர்களின் உலகம்:' ௫-ஆம் அத். ௨௩-ஆவது சுலோகத்தி னடியிலுள்ள குறிப்பைப்பார்க்க. அங்குக் குறிக்கப்பட்ட எட்டுவகை யுலகங்களுள் முதல் ஐந்தும் புண்ணியஞ் செய்தவர்களெய்தும் உலகங்களாம்; புண்ணியத்திற்குத் தக்கவாறு இவ்வைந்து உலகங்களு ளொன்று அமையும்].

அத²வா யோகி³நாமேவ குலே ப⁴வதி தீ⁴மதாம் ।
ஏதத்³தி⁴ து³ர்லப⁴தரம் லோகே ஜந்ம யதீ³த்³ருʼஶம் ॥

௪௨. அல்லாது, ஞானவான்களான யோகிகளின் வம்சத்திலேயே பிறக்கிறான். இப்படிப்பட்ட ஜன்மம் யாது (உளதோ) உலகத்தில் அது கிடைப்பது மிகவும் கஷ்டமானமன்றோ?

['அல்லாது:' ஸம்பத்துள்ளவர்களுடைய வீட்டிற் பிறவாவிடின் ஏழைகளான யோகிகளின் வம்சத்திற் பிறக்கிறான் என்றெடுத்துக்காட்டுகின்றது. மேற்சொல்லியவாறு ஸம்பத்துள்ளவர்களுடைய வீட்டிற் பிறப்பதைவிட, ஏழைகளான யோகிகளின் வம்சத்திற் பிறப்பது அரிதாம்; இப்படிப்பட்ட ஜன்மம் பெறுவது கஷ்டமாகும்].

[பரிபக்குவமான யோகமுள்ள[illegible]ம் அந்தமார்க்கத்தை விட்டுத் தவறுவானாயின் அவன் யோ[illegible]யவர்களாயும் தாமாகவே யோகத்தை யுபதேசிக்கத் த[illegible]ளாயு மிருக்கிறவர்களுடைய வம்சத்திற் பிறக்கிறான். (பிள்[illegible]லோகத்திற் சொல்லியவாறு) யோகத்திற்குத்தகுந்தவர்களின்[illegible]ற்பிறப்பதும் (இந்தச் சுலோகத்திற் சொல்லியவாறு) யோ[illegible]வர்களின் வம்சத்திற் பிறப்பதும் உலகத்திற் பிரகிருதி[illegible]ட்டப்போர்க்குக் கிடைப்பது கஷ்டம்].

தத்ர தம் புத்திஸம்யோகம் [illegible]தேஹிகம் ।
யததே ச ததோ பூய: ஸ[illegible]ஸித்தௌ குருநந்தந ॥

சங. அங்கேயே முந்[illegible]ரத்திற் சம்பாதித்த புத்தியை மறுபடி பெற்று, [illegible]குமாரா (கௌரவா, அர்ஜுனா)! அதனால் ஸித்[illegible]யமாய் மிகுந்தபிரயத்னம் செய்கிறான்.

[‘அங்கேயே:’ அந்த [illegible]த்தில், ‘அதனால்:’ அந்தப் பூர்வ ஸம்ஸ்காரத்தினால்].

[‘அங்கேயே:’ அந்த ஜன்[illegible] ‘அதனால்:’ அதன் பிறகு தூங்கி யெழுந்ததுபோல் மறுப[illegible]த்தியைக் குறித்து இடையூறுகளினால் தடைப்படாமற் பிர[illegible]செய்கிறான்]. [ஸ்லோ।

பூர்வாப்யாஸேந தேநைவ ஹ்ரியதே ஹ்யவசோபி ஸ: ।
ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய [illegible]ப்ரஹ்மாதிவர்ததே ॥

சச. அவனுக்கு இ[illegible]லாவிடினும் முந்திய அப்பியாஸத்தினாலேயே இழு[illegible]காண்டுபோகப்படுகிறான். யோகத்தைத்தெரிந்துகொ[illegible]ரும்புகிறவனுங்கூட சப்தப்பிரஹ்மத்தைக் கடந்து செல்கிறான்.

[யோகத்தில் தவறிப் போனவன் முந்திய ஜன்மத்திற் செய்த பலமான அப்பியாஸத்தினால் (முயற்சியினால், வழக்கத்தினால்) ஸித்தி

